| வ. எண் | பெயர் | திருப்பணிகள் | தொகை ரூபாய் |
|---|---|---|---|
| 33. | PL.P. சொக்கலிங்கம்<br>PL.SM. அழகப்பன் | வயிரவர் கோபுரம் | 2,00,000/- |
| 34. | கரு.அண.ராம. வசந்தா | சந்திரன் சூரியன் திருவாச்சி | 1,05,000/- |
| 35. | அ.பெரி.ராம. அண்ணாமலை | முன்மண்டபம் பெயிண்டிங் | 1,25,000/- |
| 36. | சுப.நா.சுப. குடும்பத்தார்கள் | யாக மண்டபம் பெயிண்டிங் | 1,25,000/- |
| 37. | கா. சோமசுந்தரம் மீனாட்சி | சுவாமி, அம்பாள், நடராஜர், நால்வர் எஸ்.எஸ். கதவு | 75,000/- |
| 38. | PL.A & PL.K. குடும்பத்தார்கள் | பஞ்சமூர்த்தி மண்டபம் பராமரிப்பு | 5,78,000/- |
| 39. | ம. திருப்பதி விசாலாட்சி | சகடை பராமரிப்பு | 75,000/- |
| 40. | ராம. வள்ளியப்பன் | ஆழ்துளை கிணறு மோட்டார் | 50,000/- |
| 41. | வலையபட்டி மகளிர் சங்கம் | பள்ளியறை வெள்ளி ஊஞ்சல் | |
| 42. | சுப.நா. சுப்பையா செட்டியார் | கோயில்மணி | |
| 43. | ந.ராம.மு. வீடு | சகடை திருப்பணி | 30,000/- |
| 44. | லெ.மா. தியாகராஜன் குடும்பத்தார் | சரஸ்வதி சந்நதி கல் திருப்பணி | 30,000/- |
| 45. | மதுவன் செட்டி வீடு | தெற்கு வாசல் நடு மண்டபம் பராமரிப்பு | |
| 46. | வடு.லெ.சுப்பு<br>வடு.லெ. ராமு | மருந்து சாத்துதல் | |
| 47. | முத்தப்பன் சிந்தாமணி | சங்கு அபிஷேக மர நாற்காலி | |
| 48. | ராம. அன்னபூரணி ஆச்சி | குடிநீர் பிளாண்ட் | |
| 49. | PL.A. குடும்பத்தார்<br>PL.M. முத்தையா<br>PL. தினேஷ் பழனியப்பன் | பிராமண போஜனம் | |

உ
சிவமயம்



**எஸ். நாகப்பன்**
செயலாளர்,
கும்பாபிஷேகக் கமிட்டி.

வலையபட்டி நகரில் வான் சிறக்க ஓர் வைபவமாக நடந்த மலையாண்டி சுவாமி கோயில் குடமுழுக்கும் நமது வட்டகையே வியக்கும் வண்ணம் நடந்தேறியது.

செட்டி நாட்டிலேயே வலையபட்டி என்றால் அனைத்து நகரத்தார்களும் எவ்வாறு சிறப்பாக விழாக்களை நடத்துவர் என வியந்து பார்க்கும் அளவுக்கு நம்முடைய விழாக்கள் அமையும். அவ்வாறு குடமுழுக்கு நடத்த 2022ஆம் ஆண்டு மார்ச் மாதம் நிர்வாகக் குழு அமைக்க நகரக்கூட்டம் நடைபெற்றது. அதில் தலைவர்கள் இருவர் துணைத் தலைவர்கள் இருவர், செயலாளர்கள் இருவர், இணைச்செயலாளர்கள் இருவர் மற்றும் பொருளாளர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இறைவனுக்கு தொண்டு செய்ய அதிலும் குடமுழுக்கு வேலைகளில் ஈடுபடுத்திக் கொள்ள அடியேனுக்கும் ஓர் வாய்ப்பாக செயலாளராக பணிபுரிய வாய்ப்பு கிடைத்தது. அந்த வாய்ப்பை நல்கிய வலையபட்டி நகரத்தார்கள் அனைவருக்கும் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

இப்போது எல்லாம் நகர கோயில்களானாலும் அறநிலையத் துறையில் பட்டியலிடப்பட்ட கோயில் என்றால் அவர்களிடம் அனுமதி வாங்கித் தான் ஒவ்வொரு வேலைகளையும் குடமுழுக்கு வரை செய்யவேண்டும். அதற்கெல்லாம் எங்களுக்கு அறநிலையத்துறையை நாடி அனுமதி பெற வேண்டியிருந்தது.

கோபுர கலசத்திலிருந்து தரை தளம் வரை படிக்கட்டுகள் வரை அனைத்தையும் மாற்ற வேண்டிய அவசியம் எங்களுக்கு ஏற்பட்டது. சன்னதிகள் அனைத்தையும் கல் திருப்பணிகளாக மாற்ற முடிவெடுத்தோம்.

ஒவ்வொரு வேலையையும் செய்ய முற்பட்டபோது உள்ளூர் நகரத்தார்கள் அனைவரும் கேட்காமலேயே பொருளை வாரி வழங்கினார்கள். இறைவனுக்கு தொண்டு செய்வதில் வலையபட்டி நகரத்தார்கள் மிக உயர்ந்தவர்கள் என்று நிரூபித்தனர். நாங்கள் ஒருவரையும் கட்டாயப்படுத்தி நன்கொடை வாங்கவில்லை. அவர்களாகவே மனமுவந்து வாரி வழங்கினர். ஆகையால்தான் குடமுழுக்கு மிகச் சிறப்பாக அமைந்தது. நாங்களும் நிதியை பயனுள்ள செலவினங்களுக்காக மட்டுமே செலவழித்து குடமுழுக்கை நடத்தினோம்.

இந்த குடமுழுக்கில் என்னுடைய அனைத்து பணிகளுக்கும் ஒத்துழைப்பும், நல் ஆதரவும் வழங்கிய அனைத்து நிர்வாகிகளுக்கும், நகரத்தார்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றிகளை காணிக்கையாக்குகிறேன்.

மூன்று நாட்கள் கலை நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் என்னுடன் ஒத்துழைப்பு நல்கிய அனைத்து நிர்வாகிகளுக்கும் நன்றி. ■



மகா மண்டபத்தின் உட்புற அழகு

# ஏழாவது குடமுழுக்கு விழாவின் புதிய திருப்பணிகளும், மராமத்து பணிகளும்

1. அருள்மிகு மலையாண்டி சுவாமி, வலம்புரிநாத சுவாமி, வடுவகிர்விழியாள் அம்பாள், கன்னி மூல கணபதி, சுப்ரமணிய சுவாமி, பைரவர், ரிஷி (கிளி) கோபுரம் ஆகிய கோபுரங்களில் இருந்த எல்லாப் பழைய பொம்மைகளையும் நீக்கி, புதிய பொம்மைகள் செய்து வர்ணம் தீட்டப்பட்டுள்ளது.

2. இராஜகோபுரம், ஐயப்ப சுவாமி கோபுரம், பெருமாள் கோவில் கோபுரங்களில் உள்ள பொம்மைகளை மராமத்துச் செய்து வர்ணம் தீட்டியுள்ளது.

3. நடராஜர், பைரவர், முருகன், கன்னி மூல கணபதி, உற்சவ மூர்த்திகள், தெட்சிணாமூர்த்தி, சரஸ்வதி ஆகிய தெய்வ மூர்த்திகள் இருந்த இடங்களில் புதிதாகக் கல் சந்நதி கட்டப்பட்டுள்ளது.

4. சுதையினால் செய்த சண்டிகேஸ்வரர், நால்வர், பள்ளியறை சந்நதிகள் கல் சந்நதிகளாக மாற்றிக்கட்டப்பட்டுள்ளன.

5) சுவாமி, அம்பாள் சந்நதியில் படிகளிலும் நிலைப்படிகளிலும் பித்தளைகளில் பார்வைத்தகடுகள் அமைக்கப்பட்டுள்ளன.

6) ராஜகோபுரம் முன் புதிய மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

7) எல்லாக் கோபுரக் கலசங்களும் மராமத்துப் பார்த்து பாலிஷ் செய்து நிறுவப்பட்டுள்ளன. மலையாண்டி, சுவாமி, அம்பாள் கோபுரக் கலசங்கள் மட்டும் தங்க முலாம் பூசப்பெற்றுள்ளன.

8) கிழக்குப் பகுதியிலுள்ள ராஜகோபுரத்தின் இரும்புக் கதவுகளை நீக்கிவிட்டு, புதிய தேக்கு மரக்கதவுகள் செய்து பொருத்தப்பட்டுள்ளன.

9) கொடிமர கல்மண்டபம், யாக மண்டபம், பொங்கல் வைக்கும் மண்டபங்களை மராமத்துச் செய்து, புதிய சித்திரங்கள் வரைந்து வர்ணம் தீட்டப்பட்டுள்ளது.

10) உள் மண்டபம், கொடிமர மண்டபங்களின் தரையை மெஷின் கிரைண்ட் (Machine Grind) செய்து, பரமனை அடித்துப் புதுப்பிக்கப்பெற்றுள்ளது.

11) எல்லா கல் சுவர், கல் தரை ஜாயின்ட்களையும் Pointing செய்துள்ளது.

12) சுதையினால் செய்யப் பெற்றிருந்த சுவாமி சந்நிதியிலுள்ள இரு துவாரபாலகர்கள், அம்பாள் சந்நதியிலுள்ள இரு துவாரபாலகிகளையும் நீக்கி புதிதாக கருங்கல்லில் செய்த இரு துவாரபாலகர்கள் மற்றும் இரு துவாரபாலகிகள் நிறுவப்பட்டுள்ளன.

13) எல்லாக் கர்ப்பக் கிரகங்களிலும் கல் ஜாயின்ட்களில் காரீயம் (Lead) ஊற்றி Pointing செய்யப்பட்டுள்ளது.

14) நவக்கிரகங்களின் வடக்கு, கிழக்குப் பக்கமிருந்த சுவரை எடுத்துவிட்டு இரும்பு கிரில் போடப்பட்டுள்ளது.

15) தெற்கு நடைபாதைப் படியில் இரண்டு மண்டபங்கள் புதிதாகக் கட்டப்பட்டுள்ளன.

16) தெற்கு நடைபாதைப் படியின் மத்தியில் உள்ள இளைப்பாறும் மண்டபம் மராமத்துப் பார்த்து Granite கல் பதிக்கப்பட்டுள்ளது.

17) தெற்கு நடைபாதைப் படிகளிலும் கைப்பிடிச் சுவர்களிலும் Granite கற்கள் பதித்துள்ளது.

18) ராஜகோபுரம் அருகில் இரும்புத் தூண் (Steel Tower) நிறுவி புதிய வெண்கல மணி அமைக்கப்பட்டுள்ளது.

19) ஐயப்பன் கோயில் தெற்கிலும், மேற்கிலும் கல்சுவர் புதிதாகக் கட்டப்பட்டுள்ளது.

20) கோயில் சுற்றுப்பிரகாரத்தில் மழைநீர் சேகரிப்புத் திட்டம் (Rainwater Harvesting) அமைக்கப்பட்டுள்ளது.

21) மேற்கில் யானை நடைபாதையிலுள்ள பழைய ரேடியோ கட்டடம் மராமத்துச் செய்து புதுப்பிக்கப்பெற்றுள்ளது.

22) பழைய மலையாண்டிக்குச் செல்லும் படிக்கட்டுகள் முன்பு செங்கற்களால் கட்டிப்பட்டிருந்ததை அகற்றி கற்களால் கட்டப்பட்டுள்ளது.

23) தெற்குப் படிக்கட்டு, கிழக்குப் படிக்கட்டு, பழைய மலையாண்டி படிக்கட்டு, அம்மன் சந்நதி திண்ணை, சுனை தடுப்புச் சுவர் ஆகிய இடங்களில் பக்தர்களுக்கு வசதியாக S.S Hand Rail கைப்பிடி அமைக்கப்பட்டுள்ளது.

24) கோயில் சுற்றுப்பிரகாரத்தில் இருந்த படிகளை நீக்கி, முன்பு பதித்திருந்த கற்களையெல்லாம் எடுத்து மராமத்துப் பார்த்து புதிய கற்களைச் சேர்த்துப் பதித்து பரமனை அடித்துள்ளது.

25) சுற்றுப்பிரகாரத்தில் அம்மன் சந்நதிக்கு நேரே (தெற்கே) இருந்த கல் படியை எடுத்து மேற்கே பதிக்கப்பட்டுள்ளது.

26) மின்தடை ஏற்படும் சமயங்களில் உபயோகத்திற்கு புதிதாக UPS இணைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

27) கோயில் முழுவதும் பழைய எலக்ட்ரிக் வயரிங்குகளை நீக்கி புதிய வயரிங் செய்து புதிய LED லைட்டுகளும், LED Strip லைட்களும் போடப்பட்டுள்ளது.

28) மின்சார செலவைக் குறைக்கும் வகையில் கோயில் மதில் சுவரில் சோலார் லைட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன.

29) கோயில் அபிஷேக நீர், மழைநீர், கழிவு நீர் தடையில்லாமல் செல்வதற்குப் புதிதாகத் திட்டமிட்டு புதிய பைப்புகள் போடப்பட்டுள்ளன.

30) கோயிலுக்கு தண்ணீர் தங்குதடையின்றிக் கிடைக்கத் தரையிலுள்ள குழாய்க் கிணற்றை சுத்தம் செய்து பழைய Air Compressor பம்ப்பை எடுத்துவிட்டு புதிய நீர் மூழ்கி பம்ப் வைக்கப்பட்டுள்ளது.

31) செங்கல்லால் கட்டியிருந்த பழைய Overhead Water Tank ஐ இடித்து Sintax Tank வைக்கப்பட்டுள்ளது.

32) சோமவார சங்காபிஷேக மர நாற்காலியும் புதிதாகச் செய்து வைக்கப்பட்டுள்ளது.

33) பஞ்சமூர்த்தி ஊர்வலத்திற்குரிய வாகனங்களையும் எல்லா சகடைகளையும் மராமத்துப் பார்த்து பெயிண்ட் அடித்து புதுப்பிக்கப்பட்டுள்ளது.

34) கோயில் அடிவாரத்தில் பூக்கடைக்கும், காலணிகள் பாதுகாக்கவும் வசதியாக தெற்கு நடைபாதை அருகே புதிய கட்டடம் கட்டப்பட்டுள்ளது.

35) கீழ்க்கண்ட மண்டபம், கட்டடங்களையும் மராமத்துப் பார்த்துப் பெயிண்ட் அடித்து புதுப்பிக்கப்பட்டுள்ளன.

I) பஞ்சமூர்த்தி மண்டபம்
ii) கார்த்திகை மடம்
iii) சூரன் கொட்டகை
iv) தைப்பூசக் கட்டடம்
v) பசு மடம்
vi) கடைக் கட்டடம்
vii) மகர்நோன்பு பந்தல்

# வலையபட்டி அருள்மிகு மலையாண்டி சுவாமி திருக்கோயில் திருவிழாக்களும், உபயதாரர்களும்

மலையின் மீதுள்ள ஆ.ராம.அ. கல்யாணி ஆச்சி திருக்கல்யாண மண்டபத்தில் ஆண்டுதோறும் புரட்டாசித் திங்கள் நவராத்திரி விழா பத்து நாட்கள் நடைபெறும். ஒவ்வொரு நாளும் விதவிதமான அலங்காரங்களுடன் இறைவன் இறைவி அழகாகக் கொலுவிருப்பர். ஒன்பதாவது நாள் சரஸ்வதி பூஜையும் பத்தாவது நாள் சுப்ரமணியர் அம்பு போடுதலும் பின்னர் சுப்ரமணியர் வள்ளி தெய்வானையுடன் மயில் வாகனத்தில் நகர் வலம் வருதலும் நடைபெறும்.

மற்ற எல்லா ஊர்களிலும் விஜயதசமி அன்று அம்பாள் அம்பு போடுதல் மரபு. வலையபட்டியில் சுப்ரமணியர் அம்பு போடுவது சிறப்பாகும்.

ஊர்வலத்தின்போது, உற்சவ விநாயகர் பெருச்சாளி வாகனத்தின் மீது அமர்ந்து வர, அதன் பின்னே, சுப்ரமணியர், தேவியருடன் மயில்வாகனத்தில் பவனிவர, அம்பாளும் குதிரை வாகனத்தில் வந்து மக்களுக்கு அருள்பாலித்து வருகிறார்கள். இவ்விழாவிற்கு உதவிவரும் அறக்கொடையாளர்கள் பெயரும், அலங்கார விவரமும் கீழே தரப்பட்டுள்ளன.



### முதல் நாள்

இராஜராஜேஸ்வரி அலங்காரம்
சுப.நா. சுப்பையா செட்டியார் குடும்பத்தார்

### இரண்டாம் நாள்

திருஞான சம்பந்தர் (ஞானப்பால்)
வ.சித. சிதம்பரம் செட்டியார் குடும்பத்தார்
சித.கும. குமரப்ப செட்டியார் குடும்பத்தார்

### மூன்றாம் நாள்

சிவபூஜை
குப.சு.பழ. பழனியப்ப செட்டியார்
குப.சு.பழ. அண்ணாமலை செட்டியார்
குப.சு.பழ. சோமசுந்தரம் செட்டியார்
குப.கரு.ராம. முத்துக்கருப்பன் செட்டியார் வகையறா

### நான்காம் நாள்

மார்க்கண்டேயர்

ந.ராம.அ.பெரி. அண்ணாமலை செட்டியார்

ந.ராம.அ.பெரி. இராமநாதன் செட்டியார்

### ஐந்தாம் நாள்

சேஷசயனம்

அண.சே. அண்ணாமலை செட்டியார்

### ஆறாம் நாள்

மீனாட்சி திக்விஜயம்

சா.பழ. பழநியப்ப செட்டியார்

### ஏழாம் நாள்

திருக்கல்யாணம்

வடு. வகையறா











| எட்டாம் நாள் | ஒன்பதாம் நாள் | பத்தாம் நாள் |
|---|---|---|
| பிட்டுக்கு மண் சுமத்தல் | சரஸ்வதி பூஜை | விஜயதசமி |
| ஆ.பழ.சுப. சுப்பையா செட்டியார் | அ.நா. அண்ணாமலை செட்டியார் | நகரத்தார் |
| பழ.மு. சின்னையா செட்டியார் | | |



### கந்தர் ஷஷ்டி விழா

ஒவ்வொரு ஆண்டும் கந்தர் ஷஷ்டி விழா மூன்று நாள் நடைபெறும்.

இதனை இவ்வூரில் சூரன் திருவிழா எனக் கூறுவர். இதனைப் பிள்ளையார்பட்டிக் கோயிலை சேர்ந்த நகரத்தார்கள் நடத்தி வருகின்றனர். இலக்கியச் சொற்பொழிவுகளும், இன்னிசைக் கச்சேரிகளும், பட்டிமன்றம், நாடகம் முதலியனவும் இவ்விழாவிற்கு ஏற்பாடு செய்து, திருவிழா மிகச் சிறப்பாக நடைபெறும்.

### கார்த்திகைச் சோமவாரங்கள்

கார்த்திகைத் திங்களில் வரும் ஒவ்வொரு திங்கட்கிழமையும், மலையாண்டி கோயிலில் 108 சங்காபிஷேகங்கள் நடைபெறும்.

### உபயதாரர் விவரம்

முதல்வாரம் : நா.அரு. நாச்சியப்ப செட்டியார்
இரண்டாம் வாரம் : சி.ந.சி. அழகம்மை ஆச்சி
மூன்றாம் வாரம் : மு.அ.கதி.சோம. விசாலாட்சி ஆச்சி
நான்காம் வாரம் : ஏ.நா. நாகப்ப செட்டியார்
ஐந்தாம் வாரம் (வந்தால்) : சேதுராமன் செட்டியார்

## திருப்பள்ளி எழுச்சி

மார்கழித் திங்களின் முதல்நாள் முதல் தைத்திங்கள் முதல்நாள் வரை தினசரி அதிகாலையில் திருப்பள்ளி எழுச்சி நடைபெறும். ஒவ்வொரு நாளும், அன்பர்கள் பலரும் ஆச்சிமார்களும் உபயம் செய்வர்.

## திருவாதிரை தரிசனம்

மார்கழித் திங்களில் வரும் திருவாதிரை தரிசனம், இங்கு சிறப்பாகக் கொண்டாடப்பெற்று, எம்பெருமான் நகர் வலமும் நடைபெறும்.



## உபயதாரர்கள்

கண.பழ.வ. குடும்பத்தார்
கண.பழ.சுப. குடும்பத்தார்
கும.லெ. ஆவிச்சி செட்டியார்
கும.லெ.கும. இராமநாதன் செட்டியார்

## தைப்பூசத் திருவிழா

தைத் திங்களில் வரும் புனர்பூச நட்சத்திரத்தன்று, தைப்பூசத் திருவிழாவும், வருஷாபிஷேகமும் நடைபெறும். மலையாண்டி கோயிலுக்கு முதல் முதல் கும்பாபிஷேகம், தைத்திங்களில் புனர்பூச நட்சத்திரத்தன்று நடைபெற்றதால் வருஷாபிஷேகமும் தைப்பூசத் திருநாளன்றே நடைபெறும். இவ்விரு விழாக்களையும் வைரவன் கோயில் நகரத்தார்களே நடத்தி வருகிறார்கள். இவ்விழாவிற்கு கச்சேரிகளும், இலக்கிய நிகழ்ச்சிகளும், நாடகங்களும் ஏற்பாடு செய்யப்பெற்று திருவிழா சிறப்பாக நடைபெறும்.

## பங்குனி உத்திரத் திருவிழா

பத்து நாள் நடைபெறும் திருவிழா இது. தினசரி நாடகம், கலை நிகழ்ச்சிகள், இலக்கிய நிகழ்ச்சிகள் முதலியன வைத்துச் சிறப்பாக நடைபெறும். ஒன்பதாம் நாளன்று மாலை கச்சேரிக் கூடத்தில் காவடி கட்டி, வேலாயுதத்திற்குப் பூசை செய்து, அடைக்கன் குளத்தைச் சுற்றிக் காவடிகள் ஆடிவந்து, மலையாண்டி கோயிலின் கீழ்புறத்தில் அடிவாரத்தில் வைத்து வழிபாடு செய்யப்படும்.

இந்தக் காவடிகள் இருக்குமிடத்திற்கு முன்னால், அன்று இரவு பெரிய அளவில் மரக்கட்டைகளைக் கொண்டு வந்து போட்டு அக்னி வளர்க்கப்படும். இக்கட்டைகள் நன்றாக எரிந்து அனல் கங்குகளாகியதும் அவை பரப்பி வைக்கப்படும்.

காலை 10.00 மணி அளவில், வலையபட்டி க.சா.அ. ஊருணி மேல்கரையிலுள்ள ஸ்ரீலெட்சுமி விநாயகர் கோயிலிலிருந்து, இறையருள் பெற்ற பக்தர்கள், நாவிலும், கன்னங்களிலும், உடல் முழுதும் வேல் குத்தி, காவடிகளைத் தூக்கிக் கொண்டு மலையாண்டி கோயிலைச் சுற்றிவந்து (கிரிவலம்) அக்னியில் இறங்கும் காட்சி பிரமிக்கத்தக்கதாயிருக்கும்.

## இத்திருவிழா உபயதாரரகள் விவரம்

| | | |
|---|---|---|
| முதல் நாள் | : | நகரத்தார் |
| இரண்டாம் நாள் | : | நேமங்கோயில் அரு.மு.அரு. அருணாசலம் செட்டியார் வகையறாவும், அரு.மு. அடைக்கப்ப செட்டியார் குடும்பத்தாரும், சுப.நா. சுப்பையா செட்டியார் வகையறாவும் |
| மூன்றாம் நாள் | : | இளையத்தங்குடிக் கோயில் பு.கும. புள்ளாஞ் செட்டியார் வகையறா |
| நான்காம் நாள் | : | நேமங்கோயில் பழ.ந. பழநியப்ப செட்டியார் வகையறா |
| ஐந்தாம் நாள் | : | கோயில் சிப்பந்திகள் |
| ஆறாம் நாள் | : | மாத்தூர் கோயில் மணலூர் பிரிவு, வ.மு.மு. இராமனாதன் செட்டியார் வகையறா |
| ஏழாம் நாள் | : | நேமங்கோயில் நகரத்தார் ந.மு.லெ. லெட்சுமணன் செட்டியார் வகையறா |
| எட்டாம் நாள் | : | மாத்தூர் கோயில் மணலூர் பிரிவு க.மு.சு.சி. சின்னையா செட்டியார் வகையறா |
| ஒன்பதாம் நாள் | : | மாத்தூர் கோயில் மணலூர் பிரிவு ஏ.நா. நாகப்ப செட்டியார் வகையறா |
| பத்தாம் நாள் | : | மாத்தூர் கோயில் உறையூர்ப் பிரிவு நகரத்தார்கள் |

### பிரதோஷம்

உபயதாரர் : நா.யே. காசி விஸ்வநாதன் செட்டியார்

### சிவராத்திரி

உபயதாரர் : யாழ்ப்பாணத்தார் வகையறா

### அன்ன அபிஷேகம்

உபயதாரர் : நா.அ. அண்ணாமலை செட்டியார்

### நந்தியம் பெருமானுக்கு அபிஷேக ஆராதனை

ஒவ்வொரு ஆண்டும் தைத்திங்கள் இரண்டாம் நாள் நந்திக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்து வரும் உபயதாரர்கள் விவரம்.

1. ந.ராம.மு.ராம. அங்கம்மை ஆச்சி
2. நா.அண.நா
3. அரு.நா. வள்ளியம்மை ஆச்சி
4. ஏ.நா. ராமாயி ஆச்சி
5. அண.சே.அண. மல்லிகா
6. சி.ந.சி. அழகம்மை ஆச்சி குடும்பத்தார்

# வலையபட்டி நகரத்தார்கள் செய்த திருப்பணிகளும் தர்மங்களும்

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 01. | வையாபுரி ஊருணி | வடு.வயி. வயிரவன் செட்டியார் வடு.லெ. லெட்சுமணன் செட்டியார் திரு.வடு.நா. நாகப்ப செட்டியார் 1924ஆம் ஆண்டு வடு.வடுகநாதன் செட்டியார் (இக்கும்பாபிஷேகத்திற்கு ஊருணியை பெயிண்ட் அடித்துப் புதுப்பித்துக் கொடுத்தார்கள்.) |
| 02. | நகர விடுதி கட்டித் தந்தவர் | க.மு.சு.சி. சின்னையா செட்டியார் |
| | நகர விடுதிக்குள் பாதுகாப்புப் பெட்டக அறை | க.மு.சு.சி. தியாகராஜன் செட்டியார் (அவர் தம் மனைவி தி. சிந்தாமணி ஆச்சி நினைவாக) (07.02.2022) |
| 03. | பசு மடம் | புள்ளப்ப செட்டியார் குமாரர் குமரப்ப செட்டியார் அவர்களால் 1923ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பசுமடம் நிறுவப்பட்டது. |
| 04. | அடைக்கன் குளம் | ந.ராம. குடும்பத்தாரால் சுற்றுச்சுவர்களும் படிக்கட்டுகளும் கட்டப்பெற்றிருக்கிறது. |
| 05. | அமரகண்டான் தென்கரையில் உள்ள வெள்ளைப் பிள்ளையார் கோயில் என்ற கற்பக விநாயகர் ஆலயம் | சி.வ.அ. அவர்கள் (15.12.2011 அன்று பெட்ரோல் பங்க் கும.சே. சேதுராமன் செட்டியார் அவர்களால் குடமுழுக்கு செய்யப்பெற்றது.) |

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 06. | தொட்டியம்பட்டி ஊருணி | லெ.கா.லெ.நா. குடும்பம் சீமை ஓட்டு நாராயணன் செட்டியார் வீடு (நம் பகுதிக்கு முதன்முதலில் சீமை ஓடுகளை அறிமுகப்படுத்தி வீடு கட்டியவர்). தொட்டியம்பட்டி ஊருணியை தனக்கு குழந்தை பிறக்க வேண்டும் என்பதற்காக நாராயணன் செட்டியார் அமைத்துக் கொடுத்தார். |
| 07. | அமரகண்டான் மேற்கரை தண்ணீர் பந்தல் | லெ.கா.அ. குடும்பம் (கசாப்புளி சோமஞ்செட்டி வீடு) |
| 08. | மூளியாண்டி ஆலமரம் அருகில் கொன்னையூர் திருவிழாவின்போது கொள்ளுக்கஞ்சி ஊத்துதல் மற்றும் தண்ணீர் பந்தல் வைத்தல் | ஆ.கரு.ராம. கருப்பஞ் செட்டியார் (ஆகாசம் வீடு) |
| 09. | கந்தர் சஷ்டி விழா மண்டபம் (சூரன் திருவிழா மண்டபம்) | கு.கா.கு.மு. முத்துக்கருப்பன் செட்டியார் (1944) கும்பாபிஷேகத்திற்கு கட்டடத்தை மராமத்துச் செய்து பெயிண்ட் அடித்து புதுப்பித்துக் கொடுத்துள்ளார்கள். |
| 10. | மலையாண்டி கோயில் மலையில் திருக்கல்யாண மண்டபம் (கொலு மண்டபம்) | அ.ராம.அ. அண்ணாமலை செட்டியார் மனைவி கல்யாணி ஆச்சி 12.02.1968. |
| 11. | முத்திவிநாயகர் கோயில் (மலையாண்டி கோயில் மேல் கரையில்) | வ.கரு. சிகப்பி ஆச்சி. |
| 12. | கார்த்திகை மடம் (அக்னி காவடி இறங்கும் இடத்திற்கு கிழக்கே உள்ளது)<br>பழைய மலையாண்டி கோயில் வடபுறம் உள்ள கார்த்திகை மடம் | கு.சுப. வகையறா<br>வ.கரு. சபாபதி செட்டியார். |

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 13. | ஞானியார்மலையும் சிட்டாள் ஆச்சி மடமும் | சிட்டாள் ஆச்சி அவர்களும் மேற்படியாளர் சகோதரர்கள் பெரி.ஏ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் (யாழ்பாணத்தார் வீடு 06.07.1914) |
| 14. | துவாதசி மடமும் குதிரைகுளுப்பாட்டி நகரத்தார் ஊருணியும் | கு.கா.கு. அண்ணாமலை செட்டியார் 1924. (குழிவெட்டி சொ. இராமநாதன் முன்னோர்.) |
| 15. | பயன்தரும் பயணிகள் விடுதி (வட்டங்கச்சேரி, காவல் நிலையம் அருகில் உள்ளது, பொன்னமராவதி | சு.செ.அ.மு. முத்துராமன் செட்டியார் |
| 16. | அடைக்கலம் காத்தார் கோயில் சேங்கை மற்றும் முன்மண்டபம் | கு.கா.கு. வகையறா ந.பழ/மு.பழ/அ.பழ/பெ.பழ ஆகிய 5 குடும்பத்தார் High Tech சி.ந.சி. ராம முத்தையா செட்டியார். |
| 17. | க.சா.அ. ஊருணியும் லெட்சுமி விநாயகர் கோயிலும் | க.சா.அ. அண்ணாமலை செட்டியார் (2023 - 2024லில் ஊருணியை ஆழப்படுத்தி புதிய மதில் சுவர், படிகள் கட்டி, சுற்றிலும் நடைபாதை அமைத்து முழுவதுமாகப் புதுப்பித்துள்ளார்.) |
| 18. | பாப்பாயி ஆச்சி மருத்துவமனை (அதற்குள் சிந்தாமணி விநாயகர் கோயில்) | ந.ராம.அ.பெரி. பெரியகருப்பன் செட்டியார் (காடோடி வீடு) 13.09.1954 விநாயகர் ஆலயம் 1955 ஆண்கள் உள் நோயாளிப் பகுதி 21.04.1965 |
| 19. | கேசுராபட்டி செல்வமுத்து விநாயகர் கோயிலும் ஊருணியும் | கொண்டைகட்டி முத்துவள்ளியப்ப செட்டியார் வகையறா. |

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 20. | உளிவீரன் கோயில் பங்காளிகள் வீடு (அடைக்கன்குளம் மேற்கரை) | வலையபட்டி பிள்ளையார்பட்டிக் கோயில் நகரத்தார் |
| 21. | பாப்பாத்தி அம்மாள் கோயில்வீடு திருமண மண்டபம் | மாத்தூர் கோயில் மணலூர்ப் பிரிவு நா.க.பெரி. நாகப்ப செட்டியார் வகையறா |
| 22. | சித்திவிநாயகர் கோயில் அழகிய வாணஞ்செட்டி ஊருணி | அ.மு.நா. நாகப்ப செட்டியார் 1914 – 1917<br>2012ல் கோயில் மராமத்துச் செய்து கும்பாபிஷேகம் செய்யப்பெற்றுள்ளது. |
| 23. | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் தண்ணீர் பந்தல். (பொன்னமராவதி பஸ் டிப்போ அருகில்) | அ.மு.நா.சோமசுந்தரம் செட்டியார் 1937 |
| 24. | மலையாண்டி கோயில் இளைப்பாறு மண்டபம் | மது, கும. மதுவன் செட்டியார் (இக்கும்பாபிஷேகத்திற்கு மராமத்துச் செய்து கிரானைட் கல் ஒட்டி, பெயிண்ட் அடித்துள்ளார்கள்.) |
| 25. | நாமகள் கல்லூரி<br>ஆசிரியர் ஆ. பழநியப்பப்பிள்ளை<br>ஆசிரியர் ஆ.பழ. பாலசுப்பிரமணியன் பிள்ளை (ஐயா என்று அழைக்கப்பெற்றவர் 1964 – 65 நல்லாசிரியர் விருது பெற்றவர்)<br>ஆசிரியர் பழநியப்பா கல்லூரி ஆ.பழ.பா. மாணிக்கவாசகம் அவர்கள் | 18.01.1918 பள்ளியை ஆரம்பித்தவர்கள்.<br>பெரி.ராம.லெ. லெட்சுமணன் செட்டியார்<br>ந.பெரி.பழ. பழநியப்ப செட்டியார் கட்டிடம் கட்டிக் கொடுத்தவர்கள்<br>ஆவி.ரா.வ.பெரி.பழ.பழநியப்ப செட்டியார் குடும்பத்தார் மேற்படி பள்ளி பின்னர் குப.சு.பழ. பழநியப்ப செட்டியார் அவர்களால் புதிய கட்டடங்கள் கட்டி, பழநியப்பா கல்லூரி என்று பெயரிட்டு அவர்தம் குடும்பத்தாரால் நிர்வகிக்கப்பெற்று வருகிறது. |

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 26. | அலர்மேலு பெண்கள் கல்லூரி | வயி.வ. வடுகநாதன் செட்டியார் குமாரர்கள் நால்வர் வயிரவன் செட்டியார், இலக்குமணன் செட்டியார், நாகப்ப செட்டியார், வடுகநாதன் செட்டியார் 09.05.1930 |
| 27. | வலம்புரி வடுகநாதன் உயர்நிலைப்பள்ளி (தற்போது மேல்நிலைப்பள்ளி) | வடு.லெ. இலக்குமணன் செட்டியார்<br>வயி.வ. வடுகநாதன் செட்டியார்<br>வ.ராம. இலக்குமணன் செட்டியார்<br>வடு.வயி. வடுகநாதன் செட்டியார்<br>வடு.நா. வடுகநாதன் செட்டியார்<br>22.06.1944 |
| 28. | சித்திவிநாயகர் செந்தமிழ் கலாசாலை (தர்மப்பள்ளிக்கூடம்) | நா.மு.ராம. சொக்கலிங்கம் செட்டியார் M.L.C<br>நா.மு.ராம. பழநியப்ப செட்டியார்<br>11.11.1920 |
| 29. | நந்தவனம் (வையாபுரிப்பட்டி ரோட்டில்) | ஆவி.சித. சாமிநாதன் செட்டியார் குடும்பத்தார் |
| 30. | நந்தவனம் வலம்புரி 1ஆம் நம்பர் ரோடு (தற்போதைய யூனியன் கிளப் இருக்கும் இடம்) | யாழ்ப்பாணத்தார் வீடு<br>நெடுஞ்செல்லப்ப செட்டியார் வீடு |
| 31. | மாப்பிள்ளைக் கூடம் (கச்சேரிக் கூடம்) | ந.கரு. அருணாச்சலம் செட்டியார் அவர்கள் கட்டி நகரத்தார்கள் வசம் ஒப்படைத்துள்ளார்கள். இவ்வருடம் மராமத்துச் செய்து தெற்கு பக்கம் நிரந்தர ஷெட் போட்டுள்ளார்கள். |
| 32. | துர்க்கை அம்மன் கோயில் | இளையாத்தங்குடி ஒக்கூர் நகரத்தார்களில் ஒரு பிரிவினர் மட்டும் இக்கோயிலுக்கு உரிமையுடையவர்கள். |
| 33. | தர்மக்கேணி (1ம் நம்பர் ரோடு) | சா.பெரி.நா. மூக்கப்ப செட்டியார் என்ற முத்தையா செட்டியார் குடும்பத்தார் |

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 34. | சரஸ்வதி சந்நதி | L.C.M. வகையறா |
| 35. | சங்கரப்பச்சி பிள்ளையார்<br>சங்கரன் குண்டு | வடுகநாதன் செட்டியார் லெட்சுமணன் வகையறா.<br>ச.பெரி.ச.கரு.ச.சுப. சங்கரன் செட்டியார் (இவரது வாரிசுகள் குழிபிறையில் வசிக்கிறார்கள்) |
| 36. | கைலாசபதி கோயில் | காடோடி வீடு |
| 37. | கோயிலின் வடகிழக்குப் பகுதியில் மேடை அமைத்து வன்னிமரம் வைத்தது | கதி. சோமசுந்தரம் – பூங்கோதை (ICICI) |
| 38. | இராஜகோபுரத்தின் படிக்கட்டு முன்பாக உள்ள அரசமர மேடை அக்னி காவடி இறங்கும் இடம் | மு.மு.மு. முத்துவள்ளியப்ப செட்டியார்<br>மு.மு.மு.நா.மு. நாகப்பன், ரவி (இக்கும்பாபிஷேகத்திற்கு மராமத்துச் செய்து பெயிண்ட் அடித்து புதுப்பித்துள்ளார்கள்.) |
| 39. | பஞ்சமூர்த்திகள்<br>மணிமண்டபம் | PL.A, PL.K<br>(இக்கும்பாபிஷேகத்திற்கு மண்டபத்தைப் பெயிண்ட் அடித்துப் புதுப்பித்துள்ளார்கள்.) |
| 40. | நாடக மேடை | பழ. ஜெயங்கொண்டான் செட்டியார் (அ.செ. செட்டியார் & கோ) |
| 41. | அருள்மிகு ஸ்ரீதேவி, பூதேவி உடனாகிய வரதராஜப்பெருமாள் கோயில் | மு.ராம. செந்தில்நாதன் செட்டியார் (1993)<br>இக்கும்பாபிஷேகத்திற்கு HR & CE அறிவுரையின்படி பளிங்கு கற்களை எடுத்துள்ளார்கள். கோபுரத்திற்கு மஞ்சள் நிற பெயிண்ட் அடித்துள்ளார்கள். |
| 42. | ஊமாண்டி ஆத்தா படைப்பு வீடு | பிள்ளையார்பட்டி கோயில் 4 கரை பங்காளிகள் |

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 43. | பொன்னமராவதி நாட்டுக்கல் படைப்பு வீடு (ஈஸ்வரி என்ற மங்கல்யகாரி படைப்பு வீடு) | லெ.பெரி.லெ.கா/ஆ.கரு.ராம/ ஆ.ராம.வெ/ஆ.சித.ராம. வகையறா |
| 44. | நெய்ச் சோற்றுக்காரி படைப்பு வீடு | முத்துவள்ளியப்ப செட்டி வகையறா |
| 45. | அருள்மிகு ஸ்ரீ செங்கிடாய்க் கருப்பர் தேனம்மை ஆயாள் படைப்பு வீடு | மத்தியானம் வீடு |
| 46. | நல்லதங்காள் கோயில் படைப்பு வீடு | இளையாத்தங்குடி கழனிவாசல் பிரிவு |
| 47. | ஐயப்பன் கோயில் | க.மு.சு.சி. சிங்காரம் (சுப்பிரமணியன் செட்டியார் தலைமையில் ஐயப்ப பக்தர்கள் - 1993) |
| 48. | கல் பெஞ்சு (2024 கும்பாபிஷேகம்போது அமைக்கப்பட்டது) | 1) ஆகாசம் இராமநாதன்<br>2) கொண்டைகட்டி முத்துவள்ளியப்பன்<br>3) கதி. சோமசுந்தரம் (ICICI)<br>4) இன்ஜினியர் M. ரவிச்சந்திரன் |
| 49. | நிலை வாசற்படி பார்வைத் தகடு அம்மன் சந்நதி (2024)<br><br>சுவாமி சந்நதி (2024) | 1) MA. பாண்டியன் குடும்பத்தார்<br>2) பாப்பா பழனியப்பன் குடும்பத்தார்<br>முத்தையா அண்ணாமலை |
| 50. | தெற்குப் படிக்கட்டு 2 மண்டபங்கள் | PL.K. குடும்பத்தார் |
| 51. | இராஜகோபுரம் மரக்கதவு (2024) | பொள்ளாச்சி ராம. வள்ளியப்ப செட்டியார் குடும்பத்தார் (ஆவுடையான் செட்டி வீடு) |
| 52. | ராஜகோபுரம் முன் மண்டபம் | PL.A. குடும்பத்தார் |

| வ. எண் | திருப்பணிகளும் தர்மங்களும் | திருப்பணியாளர்கள் தர்மவான்கள் பெயர்கள் |
|---|---|---|
| 53. | பூக்கடை, காலணிகள் பாதுகாப்புக் கட்டடம் | Dr.SP. தியாகராஜன் குடும்பத்தினர் (கோவை) |
| 54. | சிதம்பரம் மெட்ரிகுலேஷன் பள்ளி | V.S.T. குடும்பத்தார் |
| 55. | மெய்யப்பா வள்ளியம்மை காஞ்சி சங்கர வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளி | மெ. ராஜமாணிக்கம் செட்டியார் அமரர் மெ. தியாகராஜன் செட்டியார் குடும்பத்தார் |
| 56. | CT. இன்டர்நேஷனல் பள்ளி கேசுராபட்டி | வ.சித.பழ. ராஜா என்ற சிதம்பரம் (2021) |
| 57. | பசுமடம் (தைப்பூச மண்டபத்திற்கு எதிரே) | அ.சி.சுப.நா.சுப. சுப்பையா குடும்பத்தார் |

## அருள்மிகு மலையாண்டி சுவாமி கோயிலில் அமைந்துள்ள கோபுரங்கள் மற்றும் கலசங்கள்

| | கோபுரம் | கலசம் |
|---|---|---|
| 1) | இராஜகோபுரம் | 7 |
| 2) | மலையாண்டி சுவாமி கோபுரம் | 1 |
| 3) | வலம்புரிநாத சுவாமி இராஜகோபுரம் | 3 |
| 4) | வலம்புரிநாத சுவாமி மூலஸ்தான கோபுரம் | 1 |
| 5) | வடுவகிர்விழியாள் இராஜகோபுரம் | 3 |
| 6) | வடுவகிர்விழியாள் மூலஸ்தான கோபுரம் | 1 |
| 7) | விநாயகர் கோபுரம் | 1 |
| 8) | சுப்பிரமணியர் கோபுரம் | 1 |
| 9) | பைரவர் கோபுரம் | 1 |
| 10) | சண்டிகேஸ்வரர் கோபுரம் (கோயிலினுள்) | 1 |
| 11) | பள்ளியறை கோபுரம் | 1 |
| 12) | ஐயப்பன் கோபுரம் | 1 |
| 13) | வரதராஜப்பெருமாள் கோபுரம் | 1 |

மொத்தக் கோபுரங்கள் : 13
மொத்தக் கலசங்கள் : 23

**ஸ்தல விருட்சம் : வில்வமரம்**

# ஏழாவது குடமுழுக்கும்
## எனது அனுபவங்களும்



திருவனந்தபுரம் **S. கணபதி**
துணைத்தலைவர், குடமுழுக்கு கமிட்டி

வலையபட்டி மலையாண்டி கோவில் ஏழாவது குடமுழுக்கு பற்றி வலையபட்டி நகரத்தார்கள் மனதில் நினக்க ஆரம்பித்து விரைவில் நடத்த வேண்டும் என்று பொதுவாகப் பேசப்பட்டு வந்தது. திருவனந்தபுரத்திலிருந்து நான் வலையபட்டிக்கு வரும்பொழுது இது விபரம் அறிந்தேன். அதுசமயம் என் நண்பர்கள் அய்யாபேரன் J. நாச்சியப்பன், PL.M. முத்தையா, எனது பங்காளிகள் ஆகியோர் இதைப் பற்றி பேசும்பொழுது அவர்களும் குடமுழுக்கு வேலைகளை நான் ஊரில் இருந்துகொண்டு செய்து கொடுக்கலாமே என்ற எண்ணத்தை என் மனதில் விதைத்தார்கள். குடமுழுக்கு சம்மந்தமாக பேசி முடிவெடுக்க நகரக் கூட்டத்திற்கு நடப்புக் காரியக்காரர்கள் அழைப்பு விடுத்தபோது, என் நண்பர்களும் குடமுழுக்குக் கமிட்டிக்கு என்னை சிபாரிசு செய்யப் போவதாகக் கூறி வலையபட்டிக்கு வரவழைத்தார்கள்.

பல வருடங்களாக நானும் தினமும் காலையில் எழுந்ததும், இரவில் படுக்கைக்கு செல்லும் முன்பும் தவறாது மலையாண்டியை வணங்கும் பழக்கம் கொண்டவன். எனது திருமண வாழ்க்கையே மலையாண்டி முன்புதான் தொடங்கியது. 1970ம் வருடம் இதே மலையாண்டி சந்நதியில் தான் பெண் பார்த்து, என் மனைவி வள்ளியம்மையைக் கைப்பிடித்தேன். அன்று முதல் இன்றுவரை என் வாழ்க்கையில் முன்னேற்றங்களே. இதனால் என் நண்பர்கள் குடமுழுக்கு வேலைகளில் என்னை ஈடுபடுத்திக் கொள்ளச் சொல்லியது என் மனதில் ஒரு தீப்பொறியாகி, வளர்ந்து நெருப்பாகி மலையாண்டிக்கு சேவை செய்வது என்ற முடிவுக்கு வந்தேன். குடமுழுக்குக் குழுவைத் தேர்ந்தெடுக்க நகரக் கூட்டம் கூடியபோது என் நண்பர்களும், பங்காளிகளும் பிள்ளையார்பட்டி கோவில் சார்பில் என்னை நாமினேஷன் கொடுக்கச் சொல்லி எந்தப் போட்டியும் இல்லாமல் துணைத் தலைவர் பதவிக்கு தேர்வு பெற்றேன். தேர்வு பெற்றதும் எனது பணிவு ஓய்வு காலத்தில் (Retired Life) திருவனந்தபுரத்திலிருந்து வலையபட்டி வந்து இருந்து, என்னால் முடிந்த குடமுழுக்கு வேலைகளைச் செய்து கொடுப்பது என்று மனதில் உறுதிசெய்து கொண்டு நான் வணங்கும் மலையாண்டிக்கு நன்றி கூறினேன். மிகுந்த போட்டிகளுக்கிடையே 9 பேர் கொண்ட ஒரு சிறந்த குடமுழுக்கு குழுவும் அமைக்கப்பட்டது.

இந்தக் குழு அங்கத்தினர்களும் உடனே கூடி கோவிலில் என்னென்ன மராமத்து செய்ய வேண்டியது, புதிதாக என்ன மாற்றங்களைச் செய்வது என்று கலந்து பேசப்பட்டது. நானும் என் மனதில் தோன்றிய எண்ணங்களைக் கூறினேன்.

முதலில் எல்லா கோபுரங்களையும் அதில் உள்ள சிற்பங்களின் நிலைமையைச் சிறந்த அனுபவமுள்ள ஸ்தபதிகளுடன் ஆராய்ந்து கலந்து பேசி 8 கோபுரங்களில் உள்ள எல்லா சிற்பங்களும் அதிகமாக பழுது ஏற்பட்டு சரிசெய்ய முடியாத நிலைமைக்கு (Beyond repair) வந்துவிட்டதால் பழைய சிற்பங்களை முழுவதுமாக அகற்றிவிட்டு (சுமார் 418 சிற்பங்கள்) புதிதாக செய்வது என்று கமிட்டியில் முடிவு செய்யப்பட்டது. பழைய சிற்பங்கள் போல் புதிது இருக்க வேண்டுமென்று எண்ணி புகைப்படம் எடுத்துக்கொண்டு பழைய சிற்பங்களை அகற்றினோம். புதிய சிற்பங்களும் நீண்ட வருடங்களுக்கு பழுது ஏற்படாமல் இருப்பதற்கு சிற்பங்களுக்குள் வைக்கும் Reinforcment கம்பிகளையும் துருப்பிடிக்காமல் இருக்க இரும்பு கம்பிகளுக்கு பதிலாக தாமிரக்கம்பிகளை வைத்துள்ளோம்.

ராஜகோபுரம் சமீப காலத்தில் கட்டப்பட்டதால் அதில் உள்ள சிற்பங்கள் கூடுதல் பழுதில்லாமல் இருந்ததால் சிற்பங்களை முழுவதுமாக அகற்றாமல் பழுது மட்டும் பார்ப்பது என முடிவு செய்து வேலைகள் துவங்கப்பட்டன.

பிறகு மேற்படி வேலைகளுக்கு Estimate எடுத்து ஒவ்வொரு கோபுரத்திற்கும், முன்பு பண உதவி செய்த Sponsorகளை கேட்பது என்று கமிட்டியில் முடிவு செய்தோம். எல்லா Sponsorகளும் மறுபடியும் அவர்களே அந்த அந்தக் கோபுரத்திற்கு Sponsor செய்வதாகச் சொன்னார்கள்.

அடுத்ததாக குடமுழுக்குக் குழு அங்கத்தினர்களும், Technical Expertகளான Architect பெரியண்ணன், பொறியாளர் வயிரவன் போன்றவர்களுடன் கோவில் உள்ளே என்ன என்ன பழுதுபார்க்க வேண்டும் என்ன என்ன மாற்றங்கள் (Improvement) செய்ய வேண்டும் என்று கலந்து ஆலோசித்து முடிவு எடுத்து செயலாக்கப்பட்டுள்ளது. அவற்றில் முக்கியமான மாற்றங்களை கீழே கொடுத்துள்ளேன்.

- கோவில் வெளிசுற்றுப் பிரகாரத்தில் பதித்துள்ள எல்லாக் கற்களையும் எடுத்து ஒன்றுபோல் விளிம்பை அறுத்து மேல்பாகத்தை மட்டமாக தேய்த்து, பரமனை அடித்து மறுபடியும் பதித்திருக்கிறது. பழைய கற்கள் போதாததால் புதிய கற்களை வாங்கிப் பதித்துள்ளது. மழைநீர் சேகரிப்பையும் மழைநீர் எளிதாக வெளியில் செல்வதற்கும்

முக்கியத்துவம் கொடுத்து தரையில் கரவு (Slope) கொடுத்துள்ளது. சேகரித்த மழைநீர் இயற்கையாக சுத்தம் செய்யப்பட்டு கோவில் உள்ளே உள்ள சுனையில் விழ ஏற்பாடு செய்திருக்கிறது.

- Hindu Religious & Charitable Endowment, Archeology Department ன் அறிவுரைப்படி கர்ப்பக் கிரகத்திலும், கோவிலின் உள்ளேயும் பதித்திருந்த Vitrified டைல்ஸ்கள் அகற்றப்பட்டிருக்கிறது.
- நடராஜர், தட்சணாமூர்த்தி, கன்னிமூல கணபதி, முருகன், லெட்சுமி, உற்சவமூர்த்திகள், பைரவர் ஆகிய சுவாமிகளுக்குப் புதிதாக கல்லினால் சந்நதி கட்டியிருக்கிறது.
- அம்மன், நால்வர், சண்டிகேஸ்வரர், பள்ளியறை ஆகிய சுவாமிகளுக்கு சுதையில் செய்திருந்த சந்நதியை முழுவதுமாக நீக்கி கல்லினால் செய்த சந்நதி ஆக்கியிருக்கிறது.
- சூரியன், சந்திரன், சரசுவதி சுவாமிகளுக்கு கல்லினால் ஆன திருவாச்சி செய்திருக்கிறது.
- சுவாமி சந்நதியில் சுதையினால் செய்திருந்த இருதுவார பாலகர்களையும் அம்மன் சந்நதியில் சுதையினால் செய்திருந்த இருதுவார பாலகிகளையும் நீக்கி, கல்லினால் ஆன துவார பாலகர்களையும், பாலகிகளையும் எந்தமாற்றமும் இல்லாது வடிவமைக்கப்பட்டுள்ளது.
- சுவாமி, அம்மன் சந்நதிகளின் நுழைவாயில்கள், பித்தளைப் பார்வைத் தகடுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது.
- கொடிமர நந்தீஸ்வரருக்கு அபிஷேகம் செய்யும்பொழுது தண்ணீர் வெளியே சிதறாமல் இருப்பதற்காகக் கல் பணி செய்துள்ளது
- நவக்கிரகத்திற்கு வடக்கிலும், கிழக்கிலும் இருந்த சுவர்களை அகற்றி கம்பி அடைப்புகளாக்கி, பிரகாரம் வருவதற்கு வசதி செய்யப்பட்டுள்ளது.
- கொடிமர மண்டபத்தின் மேற் கூரையிலும் இரு பக்கச் சுவரிலும் வர்ணம் பூசி சித்திரம் வரைந்துள்ளது.
- உள் மண்டபம், கொடிமர மண்டபம் தரையைத் தேய்த்து பரமனை அடித்திருக்கிறது.

- கோவிலில் உள்ள எல்லா சுவர்களின் இருபுறத்தில் உள்ள Jointகளையும் புதிதாக Pointing செய்துள்ளது.

- ராஜகோபுரத்தின் கிழக்கே பெரிய முன்மண்டபம் புதிதாகக் கட்டப்பட்டிருக்கிறது.

- ராஜகோபுரத்தில் இருந்த பெரிய கம்பிக் கதவுகளை நீக்கி புதிய தேக்கு மரக்கதவு பொருத்தப்பட்டிருக்கிறது.

- முன்மண்டபத்தின் அருகில் இருந்த பழைய மணி உயரத்தில் இல்லாததாலும், மணியில் வெடிவு ஏற்பட்டதாலும் சரியான சப்தம் தூரத்திற்கு கேட்காததால் உயரமான இரும்பு தூண்கள் நிறுவப் பெற்று புதியமணி பொருத்தப்பட்டிருக்கிறது.

- மின்சார செலவைக் குறைக்கவும், கோவில் மதில் சுவரின் உள்பக்கமும் வெளிப்பக்கமும் வெளிச்சம் கிடைக்கவும், Solar விளக்குகள் பொருத்தப்பட்டிருக்கிறது.

- கோவிலுக்கு செல்லும் தெற்கு வாசலில் (அய்யப்பன் கோவில் பக்கம்) உள்ள சிமிண்ட் படிகளிலும் கைபிடிசுவர்களிலும் கல்பதித்து கல்படிகளாக மாற்றியிருக்கிறது.

- HR&CE, Archeology Department ன் அறிவுரைப்படி தெற்கு நடை பாதையில் இருந்த இரண்டு நிழல் ஷெட்டுகளையும் நீக்கி புதிய மண்டபம் கட்டியிருக்கிறது.

- நடுவில் உள்ள மண்டபத்தையும் கற்கள் பதித்து புதுப்பித்திருக்கிறது.

- பாதுகாப்பைக் கருதியும் முதியோர்களின் வசதிக்காகவும் கிழக்கு மற்றும் தெற்கில் உள்ள படிகளில் S.S. கைப்பிடி வைத்திருக்கிறது. சுனையின் மதில் சுவரிலும், பழைய மலையாண்டிக்கு செல்லும் படிகளிலும் கைப்பிடி வைத்திருக்கிறது.

- அய்யப்பன் கோவில் முன்புள்ள தரையில் கல்பதித்து பாதுகாப்பிற்காக S.S. கைப்பிடி வைத்திருக்கிறது.

- அய்யப்பன் கோவிலில் தெற்கில் இருந்த கம்பி அடைப்புகளை நீக்கி பகுதி உயரத்திற்கு கல் சுவராக்கியிருக்கிறது.

- யானைப் பாதையையும், அருகில் இருந்த ரேடியோ கட்டடத்தையும் மராமத்து செய்து புதுப்பித்திருக்கிறது.

- தெற்கு நடையில் பூக்கடைக்கும், காலணிகள் வைப்பதற்கும் புதிதாக ஒரு கட்டடம் கட்டியிருக்கிறது.

- கோவில்தண்ணீர் தேவைக்குப் போட்டிருந்த குழாய்க் கிணறில் இருந்த Air Compressor Pumpஐ எடுத்து புதிய நீர்மூழ்கி பம்ப் ஒன்று நிறுவியிருக்கிறது.

- கோவிலுக்கு வரும் பக்தர்கள் முதியோர்கள் இருப்பதற்கு வசதியாக கல்லினால் ஆன 4 நாற்காலி கோவில் வெளிமண்டபத்தின் அருகில் போடப்பட்டிருக்கிறது.

- குடிதண்ணீர் வசதிக்காக, சுடுதண்ணீர், குளிர் தண்ணீர், சாதா தண்ணீர் கிடைக்கும். R.O மெஷின் நிறுவப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய ஒவ்வொரு சிறிய பெரிய வேலைகளையும் / மாற்றங்களையும் குடமுழுக்குக் கமிட்டியில் கலந்து பேசி தேவைகள் / உபயோகம் / நிதிநிலைமையின் அடிப்படையில் அனுமதிபெற்று தொடங்கப்பட்டு நிறைவு செய்திருக்கிறது. புதிய / பழுது பார்க்கப்பட வேண்டிய வேலைகளை உபயம் யார் செய்திருக்கிறார்கள் என்று பார்த்து அவர்களுக்கு முன்னுரிமை கொடுத்து நன்கொடை பெற்றோம்.

வலையபட்டி நகரத்தார்களும் தாங்களாக மனமுவந்து குறிப்பிட்ட வேலைகளுக்கு Sponsor செய்ததாலும், நன்கொடையாகத் தந்ததாலும் மேற்கூறிய வேலைகளை செவ்வனே செய்து முடிக்க முடிந்தது. அவர்கள் எல்லோருக்கும் குடமுழுக்கு குழுவின் சார்பில் நான் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை குடமுழுக்கு குழுவில் துணைத் தலைவராக தேர்வு செய்ததற்கும், குடமுழுக்குக் குழுவுக்கும் மலையாண்டி சுவாமிக்கும் எனது நன்றிகளை உரித்தாக்கி, எனது பணி ஓய்வு காலத்தில் (Retired Life) நான் தினம் தொழும் மலையாண்டிக்கும், மலையாண்டி கோவிலுக்கும் என் முழுநேரத்தையும் அர்ப்பணித்துக் கொண்டு புதிய வேலைகளை குழுவின் சம்மதம் பெற்று செய்து முடிப்பது என்று உறுதி எடுத்துக்கொண்டு பணியை துவக்கினேன். ஒவ்வொரு வேலைக்கும் அந்த அந்தத் துறையில் உள்ள நிபுணர்களை ஆலோசனை கேட்டேன். நண்பர்கள் ஆர்க்கிடெக்ட் பெரியண்ணன், இஞ்சினியர் வயிரவன், கமிட்டி உறுப்பினர் C. நாச்சியப்பன், செயலர் நாகப்பன் ஆகியோர்களையும் கலந்து சந்நதி இல்லாதிருந்த தெய்வங்களுக்குப் புதிதாக சந்நதி செய்ய உத்தேசித்து, குடமுழுக்கு கமிட்டியில் கலந்து பேசி கமிட்டியின் முடிவுப் படி

தட்சணாமூர்த்தி

கன்னிமூலகணபதி

முருகன், மகாலெட்சுமி

உற்சவமூர்த்திகள்

வயிரவர்

நடராஜர்

ஆகிய சுவாமிகளுக்கு கல்லினால் சந்நதிகள் செய்தோம்.

அதேபோல் சுதையில் செய்திருந்த சண்டிகேஸ்வரர், நால்வர் சந்நதிகளையும், இருதுவார பாலகர், இருதுவார பாலகிகளையும் கல்லினால் செய்தோம்.

சுற்றுப்புறக் கல் பணிக்கும், Plubingக்கும், Electrical வேலைக்கும் அந்த அந்தத் துறையில் உள்ள Consultantகளை சென்னையிலிருந்து அழைத்து வந்து அவர்களின் ஆலோசனைப்படி வேலைகளைச் செய்து முடித்தோம்.

குடமுழுக்கு குழுவின் இருதலைவர்களில் ஒருவரான திரு. KMSS. தியாகராஜன் அவர்களும் அவர்களுடைய நீண்ட கால பல்துறை அனுபவங்களினால் குடமுழுக்கிற்குத் தேவையான சாமான்களை தரமானதாகவும், விலைகுறைவாகவும் எங்கு கிடைக்கும் என்று ஆலோசனை கூறி வாங்க முடிந்தது. கோவையில் இருக்கும் பொழுதும் இங்கு நடக்கும் வேலைகளை அவ்வப்பொழுது அறிந்து, Remote Control ல் முடிவு எடுத்தார்கள். அவர்களும் சிக்கலான விஷயங்களைக் கூட மிகச் சுமூகமாகத் தீர்த்து வைக்கும் திறமை உள்ளவர்கள். கடந்த இரண்டரை வருடங்களில் அவர்களோடு பழகி, பல நல்ல விஷயங்களைக் கற்றுக்கொண்டேன்.

குழுவின் மற்றொரு தலைவரான திரு. PL.A. சிதம்பரம் அவர்களும் அரசியலிலும், பல்வேறு துறைகளிலும் இருந்து அனுபவம் பெற்றவர்கள். நான் அவர்களைச் சிறுவயதிலிருந்தே அறிவேன். எந்த நேரத்திலும் அவர்களைத் தொடர்பு கொள்ளலாம். கோவில், யாகசாலை விஷயங்களில் சரியான முடிவை உடனே எடுக்கும் திறமை பெற்றவர்கள். மிக சுறுசுறுப்பானவர்கள். பயணம் செய்வதற்கு அஞ்சாதவர். இவர்களிடமிருந்தும் எவ்வாறு காரியங்களை விரைவாகச் செய்து முடிப்பது என்ற பல விஷயங்களை அறிந்து கொண்டேன்.

குடமுழுக்குக் கமிட்டியின் செயலாளர் திரு. நாகப்பன் அவர்களை முதன்முதலில் நகரக் கூட்டத்தில் தான் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. கடந்த இரண்டாண்டுகளில் அவரோடு நன்கு பழகி, வேலை செய்து பல புதிய அனுபவங்களைக் கற்றுக்கொண்டது எனக்கும் மிக்க மகிழ்ச்சியாக இருக்கிறது. செயலர் என்ற முறையில் திரு. நாகப்பனும் விடாது தொடர்ந்து கமிட்டிக் கூட்டத்தைக் கூட்டி புதிய வேலைகளையும் மராமத்து செய்ய வேண்டிய

வேலைகளையும் வேலை செய்ய தகுதியானவர்களையும் குறைந்த செலவில் செய்து தரும் Contractகாரர்களையும் தேர்வுசெய்து கொடுத்தவர். ஒவ்வொரு வேலையிலும் பல அபிப்பிராயங்கள் இருந்தாலும், அவைகளை எல்லாம் ஆராய்ந்து, தைரியமாக ஒரு முடிவு எடுக்கக்கூடியவர். HR&CE சம்பந்தமான காரியங்களை ஏற்று விரைவில் செய்து முடிப்பவர். எல்லா கலைநிகழ்ச்சிகளையும் நல்ல முறையில் ஏற்பாடு செய்து மிகச் சிறப்பாக நடத்திக் கொடுத்தவர்.

துணைத்தலைவர் V.RM.M. ராமநாதன், பட்டுக்கோட்டை சேது என்று என்னால் அழைக்கப்படுபவர். எனது பால்ய நண்பர். அதிகம் பேசாது விஷயங்களில் கவனமாக இருப்பவர். கமிட்டி செய்யும் முடிவுகளுக்கு சம்மதம் கொடுப்பவர். பல வருடங்களுக்குப் பிறகு இருவரும் சேர்ந்து குடமுழுக்கு வேலைகளில் ஈடுபட்டது குறித்து மிக்க மகிழ்ச்சி. குடமுழுக்கு காண வரும் பக்தர்களுக்கு எங்கிருந்து பார்த்தாலும் எல்லாக் கோபுரங்களும் தெரியவேண்டும் என்பதில் முக்கிய கவனம் செலுத்தி சுற்றுப்புறங்களைச் சுத்தப்படுத்தியவர்.

மற்றும் இணைச் செயலாளர்களான Dr.T. ராமநாதன், VE. வயிரவன் இருவரையும் முன்பே நன்கு அறிந்திருந்தாலும் இக்கமிட்டியின் மூலம் கூடுதலாக அடுத்து பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. VE. வயிரவனும் சினிமா சம்பந்தமான தொழிலில் ஈடுபட்டிருப்பதால் அவருடைய அனுபவம் / ஆலோசனைகள் இன்னிசை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்ய மிகவும் உதவியாக இருந்தது. Dr. ராமநாதன் உதவியால் பல உள்ளூர் நடவடிக்கைகளை விரைவாகச் செய்து முடிக்க முடிந்தது.

பொருளாளர் C. நாச்சியப்பன் அவர்களும் குடமுழுக்குக் கமிட்டிக்கு முன்பே வலையபட்டியில் தங்கியிருக்கும் நாட்களில் அறிமுகம் ஆகி குடும்ப நண்பரானவர். Walking Friend ஆவார். வலையபட்டி நகரத்தார்கள் எல்லோருக்கும் அறியப்பட்டவர். கமிட்டியில் பொருளாளரான பின் தினமும் குடமுழுக்கு பற்றியும் புதிய வேலைகள் பற்றியும் கலந்து பேசி முடிவெடுக்க உதவியவர். அபிப்பிராய வித்தியாசங்கள் என்று வரும்போது எல்லோரையும் சமாதானப்படுத்தி காரியங்களை நடத்தும் திறமையுள்ளவர். தான்மட்டும் அல்லாது தன் கடை ஆட்களையும் எல்லா வேலைகளுக்கும் உதவச் செய்தவர். பலகோடி வரவு செலவுகளை எளிதாகச் செய்யக்கூடிய திறமை உள்ளவர். பணவரவு செலவுகள் விபரங்களை விரல் நுனியில் வைத்திருப்பவர்.

ஒவ்வொரு புதிய வேலையையும் முடிவு செய்வதற்கு முன்பும் எப்படி எவ்வாறு செய்வது என்று கலந்து பேசவும் ஆலோசனைகள் கூறவும் ஆர்க்கி டெக்ட் பெரியண்ணன், இஞ்சினியர் வயிரவன் போன்றவர்கள் கிடைத்தது எனது பாக்கியமாகக் கருதுகிறேன்.

ஆரம்பத்திலிருந்து இறுதி வரை கோவிலில் செய்த புதிய / பராமரிப்பு வேலைகளையும் உடனுக்குடன் தன் ஆட்களை வைத்து செய்து கொடுத்தும், தானும் தன் பல வேலைகளுக்கிடையே என்னோடு தினமும் பலமுறை கோவிலுக்கு வந்தும் உதவியவர் இஞ்சினியர் வயிரவன். மிகுந்த கடவுள் பக்தியும், தர்ம சிந்தனையும் உடையவர்.

பெரியண்ணன் அவர்களும் வலையபட்டிக்கு வரும் நாட்களை முன் கூட்டியே தெரியப்படுத்தி அந்த நாட்களில் கோவிலின் உள்ளே / வெளியே உள்ள வேலைகளுக்கு ஆலோசனை தந்தவர். இவ்விருவருடன் வேலை செய்த நாட்கள் மறக்க முடியாதவை.

கடந்த இரண்டு வருட குடமுழுக்கு வேலைகளில் எனக்கு பல புதிய நண்பர்கள் மற்றும் ஒவ்வொரு வேலைக்கும் யார் யார் எங்கு எங்கு உள்ளார்கள் என்ற விபரத்தையும் தெரிந்து கொண்டேன். அதோடு மட்டுமில்லாமல் எனக்கு இதுவரை தெரிந்திராத நம்மூர் நகரத்தார்களைப் பற்றியும் அவர்களுடன் பழகும் வாய்ப்பு கிடைத்ததற்கும் அந்த மலையாண்டிக்கு நன்றி.

கட்டுரையின் அளவு கருதி எல்லோரைப் பற்றியும் எழுத இயலாத நிலையில் இருந்தாலும் கீழ்க்கண்டவர்களையும் பற்றி குறிப்பிடாமல் இருக்க முடியாது.

| | | |
|---|---|---|
| ஸ்தபதி ஷண்முகநாதன் | – | காளையார்கோவில் |
| ஸ்தபதி கண்ணன் | | |
| கல் ஸ்தபதி வேலு | – | கொப்பனாபட்டி – காட்டுப்பட்டி விலக்கு |
| கல் ஸ்தபதி பாண்டியன் | – | நமனசமுத்திரம் |
| எலக்ட்ரிக் டெக்னிஷியன் சண்முகம் | – | வலையபட்டி |
| கொட்டகை முத்து | – | மேலைச்சிவபுரி |
| கட்டட மேஸ்திரி | – | ரவி |
| கிரில் துரை | – | பொன்னமராவதி |
| செட்டிநாடு கன்ஸ்ட்ரக்ஷன் | – | ஆரியா |

நாம் எல்லோரும் தற்பொழுது காணும் கோவில் மேற்கண்டவர்களின் கைவண்ணத்தினால் உருவாக்கப்பட்டது.

இனியும் எனது அனுபவங்களை எழுதவேண்டும் என்ற ஆவல். எனினும் கட்டுரையின் நீளம் கருதி இத்துடன் நிறைவு செய்கிறேன். ■

# திருமந்திரத்தில் சக்தி வழிபாடு



நீதியரசர் முகவை **முருகபூபதி**

**"தேவர்குறளும் திருநான்மறையின் முடிவும்**
**மூவர்தமிழும் முனி சொன்ன கோதையும்**
**திருவாசகமும் மூலன் சொன்ன சொல்லும்**
**ஒரு வாசகம் என்று உணர்"**

இது தமிழ் மூதாட்டி ஔவையின் பாடல், இதில் திருமந்திரத்தை மூலன் சொன்ன சொல் என்று குறிப்பிடுகிறார். வடக்கே இருந்து இரண்டு சுந்தரங்கள் வந்தன. ஒன்று திருத்தொண்டர் தொகை தந்த சுந்தரர். மற்றொன்று திருமூலர் என ஆன சுந்தரநாதன். கயிலாயத்தில் இருந்து அகத்தியரிடம் தமிழ் கற்றுக் கொள்வதற்காக, தவத்தையும் நல்ல பண்புகளையும் மட்டுமே சுமக்கும், ஒழுக்கத்தையே பொதியாக சுமந்து விளங்கும் பொதிகை மலையை நோக்கி வந்த சுந்தரநாதன், சாத்தானூரில் இறந்து கிடந்த மூலன் உடம்பில் புகுந்தான். அஷ்டமா சித்திகள் பெற்றவன் என்பதனால் கூடு விட்டு கூடு பாய்ந்து மூலன் என்ற தமிழ் உடம்பில் புகுந்த மாத்திரத்திலே அவன் ஆன்மாவிற்கும் தமிழால் பாடல் பாடும் ஆற்றல் வந்தது. சொல்லுலகம் என்ற காட்டில் மொழி என்ற கிளையில் ஆன்மா என்ற பறவை தங்கும். எந்த கிளையில் ஆன்மா என்ற பறவை தங்குகிறதோ அதன் இயல்பாகவே மாறும். அதுபோல தமிழ்மொழி பேசிய மூலன் உடம்பில் சுந்தரநாதன் என்ற ஆன்மா நுழைந்ததும் தமிழ்மொழி பேசும் ஆற்றல் வந்தது. அதுமட்டுமில்லை வேத மார்க்கத்தினால் இருட்டடிக்கப்பட்டு இருந்த (பதி–பசு–பாசம்) என்ற முப்பொருள் உண்மையை மையமாக வைத்து மீண்டும் தமிழ்ச் சமுதாயம் கண்ட சைவ நீதி என்ற உண்மையை தமிழால் தமிழனுக்கு சொல்லும் வன்மையையும் திருமூலர் சொல்லி உள்ளார். அதுதான் அநாதி சைவம் எனப்படும்.

சொல்லுலகத்தில் மந்திரம் – பதம் – வண்ணம் என்று மூன்று நிலைகள் உண்டு. மந்திரம் என்றால் சொற்றொடர் எனப்படும். 'மந்' என்றால் நினைப்பது என்று பொருள். 'திரம்' என்றால் நினைப்பவரை காப்பாற்றுவது என்று பொருள். மந்திரம் என்றால் நினைப்பவரை காக்கும் சொற்றொடர் எனப் பொருள்படும். ஒருவருடைய சொல் நினைப்பவரைக் காக்கும். ஆற்றலை எப்பொழுது பெறும் என்றால் சொல்லைச் சொல்லுபவன் கல்வி, கேள்வி, ஞானம்

போன்றவைகளில் சிறந்தவனாகவும், அன்பு, பண்புகளில் உயர்ந்தவனாகவும் கருவி, கரண ஒழுக்கங்களில் தவறாதவனாகவும் விளங்கினால் அவனுடைய சொற்கள் தெய்வீகத் தன்மை பெறும். இந்த ஆற்றல்களைச் சமயக் குரவர்கள் பெற்றிருந்தார்கள். ஆகவே அவர்கள் பாசுரம் பாடியே அதிசயத்தையும் அற்புதத்தையும் காண்பித்து பேசப்பட்ட கடவுட்கொள்கைகளில் சைவ நீதியே சிறந்தது என்று நிலைநாட்டவும் செய்து பிறந்த மந்திரங்களில் நமசிவாயம் என்ற மந்திரமே சிறந்தது என்று நிலை நாட்டவும் செய்துள்ளார்கள். இப்படிப் பாசுரங்களில் ஆச்சரியத்தை உண்டாக்கிய சமயக் குரவர்களைப் போல நம்மால் செய்ய முடியவில்லை, ஏன்? மேலே சொன்ன மூன்று தகுதிகளும் ஒருங்கே நம்மிடத்தில் யாரிடத்திலும் இல்லை என்பதுதான் உண்மை. தெய்வ நம்பிக்கையை கூட அற்புதத்தையும் ஆச்சரியத்தையும் காட்டி வளர்த்து வந்ததனால் அதுபோல அற்புதத்தையும், ஆச்சரியத்தையும் கண்கூடாகக் காட்டினால் தான் நம்ப முடியும் என்று பகுத்தறிவுவாதம் பேசுகிறார்கள். அதில் தவறில்லை.

இறைவன் மந்திர வடிவானவன் என்பதை திருஞானசம்பந்தர் மந்திரமாவது திருநீறு என்றார்.

“மறைமொழி மாந்தர் ஆணையில் கிளர்ந்த
நிறை மொழிதானே மந்திரம்” என்பார் தொல்காப்பியர்.

“நாதவிந்துகலாதி நமோநம
வேத மந்திர ஸ்வரூப நமோ நம” என்பார் அருணகிரியார்.

இப்படி திருமூலர் பாடிய மூவாயிரம் பாடல்கள் **“திருமந்திரம்”** என்று பெயர் பெற்றுள்ளன என்றால் அந்த பாடல்களின் அருமை பெருமைகளை முழுவதும் சொல்லமுடியாது. இருந்தாலும் தலைப்பை ஒட்டி சிலவற்றைச் சிந்திப்போம்.

**“திரு”** என்ற சொல்லுக்கு இறவாத இன்ப – அன்பு எனப் பொருள்படும். திரு என்ற அடைமொழி உடைய ஆன்ம இலக்கியம் ஏதாவது ஒன்றைப் படித்தால் அது என்ன செய்யும் என்றால் இதுநாள் வரை ஆன்மாவை நோய் போல் ஒட்டி வந்த பிறப்பு இறப்பு என்ற நோயை உயிரில் இருந்து கழித்து விடும். அப்படி இறப்பு கழிக்கப்பட்ட உயிர் – பிறப்புக்கு தகுதி அற்றதாகிவிடும். பிறப்புக்கு தகுதி இல்லாத ஜீவனை சிவமெனச் சிறக்கச் செய்து உய்வு என்ற உரிமையை தந்து இறைவனுக்கு உரியதாக ஆக்கும். ஆன்மா என்றைக்குமே சுதந்திரம் இல்லாத ஒன்று அது இறைவனையோ அல்லது பாசத்தையோ சார்ந்திருக்கும்.

திருமூலரின் திருமந்திரம் 12 திருமுறைகளில் 10வது இடத்தைப் பிடித்துள்ளது. காலத்தால் முந்தியது. திருமந்திரம் என்றதுமே அது சிவத்தைப் பற்றித் தானே இருக்கும் என்று நாம் சிந்திப்போம். அங்கே சக்திக்கு என்ன

வேலை என்று எண்ணுவோம். ஆனால் சாக்த தர்மத்தில் வாழும் சக்தி உபாசகர்கள் கூட ஆச்சர்யப்படும் வகையில் திருமந்திரத்தில் பராசக்தியைப் பற்றி ஒருபாடு குறிப்பிட்டுள்ளார்.

"விண்ணின்று இழிந்து வினைக்கீடமாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளை தலைக்காவல் முன்வைத்து
விண்ணன்று உருக்கி ஓர் ஒப்பிலா ஆனந்த
கண்ணென்று காட்டி களிம்பறுத்தானே"

அதாவது ஆன்மாக்களை மேவி உள்ள களிம்பை அகற்றுவது இறைவனின் கருணையினால் நிகழ்வது. அதனால் ஆன்மாவை விட்டு எப்பொழுதும் இறைவன் நீங்கமாட்டான் காவலாக இருப்பான் என்று திருமூலர் கூறுகின்றார். தண்ணின்ற காவல், தலைப்பெய்தி என்பதன் பொருள், காரணங்கள், இரண்டு என்றும், ஒன்று அநாதி காரணம் மற்றொன்று ஆதிகாரணம் என்றும் பிரிக்கப்படுகிறது. அநாதி தொட்டே ஆன்மாவை மேவி உள்ள (பாசம்) ஆணவம் போன்ற மும்மலங்களின் வஞ்சனை காரணமாய் (பசு) ஆன்மா தன் வலிமை குன்றி இருக்கும் என்றும் இதற்கு துணையாக (பதி) ஆகப்பட்ட இறைவன், மனம், புத்தி, சித்தி போன்ற மூன்று அந்தக் கரணங்களை துணைக்கு வைத்து உதவுவார் என்றும் துணையாக வந்த அந்த கரணங்கள் தன்னுடைய நோக்கத்தை மறந்து ஆன்மாவை உண்மை நெறியை விட்டு விலகச் செய்து இறையாண்மையை மறைக்கும். இது, அநாதி காரணம். இதற்கு ஆன்மா எந்த வகையிலும் பொறுப்பு இல்லை. இந்த அநாதி காரணமாய் உண்மை நெறியை விட்டு விலகிய ஆன்மா வலிமை குன்றும். அப்பொழுது ஆணவம் மேவும். மேவிய ஆணவம் ஆன்மாவை – நன்றிகெட்ட தன்மை என்ற வினைவயப்படச் செய்யும். இப்படி வினைவயப்பட்ட ஆன்மாவுக்கு அந்தக் கரணங்களும் தன் நிலை மறந்து மாயை வழி நடத்தும். வினை வழியே செல்லும். துணைக்கு வந்த அந்த கரணங்களும் தன் கடமையை மறந்து வினைவயப்பட்டதனால் மீள வகையறியாது, இழந்த இறையாண்மையைப் பெற முடியாமல் தத்தளிக்கும். இது ஆதிகாரணம் எனப்படும் ஆன்மாக்களை கரை சேர்க்கும் பொருட்டு பதியான இறைவன் ஆகமம், வேதம் போன்றவைகளை அருளியதோடு அல்லாமல், இறைவன் தனது உள்ளம் என்ற கயிலாயத்தில் இருந்து அகம் அல்லது நான் என்ற முனைப்புடன் பிரிந்து சென்ற ஆற்றலே பராசக்தி எனப்படும். பரமசிவத்தின் உள்ளத்தில் இருந்து பிரிந்ததனால் அந்த ஆற்றல் பராசக்தி எனப்பட்டது. இவைகள் யாவும் அருவந்நிலையில் நடக்கும் சம்பவங்கள்.

இந்த சக்திதான் எப்படியெல்லாம் வடிவம் மாறுகிறது, என்ன செய்கிறது என்பன போன்ற உண்மைகளை திருமூலர் தாம் பாடிய திருமந்திரத்தில் நான்காம் தந்திரத்தில் ஒன்பது தலைப்புகளில் 373 மந்திரங்களாகப் பாடியிருக்கிறார்.

ஆன்மாக்களை உய்வடையச் செய்ய வேணும் என்ற இறைவனின் உள்ளமே அருளாக மாற அதுவே சக்தியாய்ப் பரிணமித்தது என்றும் அரனுக்கு சக்தியாய் விளங்கும் அருட்சக்தியே இறைவன் என்பவனின் திருஉள்ளபடி மூன்று கண்டங்கள் என்று திரிபுரையாகவும் அவை, சக்கரம், மந்திரம் என ஆனது என்றும் மாமாயை எனப் பிரிந்து, சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என்றும் விந்து, வைகரி வாக்கு – ஓம் என்ற பிரணவம் மற்றும் ஆறு இறுதிகளை உடைய மந்திரம் என்றும், மாமாயை எனப் பிரிந்தது சுத்தமாயை, குடிலை, விந்து குண்டலினி மாயை எனப் பிரிந்து அதுவே அசுத்தமாயை, அதோமாயை, மோகினிமாயை எனவும், மாமாயையானது திரிபுரமாயை என்றும், திரிபுரமாயை யானது ஒலி–உலகு, பொருள்–உலகு எனவும் மூன்று கண்டங்கள் (அக்கினி – சூரிய – மதி எனவும் பிரிந்து திரிபுரை எனப்பட்டவள் பரை – அபிராமி – அகோசரி என்றும் உருவானது என்றும்,

> தாளணி, நூபுரஞ் செம்பட்டுத் தானுடை
> வாரணி கொங்கை மலர்க் கண்ணல் வாளிவில்
> ஏரணி அங்குச பாசம் எழில் முடி
> காரணி மாமணி குண்டலக் காதிக்கே

என்று இராஜ ராஜேஸ்வரியையும்

> குண்டலக்காதி கொலைவில் புருவத்தாள்
> கொண்ட வரத்தின் மன்னு கோலத்தாள்
> கண்டிகையாரங் கதிர்முடிமாமாதிச்
> சண்டிகை நாற்றிசை தங்கி நின்றாலே

என்று சண்டிகா தேவியைப் பற்றியும்

> நின்ற திரிபுரை நீளும் புராதனி
> குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை
> நன்றறி கண்டிகை நாற்காற் கரீடனி
> துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே

என்று கஜலட்சுமியையும்

சுத்தவம் பாரத்தனத்தி சுகோதயன்
வத்துவ மாயா ளுமாசக்திமாபரை
அத்தகையான மனோரணி தானுமாய்
வைத்தவக் கோல மதியளவாகுமே

என்று மனோ ஆரணியைப் பற்றியும் என்றெல்லாம் சொல்லால் அடையாளம் காட்டிய திருமூலர் எங்கு சிவமுள்ளதோ அங்கே தானும் பிரியாது இருப்பாள் என்பதையும் எல்லாம் சக்தியின் செயலே என்றாலும் எங்கே சிவம் உள்ளதோ அங்குதான் சக்தி செயல்பட முடியும் என்பதை சிவமில்லையேல் சக்தி இல்லை என்பதை

தானெங் குதங்குள தையன் மாதேவி
ஊனெங்குள அங்குள்ளுயிர்க் காவலன்
வானெங்குள அங்குளேவந்து மப்பாலாம்
கோனெங்கும் நின்ற குதிபல பாரே

என்றும்,

சக்திராகத்தில் தான் நல்உயிராகி
ஒத்தபாசமலம் ஐந்தோடு ஆறாறு
தத்துவம் பேதம் சமைத்துக் கருவியும்
வைத்தனன் ஈசன் மலமறும் ஆறே

என்ற சைவ சித்தாந்தத்தின் கருவுக்கு சக்தி தத்துவம் எப்படி செயல்படுகிறது அல்லது சக்தி எப்படி எல்லாம் சிவத்தால் செயல்படுத்தப்படுகிறது என்ற உண்மையை நாம் உணர முடிகிறது.

சக்தி என்பது திருஉள்ளத்தின் வெளிப்பாடே என்றும், சிவத்தின் ஆணையின் வண்ணம் செயல்படுவது சக்தி என்ற உண்மையை சக்தியை வழிபடும் அன்பர்களும் உணர்ந்து கொள்ள வேணும் என்பதே திருமூலர் நமக்கு உணர்த்த நினைக்கும் உண்மை என்றும் ஆற்றலாய் வந்த ஒன்றின் அருளைப் பெறாமல் திருஉள்ளத்தை சேரமுடியாது என்பதே திருமூலர் காட்டும் பராசக்தி.

நன்றி : புதிய உறவு தமிழ் மாத இதழ் மே 2022, புதுச்சேரி

# கயிலை மலையானுக்கு உகந்த கயிலாய வாத்தியம்





**பிரேமா நாராயணன்**
முத்த பத்திரிக்கையாளர்

சிவாலயங்களுக்கும் சிவாலய உற்சவங்களுக்கும் செல்பவர்கள் கண்டிப்பாக கயிலாய வாத்திய இசையைக் கேட்டு மகிழ்ந்திருப்பார்கள். மிகவும் கம்பீரமான அதிர்வலைகளைக் கொண்ட கயிலாய வாத்தியம் மிகப் பழைமையானது. செவிகளின் வழியே இதயத்துக்குள் நுழைந்து, நம்மை மறந்து லயிக்கச் செய்யும் இந்தக் கயிலாய வாத்தியம், சிவனுக்கு மட்டுமே வாசிக்கப்படும் வாத்தியம் என்பது குறிப்பிடத்தக்கது. பெரிய பெரிய வாத்தியக் கருவிகளைத் தோள்களின் வழியே மாட்டிக்கொண்டு அவற்றை வாசித்தபடி அந்தக் குழுவினர் கம்பீரமாக நடந்து வருவதே அழகாக இருக்கும்.

திருமுறைகளில் கயிலாய வாத்தியம் பற்றி குறிப்பு உள்ளது. கோயில்களில் பூதகணங்கள் இவ்வாத்தியங்களை வாசிப்பது போல சிற்பங்களை நாம் பார்த்திருப்போம். சிற்பங்களில் மட்டுமே இடம்பெற்றிருந்த இப் பாரம்பரிய வாத்தியம் மீண்டும் புத்துயிர் பெற்று, சிவனுக்கான திருவிழாக்கள் மற்றும் முக்கிய நாட்களில் பரவலாக வாசிக்கப்பட்டு வருவது பாராட்டுக்குரியது. அதிலும் மகிழ்ச்சியான செய்தி என்னவெனில், பல இளைஞர்கள் இவ்வாத்தியங்களைக் முறைப்படி கற்றுக்கொண்டு வாசித்து வருவதுதான்.

கயிலாய வாத்தியம் என்பது ஒருவர் மட்டும் வாசிக்கக்கூடிய வாத்தியம் அல்ல. பலவிதமான வாத்தியங்களைப் பலர் ஒன்றாகச் சேர்ந்து வாசிக்கும்

பொழுது ஏற்படும் நாதமே கயிலாய வாத்தியம் என்று அழைக்கப்படுகிறது. கயிலாய வாத்தியத்தில் சங்கு கொண்டு ஊதப்படுகின்ற சங்கநாதம் மட்டுமே தனியாக வாசிக்கப்படக் கூடியது. அதைத் தவிர மற்ற வாத்தியங்கள் எதுவும் தனியாக வாசிக்கப்படமாட்டாது. இது சிவனுக்கு மிகப் பிடித்த வாத்தியம், சிவனைப் பிடித்துக் கொண்டவர்களுக்கான வாத்தியம் என்றும் கூறலாம். "அவன் அருளாலே அவன்தாள் வணங்கி" என்பது போல, சிவன் அருளை இந்தச் சிவ வாத்தியத்தில் உணர முடியும். இந்த அடர்ந்த, கட்டுக்கடங்காத ஓசையுடன் கூடிய இசை, கேட்போரை மயிர்க்கூச்செரியச் செய்யும் வல்லமை பெற்றது.

கயிலாய வாத்தியத்தை 'பஞ்ச வாத்தியம்' என்றும் சொல்வார்கள். சிவனடியார்கள் மட்டுமே இதை வாசித்து வருகின்றனர். இதனை வாசிப்பதற்கு உடலிலே ஒரு வகையான ஸ்திரத்தன்மையும், மனதினை ஒருநிலைப்படுத்துதலும் இருக்க வேண்டும். குழுவில் உள்ள ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான வாத்தியத்தினை வாசிப்பார்கள்.

உடல் (மேளம் போன்று அமைப்புடையது, 5 கிலோ கனமுடையது), பிரம்மதாளம் (4 கிலோவில் இருந்து 15 கிலோ வரை எடை இருக்கும்), குட்டைத்தாரை, கொம்புத்தாரை, திருச்சின்னம், சங்கு (காற்று வாத்தியம்), கொக்கரை (மாட்டுக் கொம்பினால் ஆன காற்று வாத்தியம்). இவை அனைத்தும் இப்போது நடைமுறையில் வாசிக்கப்படும் வாத்தியங்கள்.

கயிலாய வாத்தியம் உலகுக்கு வந்த வரலாறு சுவையானது. திருவையாற்றில் அப்பர் பெருமானுக்கு, சிவபெருமான் கயிலாய காட்சி கொடுக்கும் பொழுது, அந்த நிகழ்வுக்கு நந்தி எம்பெருமானை அழைத்து, நமது கயிலாயத்தில் உள்ள பூதகணங்கள் எல்லோரையும் அனைத்து வாத்தியங்களையும் எடுத்துக்கொண்டு திருவையாறு வருமாறு பணிக்கிறார். அவ்வாறு வந்த பூதகணங்கள் சில வாத்தியங்களை விட்டுச் சென்றனர். அந்த வாத்தியங்கள் தான் தற்போது இருக்கும் வாத்தியங்கள். கயிலாய வாத்தியங்களில் பல ஆயிரக்கணக்கான வாத்தியங்கள் இருந்திருக்கின்றன. அவற்றுள் பல வகைகளும் இருந்திருக்கிறது.

கயிலை வாத்தியங்கள் என அழைக்கப்படுபவை அனைத்துமே தமிழ் இசைக் கருவிகள். யாழ், கின்னரம், குழல், சங்கு, தூம்பு, வயிர், தண்ணுமை, முழவு, முரசு, பறை, கிணை, துடி, தடாரி, பாண்டில் மற்றும் இன்னியம் போன்று பல்வேறு வாத்தியங்கள் உள்ளன.

திருமுறையில் சொல்லப்பட்ட மற்ற இசைக்கருவிகளான வீணை, கொக்கரை, குடமுழவு முதலியனவற்றைப் பற்றி ‘கல்லாடம்’ என்ற நூலில் விளக்கங்கள் காணப்படுகின்றன. பன்னிரெண்டாவது திருமுறையான பெரியபுராணத்தில் மற்றொரு இசைக்கருவியான குழல் செய்வதைப் பற்றியும், இசைப்பதைப் பற்றியும் குறிப்பு உள்ளது.

ஆலங்காட்டு பெருமானின் திருப்பதிகத்தில் கயிலாய வாத்தியங்கள் பற்றிப் பாடப்பட்டுள்ளது.

அந்த பாடல் இதோ...

**“துத்தம், கைக்கிள்ளை, விளரி, தாரம், உழை, இளி ஓசைபண் கெழுமப் பாடிச்**
**சச்சரி, கொக்கரை, தக்கை யோடு, தகுணிதம் துந்துபி தாளம் வீணை**
**மத்தளம், கரடிகை வன்கை மென்தோல் தமருகம், குடமுழா, மொந்தை வாசித்**
**தத்தனை விரவினோ டாடும் எங்கள் அப்பனிடம் திருஆலங்காடே”**

என்று அந்தப் பாடல் விவரிக்கிறது.

கயிலாய வாத்தியங்களாகக் கூறப்படும் ஆயிரக்கணக்கான இசைக்கருவிகளில் சிலவற்றின் பெயர்கள் தான் இப்போது நமக்குத் தெரியும்.

ஆகுளி, இடக்கை, இலயம், உடுக்கை, ஏழில், கத்திரிகை, கண்டை, கரதாளம், கல்லலகு, கல்லவடம், கவிழ், கழல், காளம், கிணை, கிண்கிணி, கிளை, கின்னரம், குடமுழா, குழல், கையலகு, கொக்கரை, கொடுகொட்டி, கொட்டு, கொம்பு, சங்கு, சச்சரி, சலஞ்சலம், சல்லரி, சிரந்தை, சிலம்பு, சின்னம், தகுணிச்சம், தக்கை, தடாரி, தட்டழி (தோலிசைக் கருவிகளில் ஒன்று, திருச்செந்துறைக் கோயில் கல்வெட்டு குறிக்கிறது), தத்தளகம், தண்டு, தண்ணுமை, தமருகம், தாரை, தாளம், துத்திரி, துந்துபி, துடி, தூரியம், திமிலை, தொண்டகம், நரல் சுரிசங்கு, படகம், படுதம், பணிலம், பம்பை, பல்லியம், பறண்டை, பறை, பாணி, பாண்டில், பிடவம், பேரிகை, மத்தளம், மணி, மருவம், முரசு, முரவம், முருகியம், முருடு, முழவு, மொந்தை, யாழ், வங்கியம், வட்டணை, வயிர், வீணை, வீளை, வெங்குரல்.

இவை தவிர இக் கருவிகள் குறித்த ஆராய்ச்சி தொடர்ந்து நடந்து வருகிறது. புதுவையைச் சேர்ந்த சிவ ராமலிங்க ஐயா அவர்கள் இந்த ஆராய்ச்சியை மேற்கொண்டிருக்கிறார். கயிலாய வாத்தியம் போல, இன்னும் மறக்கப்பட்ட நம் பாரம்பரியக் கலைகள் பல இது போல புத்துயிர் பெற வேண்டும். பக்தர்களுக்கும் பொதுமக்களுக்கும் புத்துணர்வை வழங்க வேண்டும்.

# மலைமேல் இருக்கும் பிள்ளையே

1970ஆம் ஆண்டிலிருந்து ஸ்ரீ மலையாண்டி சுவாமி சந்நிதியில் இருக்கும் பாடல்





சிவ. செல்வராஜன்

மலைமேல் இருக்கும் பிள்ளையே
மனதில் பூக்கும் முல்லையே
கடல் அலைபோல் கூட்டம் உன்னைத்தேடி
அன்பால் தருவார் ஒருகோடி!

கற்பகமே உன்னை நம்பிடுவோம் – உன்
பொற்பதம் பணிந்து கும்பிடுவோம்!

வலையபட்டி பூமியெங்கும் செழித்திருக்க – இங்கு
வாழ்பவர்கள் செல்வத்தில் குளித்திருக்க
வைத்தோம் உன்னிடத்தில் நம்பிக்கை
வாழ்த்தட்டும் வலம்புரித் தும்பிக்கை!

கற்பகமே உன்னை நம்பிடுவோம் – உன்
பொற்பதம் பணிந்து கும்பிடுவோம்!

வையாபுரியில் கங்கைநதி ஓடிவர
ஐயா உன் கருணை மீன்கள் நீந்திவர
புண்ணிய தீர்த்தம் இது என்றாக
பூஜைகள் செய்கின்றோம் நன்றாக!

கற்பகமே உன்னை நம்பிடுவோம் – உன்
பொற்பதம் பணிந்து கும்பிடுவோம்!

கற்றவர்கள் இவ்வூரில் நிறைந்திடவே
கஷ்டங்கள் துன்பங்கள் மறைந்திடவே
அபிஷேகம் செய்கின்றோம் உனை வேண்டி – நீ
ஆணையிடு! ஆணையிடு! மலையாண்டி!

கற்பகமே உன்னை நம்பிடுவோம் – உன்
பொற்பதம் பணிந்து கும்பிடுவோம்!

முத்தில் பவளத்தில் முத்தாரம்
தங்கத்தில் வைரத்தில் மணியாரம்
நித்தம் அலங்கரித்து வணங்குகின்றோம்!
நீயிருக்கப் பயமின்றி வாழுகின்றோம்!

கற்பகமே உன்னை நம்பிடுவோம் – உன்
பொற்பதம் பணிந்து கும்பிடுவோம்!

அழகாய் அம்சமாய் அமையட்டும் கும்பாபிஷேக மலர்!
இதை பார்த்தோர் படித்தோர் வாழ்த்தட்டும் பலர்!
இன்றும் என்றும் வலையபட்டி வளமான பட்டி!
என்றே வாழ்த்திப் பாடுகிறேன் செல்வராஜன் செட்டி!




# கோவிலூர் மடாலயத்தின் ரிஷிகேஷ் ஆசிரமம்



தமிழ்ச்செம்மல் முனைவர் **சே. குமரப்பன்**
முதல்வர் (ப.நி)
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்.

**ஆசிரமம் தோற்றம் :**

புண்ணிய பூமியான ரிஷிகேஷில் கோவிலூர் மடாலயத்தின் ஆசிரமம் ஒன்று உள்ளது. சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் நாச்சியப்ப சுவாமிகளுக்கும் தயானந்த சரஸ்வதி சுவாமிகளுக்கும் நட்பு ஏற்பட்டது. அவ்வாறு அவர்கள் உரையாடுகையில் தயானந்த சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் நாச்சியப்ப சுவாமிகளிடம் நீங்கள் ஒரு ஆசிரமத்தை நிறுவுங்கள் என்று கூறி அவருடைய மடத்தின் வாயிலாக அவருடைய ஆசிரமத்திற்கு அருகே ஒரு இடத்தை வாங்குவதற்கு உதவி செய்துள்ளார். அந்த இடத்தில் நாச்சியப்ப சுவாமிகள் மிகச் சிறப்பான ஒரு ஆசிரமத்தை கட்டி உள்ளார். இந்த ஆசிரமம் கட்டும் பணியை மறைந்த தெய்வத்திரு மெய்யப்ப சுவாமிகளும் அன்றையிலிருந்து இன்று வரை அந்த ஆசிரமத்தை சிறப்பாக நிர்வகித்து வரும் மெய்யப்ப சுவாமிகளின் மனைவி விசாலாட்சி ஆச்சியும் இருந்து கட்டிடப் பணிகளை மேற்கொண்டு பூர்த்தி செய்து அதை செயல்பாட்டுக்கு கொண்டு வந்துள்ளனர்.

### ஆசிரமம் அமைப்பு :

இந்த ஆசிரமம் மிகுந்த வசதிகளுடன் ரம்யமான சூழலில் உள்ளது. மிகப் பெரிய ஆலமரம். ஆலமரத்திற்கு கீழே விநாயகர் ஆலயம். அலுவலகத்திற்கு எதிரே கோவிலூர் மடாலயத்தைத் தோற்றுவித்த முத்துராமலிங்க ஆண்டவருடைய சிலை. விநாயகர் கோயில் அருகே நாச்சியப்ப சுவாமிகள் சிலை, திருவள்ளுவர் சிலை மற்றும் சில தெய்வங்களின் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன.

### பயணியர்க்கு வசதிகள் :

பயணிகள் தங்குவதற்கு அனைத்து வசதிகளுடன் கூடிய 60 அறைகள் உள்ளன. சமையலறை, உணவு உண்பதற்கான அறை, கூட்டம் நடத்த அறை எனப் பல வசதிகள் உள்ளன. தென்னிந்தியாவிலிருந்து குறிப்பாகத் தமிழ்நாட்டில் இருந்து ஆயிரக்கணக்கான பயணிகள் இங்கு கட்டணம் செலுத்தி உணவு அருந்துகின்றனர். வாழ்க வளமுடன் மற்றும் பல ஆன்மீக அமைப்புகள் 40, 50 பேர் என்ற எண்ணிக்கையில் இங்கு அழைத்து வந்து மூன்று நாட்கள் முதல் பத்து நாட்கள் வரை முகாம் நடத்துகின்றனர். அவர்களே சமையல்காரர்களைக் கூட்டி வந்து சமைத்து உணவு பரிமாறும் வசதி உள்ளது. வேதம் படிக்கும் பிராமண மாணவர்களுக்கு வேத பாடங்கள் கற்பிக்கப்பட்டு வருகிறது. காலை வேளையில் இலவசமாக யோகா கற்றுக் கொடுக்கப்படுகிறது.

### நடைபெறும் ஆன்மீக சேவைகள் :

நாச்சியப்ப சுவாமிகள் விருப்பத்திற்கு இணங்க கோசாலை உள்ளது. அதில் பசு மாடுகள் வளர்க்கப்பட்டு வருகின்றன. மேலும் நாச்சியப்ப சுவாமிகள் விருப்பப்படி ஒரு மாண்டிசேரி மழலையர் பள்ளி நடந்து வருகிறது. 110 மாணவ மாணவிகள் இலவசமாகக் கல்வி பயின்று வருகின்றனர். ஆசிரமம் மிக ரம்யமான சூழலில் உள்ளது. ஆசிரமத்தில் இருந்து 300 மீட்டர் தூரத்தில் கங்கை நதி கரைபுரண்டு ஓடுகிறது.

இந்த ஆசிரமத்தில் வந்து தங்கிச் சென்ற பலர் அவர்களது பிறந்தநாளுக்கு பணம் அனுப்புகின்றனர். அந்த பணத்தைக் கொண்டு சாதுக்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது. மேலும் நாச்சியப்ப சுவாமிகள் இங்கு வருகிற பக்தர்களை இந்த ஊரில் உள்ளவர்கள் ஏமாற்றுகிறார்கள், ஆன்மீக பொருட்களை தரம் குறைவாகவும் அதிக விலைக்கும் விற்றுக் கொண்டிருக்கிறார்கள். எனவே ஆன்மீகப் பொருட்களை ஆசிரமத்தில் வைத்து குறைந்த விலைக்குப் பக்தர்களுக்கு வழங்க வேண்டும்

என்று கூறியதன் அடிப்படையில் ஸ்படிக மாலை, ருத்ராட்சம், நவரத்தின மாலை போன்ற பல ஆன்மீகப் பொருட்கள் குறைவான விலையில் தரமாக இங்கு பக்தர்களுக்கு விற்கப்படுகின்றன. இங்கு வந்து ஒரு பத்து நாட்கள் தங்கினால் நிச்சயமாக மன அமைதி கிடைக்கும். விசாலாட்சி ஆச்சி அவர்களும் சிறப்பாக இந்த ஆசிரமத்தை நிர்வகித்து வருகிறார்கள்.

ஒருவாரமாக சுற்றுப்பயணத்தில் ரொட்டி, பூரி, சப்பாத்தி என சாப்பிட்ட எங்களுக்கு இங்கு வழங்கிய இட்டிலியும், சட்னியும் தேவாமிர்தமாக இருந்தது. பல இடங்களில் இந்தி தெரியாமல் தகவல் கேட்கத் தவிக்க வேண்டியிருந்தது. தென்னிந்தியாவிலிருந்து வருகை புரியும் எங்களைப் போன்ற ஆயிரக்கணக்கானோருக்கு தங்குமிடமும் உணவளிக்கும் இடமாகவும் சென்று வர தகவல் கூறும் மையமாகவும் வாகன வசதிகள் ஏற்பாடு செய்து தரும் சிறந்த மையமாகவும் இந்த ஆசிரமம் செயல்பட்டு வருகிறது. இதற்கு வித்திட்ட ரிஷிகேஷ் சாமிகள் என அழைக்கப்படும் மறைந்த கோவிலூர் ஆதீனம் நாச்சியப்ப சுவாமிகளை நாம் போற்றி வணங்குவோம்.

**ஆசிரம முகவரி :**

Koviloor Vedanta Mutt,
Near Swamy Dhayananda Ashram, Purani Jhadi,
Rishikesh - 249 201, Utharkand State.
Cell : 94120 75690, Phone : 0135 - 2436968



# எங்கள் ஊர்




**ஸ்ரீ கவின்** VII std
த/பெ. ஸ்ரீதர் அண்ணாமலை
ஆவுடையன் செட்டியார் வீடு


**முன்னுரை**

வலையபட்டி என்னுடைய ஊர் ஆகும். அது புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்தது. இந்த ஊர் ஒரு அழகிய சிற்றூர். அதைப் பற்றிய செய்திகளை இக்கட்டுரையில் காண்போம்.

**ஊர் அமைவிடம்**

இந்த ஊர் மதுரையிலிருந்து 87 கி.மீ தூரத்திலும், திருச்சியிலிருந்து 79 கி.மீ தூரத்திலும், காரைக்குடியிலிருந்து 49 கி.மீ தூரத்திலும், திண்டுகல்லிலிருந்து 82 கி.மீ தூரத்திலும் அமைந்துள்ளது.

**சிறப்பு**

இவ்வூர் நாட்டுகோட்டை நகரத்தார் மேலவட்டகையில் 18 ஊர்களில் ஒன்று ஆகும். எனவே இவ்வூர் செட்டிநாட்டு சமையல் கலைக்கு பெயர்போனது ஆகும். இந்தியாவிலேயே மிக சிறந்த தவில்வித்துவான் இவ்வூரைச் சேர்ந்தவர்.

**சுற்றுலாத்தலம்**

இவ்வூரில் அமைந்துள்ள அருள்மிகு மலையாண்டி திருக்கோவிலில் திருவண்ணாமலையில் ஏற்றப்படும் பெரிய தீபம் போலவே மலைமேல் ஏற்றப்படுகிறது. அதை காண ஊர் மக்கள் ஒன்றுக்கூடி வருவார்கள். அதேபோல பௌர்ணமி தினத்தன்று மலையை கிரிவலம் வருகிறார்கள். உலக பிரசித்தி பெற்ற பிள்ளையார்பட்டி திருக்கோவில் இவ்வூரிலிருந்து 35 கி.மீ தூரத்தில் அமைந்துள்ளது.

**கைவினைப் பொருட்கள்**

இவ்வூரைச் சுற்றி பனைமரங்கள் அதிகமாக உள்ளன. ஆதலால் இங்கு உள்ள மக்கள் பனை ஓலையைப் பயன்படுத்தி கூடைகளையும், விசிறிகளையும் முடைகின்றனர்.

**முடிவுரை**

நம் அன்றாட தேவைகளுக்கு சென்னை போன்ற மாநகரத்தில் வசித்தாலும் விடுமுறைக்கு நம் சொந்த ஊருக்கு செல்லும் போது ஒரு தனி மகிழ்ச்சி ஏற்படும்.

# மக்கள் கைவண்ணத்தில்
# மலையாண்டி சுவாமி



*by*

**Hareesh Lena** 5th Std

S/o Lakshmanan Annamalai & L.Annam,
Thotha Kumaran Chettiar Veedu




*by*

**K. Kamala** B.Com.,

D/o Karthikeyan



*by*

**L. Sendhil Kumaran**

Bangalore




*by*

**Chinnakaruppan Sethu**

Senior Manager in TCS,
S/o Sethu Chettiar




*by*
**RM. Uma** M.Sc., Computer Science
D/o. VKR. Ramalingam



*by*
**Premnath Sundaram**
S/o NY.Sundaram Chettiar
Seattle, USA. (Valayapatti)



*by*
**R. Abirami** 10th Std
D/o. A. Ramasamy
Pondicherry



*by*
**A. Lalitha** 8th Std
D/o. Annamalai Tamilmani




*by*
**Yashvitha Gopinath**
D/o Gopinath Sundaram - Seetha
California, USA.
(Valukaithalayan, Valayapatty)




*by*
**Yashve Gopinath**
D/o Gopinath Sundaram - Seetha
California, USA.
(Valukaithalayan, Valayapatty.)



*by*
**Tmt. Mahalakshmi Kannappan**
Singapore
(Nattarasankottai)



ஓவியம்
வலையபட்டி
**ந.ராம. நல்லப்பன்** B.Com.,
1978 ஆம் வருட கும்பாபிஷேக மலரில்
பதிப்பிக்கப்பட்டது.





# சிலப்பதிகாரம்

## கற்பனைக் கதை அல்ல

சிலப்பதிகாரம் என்பது கற்பனைக் கதையல்ல. வரலாற்று நிகழ்வு என்பதனை உலகிற்கு உணர்த்தியவர் தஞ்சாவூர் கரந்தை தமிழ்ச் சங்கத்தின், கரந்தை புலவர் கல்லூரியில் பேராசிரியராக பணியாற்றிய, மறைந்த ஆய்வு அறிஞர் பேராசிரியர் சி. கோவிந்தராசனார் அவர்கள் சிலப்பதிகாரத்தைத் திறம்படக் கற்றவர், சிலப்பதிகாரத்தில் ஊறித் திளைத்தவர். அவரின் மனதில் நீண்ட நாட்களாகவே ஓர் ஏக்கம், கனவு.

சிலப்பதிகாரத்தில் கண்ணகி பயணம் செய்த பாதை வழியாகவே ஒரு பயணம் செய்தால் என்ன என்று தணியாத தாகம் . துணிந்து இறங்கினார்.

1945ஆம் ஆண்டு கண்ணகி பயணித்த பாதை வழியாகவே இவரும் நடந்தே சென்றார். தன் ஊதியத்தை செலவிட்டு நடந்தார். பின் தன் உடமைகள் ஒவ்வொன்றையும் விற்று விற்று காசாக்கிக் கொண்டே 17 ஆண்டுகள் நடந்து முடிவில் சிலப்பதிகாரம் கற்பனைக் கதை அல்ல வரலாற்று நிகழ்வு என்பதை உலகிற்கு உணர்த்தினார்.

1945ஆம் ஆண்டு மயிலாடுதுறை அருகில் கடற்கரையில் மீனவர்களின் ஒரு சில குடிசைகளுடன் மணற் பரப்பும், மணல் மேடுகளும், கள்ளியுடன் காரைச் செடிகளும் செறிந்த புதர்களும், சவுக்கு தோப்புகளும், புனங்காடுகளும் சூழ்ந்திருந்த பட்டணம் என்று, அன்று அழைக்கப்பட்ட பகுதியே, பண்டைய புகார் நகரம் இருந்த இடம் என்பதைக் கண்டு பிடித்தார்.

கடலடி ஆய்வு செய்து கடற்கோளினால் அழிந்து கடலடியில் மறைந்து நிற்கும் நிலப்பரப்பே, காவேரிப் பூம்பட்டினம் கண்ணகி பிறந்த இடம் என்பதை உறுதி செய்தார். 1945ஆம் ஆண்டு பூம்புகாரில் ஆய்வினைத் தொடங்கிய

இவருக்கு, கால்நடையாக ஆராய்ந்து, ஆராய்ந்து நடந்து, நடந்து, மதுரை வரை செல்வதற்கே பன்னிரண்டு ஆண்டுகள் தேவைப்பட்டன. மதுரையில் கோவலனை இழந்த கண்ணகி, சேரநாடு நோக்கிச் சென்ற வழியில் இளங்கோ அடிகள் தந்த குறிப்புகளின் உதவியுடன் நகரத் தொடங்கினார்.

1945ஆம் ஆண்டு தொடங்கிய பயணம் 1963ஆம் ஆண்டு நவம்ர் 17ஆம் நாள் மலையினுள் மறைந்து கிடந்த கோயிலைக் காணும் அந்த இனிய நிகழ்வில் நெகிழ்ந்துள்ளார்.

இவருக்கு 2012 டிசம்பரில் குடியரசு தலைவர் பிரணாப் முகர்ஜி தொல்காப்பியர் விருது வழங்கிச் சிறப்பித்தார்.

கண்ணகி கோட்டத்தைக் கண்டுபிடித்தது எவ்வாறு என்பது குறித்து தினமணி நாளிதழுக்கு சில ஆண்டுகளுக்கு முன் திரு. கோவிந்தராசனார் அளித்த பேட்டி சிலப்பதிகாரத்தை முழுமையாகப் படித்தேன். அதில் எல்லாம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. சோழ நாட்டின் தலைநகரமான பூம்புகாரில் இருந்து கோவலனும் கண்ணகியும் நடந்து சென்ற பாதையாக அதில் கூறப்பட்டுள்ள இடங்களுக்கெல்லாம் நடந்தே சென்றேன்.

மதுரையில் கண்ணகி பாண்டிய மன்னனிடம் நீதி கேட்டு அது கிடைக்காததால் நகரை எரித்துவிட்டு தலைவிரி கோலமாய் மேற்கு நோக்கிச் செல்கின்றாள்.

சேரநாட்டின் மலைப் பகுதியான முருகவேல் குன்றத்துக்கு (இன்றைய மங்களதேவி மலை) சென்று அங்கு வானுலகில் இருந்து ரதத்தில் வந்திறங்கிய கோவலனுடன் இணைந்து கண்ணகி விண்ணுலகம் சென்றதாக சிலப்பதிகாரம் கூறுகின்றது.

கண்ணகி நடந்து சென்றதாகக் கூறப்பட்ட பாதை வழியாக நானும் இரவு, பகல் பாராமல் நடந்தேன். மதுரையில் இருந்து 90 மைல் தொலைவில் உள்ள மங்களாதேவி மலையை அடைந்தேன்.

40 மைல் சுற்றளவில் கண்ணகி கோட்டத்தைத் தேடி அலைந்தேன். இறுதியில் அந்தக் கோட்டத்தைக் கண்டுபிடித்தேன்.

### கண்ணகி கோட்டத்திற்கு அப்படி என்ன சிறப்பு?

வானுலகில் இருந்து ரதத்தில் இறங்கி வந்த கோவலனுடன் கண்ணகியும் விண்ணுலகம் சென்றதை நேரில் கண்ட மலைவாழ் மக்கள் அந்தச் செய்தியை மன்னன் சேரன் செங்குட்டுவனிடம் கூறுகின்றார்கள்.

மன்னனின் மனைவி அந்த இடத்தில் பத்தினித் தெய்வமான கண்ணகிக்கு ஒரு கோயில் கட்ட வேண்டும் என எண்ணுகிறாள்.

அதன் பின்பு வடபுலத்து அரசர்களை வெற்றி கண்டு இமயமலையில் கல்லெடுத்து அதை கங்கையில் நீராட்டி தலைச்சுமையாக இங்கு கொண்டு வந்து அந்தக் கல்லில் கண்ணகிக்கு சிலை வடித்து முருகவேல் குன்றத்தில் நிறுவி நாள்தோறும் வழிபாடும், விழாக்களும் நடத்தி வந்தான் மன்னன்.

அத்தகைய சிறப்புமிக்க கண்ணகி கோட்டம் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டதாக குறிப்புகள் உள்ளன.

அது கண்ணகி கோட்டம்தான் என்பதை எப்படி உறுதி செய்தீர்கள்?

"மண்டிக்கிடந்த புதருக்குள் சிறிய கோட்டைச் சுவர் போன்ற கல் கட்டிடத்திற்குள் கண்ணகி சிலை இருந்தது.

அந்தக் கற்களில் தமிழ் வட்டெழுத்தும், முற்கால பாண்டியர் காலத்து தமிழ் எழுத்துகளும் காணப்பட்டன.

அங்கு சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள பழங்கால மலைவாழ் மக்கள் மட்டும் இல்லையே தவிர, எஞ்சிய வனவிலங்குகள், இயற்கைக் காட்சிகள், வேங்கை மரங்கள் என அத்தனை அடையாளங்களும் ஒருங்கே காணப்பட்டன.

மேலும், அங்கிருந்த கண்ணகி சிலை, இமயமலைக் கல்லில் செதுக்கப்பட்டது என்பதால், அந்தக் கல்லை ஆய்வுக்கு உட்படுத்தினேன்.

அது மாதிரியான கல் அருகில் உள்ள மலைகளிலோ அல்லது தமிழ்நாட்டில் உள்ள மலைகளிலோ இல்லை. இறுதியில் இமயமலைக் கல்லுடன் ஒப்பிட்டுப் பார்த்து உறுதி செய்தேன். தலையில் சுமந்து வரும் எடையளவில் இருந்த கல்லில் செதுக்கப்பட்டுள்ளது கண்ணகி சிலை. அந்தச் சிலையைப் பாதுகாக்கும் வகையில் எனது வீட்டில் வைத்திருந்தேன். தகவலை அறிந்த அப்போதைய தமிழக முதல்வர் மு. கருணாநிதி என்னை அழைத்து கண்ணகி சிலையைக் கேட்டார். அவர் கேட்டபடி அரசிடம் ஒப்படைத்து விட்டேன். தமிழர்களின் வரலாற்றை செப்பம் செய்ய வேண்டும் என்ற நோக்கில் 50 ஆண்டுகளுக்கு முன்னர் கண்ணகி கோட்டம் கண்டேன். அதற்காக உழைத்தேன்.

இவ்வாறு கோவிந்தராசனார் அந்தப் பேட்டியில் கூறியுள்ளார். அன்னாரின் விடா முயற்சியும் அதற்கான முழு அர்ப்பணிப்புடன் கூடிய கடின முயற்சியும் பாராட்டப்பட வேண்டியவை. ■



பேராசிரியர்
சி. கோவிந்தராசனார்





# கும்பாபிஷேகக் காட்சிகள்

குரோதி ஆண்டு ஆவணி மாதம் 23ஆம் தேதி (08.09.2024) ஞாயிற்றுக்கிழமை







# பொதுக் காப்பீடு : நடைமுறைச் செயலுடன் நமது எதிர்காலத்தைப் பாதுகாத்தல்



**R. அன்னம்**
துணைத் தலைவர் – பொதுக் காப்பீட்டு நிபுணர்

இன்றைய வேகமான உலகில், எதிர்பாராத நிகழ்வுகள் நம் வாழ்க்கையையும் வணிகத்தையும் சீர்குலைத்துவிடும். எதிர்பாராத நிதி இழப்பில் இருந்து நம்மையும், நம் குடும்பங்களையும் நமது நிறுவனங்களையும் பாதுகாப்பதற்கான நடைமுறை வழிகளில் ஒன்று பொதுக் காப்பீடு. இது மன அமைதி மற்றும் நம்பகமான பாதுகாப்பு வலையை வழங்கும் ஒரு கவசம். இது வளர்ச்சி மற்றும் செழிப்பில் கவனம் செலுத்த அனுமதிக்கிறது.

### பொதுக் காப்பீடு என்றால் என்ன?

உடல்நலம், சொத்து, வாகனங்கள் மற்றும் பொறுப்புக் காப்பீடு உட்பட ஆயுள் காப்பீடு தவிர அனைத்தையும் பொதுக் காப்பீடு உள்ளடக்கியது. இது காப்பீடு செய்யப்பட்ட (தனிநபர் அல்லது வணிகம்) மற்றும் காப்பீட்டு நிறுவனத்திற்கு இடையேயான ஒப்பந்தமாகும். இதில் பிரீமியத்திற்கு ஈடாக, காப்பீட்டாளர் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் நிதி இழப்புகளை ஈடுசெய்வதாக உறுதியளிக்கிறார்.

### பொதுக் காப்பீடு ஏன் முக்கியமானது?

**1. நிதிப் பாதுகாப்பு:** விபத்துகள், இயற்கைப் பேரழிவுகள் மற்றும் எதிர்பாராத சம்பவங்கள் குறிப்பிடத்தக்க செலவுகளுக்கு வழிவகுக்கும். பொதுக் காப்பீட்டின் மூலம், எதிர்பாராத செலவுகளின் சுமையைக் குறைத்து, நீங்கள் நிதி ரீதியாகப் பாதுகாக்கப்படுகிறீர்கள்.

**2. வணிகத் தொடர்ச்சி:** வணிக உரிமையாளர்களுக்கு, குறிப்பாக உற்பத்தி, சில்லறை வணிகம் அல்லது சேவை போன்ற தொழில்களில், பெரிய இழப்புக்குப் பிறகும் செயல்பாடுகளைத் தொடரலாம் அல்லது விரைவாகத் தொடங்கலாம் என்பதைக் காப்பீடு உறுதி செய்கிறது.

**3. மன அமைதி:** உங்கள் சொத்துக்கள், உடல்நலம் மற்றும் பொறுப்புகள் ஆகியவை உள்ளடக்கப்பட்டுள்ளன என்பதை அறிந்துகொள்வது, "என்ன செய்தால்" என்ற கவலையின்றி அன்றாட வாழ்வில் கவனம் செலுத்தவும், வேலையில் கவனம் செலுத்தவும் உதவுகிறது.

**4. சட்ட இணக்கம்:** மோட்டார் மற்றும் பொறுப்புக் காப்பீடு போன்ற சில காப்பீடுகள் சட்டப்படி கட்டாயமாக்கப்படுகின்றன. இவற்றை வைத்திருப்பது சட்டச் சிக்கல்களைத் தவிர்க்கும்.

**5. செல்வத்தைப் பாதுகாத்தல் :** காப்பீடு திடீர் நிதி வடிகால்களைத் தடுக்கிறது. ஒரு சம்பவத்தின் காரணமாக பல வருட சேமிப்பு அல்லது முதலீடுகள் அழிக்கப்படாமல் இருப்பதை உறுதி செய்கிறது.

## வணிகக் காப்பீடு - வணிக உரிமையாளர்களுக்கான முக்கிய நடவடிக்கைகள்

வணிக உரிமையாளர்களுக்கு, காப்பீடு மூலம் உங்கள் நிறுவனத்தைப் பாதுகாப்பது புத்திசாலித்தனம் மட்டுமல்ல, அவசியமானது. வணிகக் காப்பீட்டை நீங்கள் எவ்வாறு சிறப்பாகப் பயன்படுத்தலாம் என்பது இங்கே :

**1. உங்கள் அபாயங்களை மதிப்பிடுங்கள்:** தீ மற்றும் திருட்டு முதல் இயற்கைப் பேரழிவுகள் வரை ஒவ்வொரு வணகத்திற்கும் தனித்துவமான ஆபத்துகள் உள்ளன. உங்கள் வணிகத்தை எந்த அபாயங்கள் அதிகம் பாதிக்கலாம் என்பதைக் கண்டறிந்து அதற்கேற்ப கவரேஜுக்கு முன்னுரிமை கொடுங்கள்.

**2. பொறுப்புக் கவரேஜைப் பெறுங்கள்:** வாடிக்கையாளர் காயங்கள் அல்லது சொத்து சேதம் போன்ற சாத்தியமான பொறுப்புகளுக்கு நீங்கள் பாதுகாக்கப்படுகிறீர்கள் என்பதை உறுதிப்படுத்தவும். பொறுப்புக் காப்பீடு சட்டக் கட்டணங்கள் மற்றும் இழப்பீட்டை உள்ளடக்கும், உங்கள் வணிகத்தை குறிப்பிடத்தக்க இழப்பிலிருந்து காப்பாற்றும்.

**3. முக்கியச் சொத்துக்களைக் காப்பீடு செய்யுங்கள்:** அத்தியாவசிய இயந்திரங்கள், உபகரணங்கள் மற்றும் அறிவுசார் சொத்துக்களைப் பாதுகாக்கவும். எடுத்துக்காட்டாக, இயந்திர முறிவு காப்பீடு, உற்பத்தியில் குறைந்த வேலையில்லா நேரத்தை உறுதிப்படுத்த உதவுகிறது.

**4. வணிகக் குறுக்கீடு காப்பீட்டைப் பெருங்கள்:** தீ அல்லது வெள்ளம் போன்ற நிகழ்வின் காரணமாக உங்கள் வணிகம் செயல்பட முடியாத காலங்களில் இழந்த வருமானத்தை இந்த கவரேஜ் ஈடுசெய்கிறது.

**5. தவறாமல் மதிப்பாய்வு செய்யவும்:** வணிகச் சூழல்கள் வேகமாக மாறுகின்றன. உங்கள் கொள்கைகள் ஏதேனும் புதிய சொத்துக்கள், விரிவாக்கங்கள் அல்லது செயல்பாடுகளின் மாற்றங்களுடன் ஒத்துப்போவதை உறுதிசெய்ய வருடாந்திர மதிப்பாய்வை மேற்கொள்ளுங்கள்.

**சில்லறைக் காப்பீடு - ஒவ்வொரு தனிநபரும் கருத்தில் கொள்ள வேண்டியவை**

தனிநபர்கள் மற்றும் குடும்பங்களுக்கு, காப்பீடு அன்றாட வாழ்க்கைக்கு ஒரு பாதுகாப்பு வலையை வழங்குகிறது. சில்லறைக் காப்பீட்டைப் பயன்படுத்துவதற்கான நடைமுறைப் படிகள் இங்கே :

**1. சுகாதாரக் காப்பீடு:** மருத்துவச் செலவுகள் விரைவில் சேமிப்பைக் குறைக்கும். ஒரு விரிவான உடல்நலக் காப்பீட்டுத் திட்டத்தைக் கொண்டிருப்பது, மருத்துவமனையில் சேர்க்கப்படுதல், அறுவை சிகிச்சைகள் மற்றும் சிகிச்சைகள், உடல்நலப் பிரச்சினைகள் ஏற்படும் போது நிதி நிவாரணம் வழங்குதல் ஆகியவற்றை உள்ளடக்கியது.

**2. வீட்டுக் காப்பீடு:** உங்கள் வீடு உங்கள் மதிப்புமிக்க சொத்துக்களில் ஒன்றாகும். வீட்டுக் காப்பீடு தீ, வெள்ளம், திருட்டு மற்றும் பிற இடர்களிலிருந்து உங்கள் சொத்து மற்றும் உடமைகள் பாதுகாப்பாக இருப்பதை உறுதி செய்து சேதங்களுக்கு எதிராகப் பாதுகாக்கிறது.

**3. மோட்டார் காப்பீடு:** கார் அல்லது பைக் என எதுவாக இருந்தாலும், வாகனத்திற்கு ஏற்படும் சேதம் மற்றும் விபத்துகளின் போது ஏற்படும்பொறுப்புகளை மோட்டார் காப்பீடு வழங்குகிறது. அதிக பழுதுபார்ப்பு மற்றும் பொறுப்புச் செலவுகளைத் தவிர்ப்பதற்கு இது சட்டப்பூர்வமாகத் தேவைப்படுகிறது மற்றும் முக்கியமானது.

**4. தனிநபர் விபத்துக் காப்பீடு:** துரதிர்ஷ்டவசமான விபத்து ஏற்பட்டால், இந்த கவரேஜ் இழப்பீட்டை வழங்குகிறது. மீட்கும் போது நிதி ரீதியாக நிர்வகிக்க உதவுகிறது.

**நடவடிக்கை எடுப்பது : சரியான காப்பீட்டைப் பெறுவதற்கான படிகள்**

**1. உங்கள் தேவைகளை மதிப்பிடுங்கள்:** உடல்நலம், வாகனம், சொத்து அல்லது வணிகம் – நீங்கள் பாதுகாக்க விரும்புவதைப் பட்டியலிடுவதன் மூலம் தொடங்கவும். காப்பீடு மிகவும் மதிப்புமிக்கதாக இருக்கும் பகுதிகளுக்கு முன்னுரிமை கொடுங்கள்.

**2. ஆராய்ச்சித் திட்டங்கள்:** எல்லாக் கொள்கைகளும் ஒரே மாதிரி இருப்பதில்லை. பல்வேறு திட்டங்களை ஒப்பிட்டு, கவரேஜ், பிரீமியங்கள் மற்றும் ஏதேனும் குறிப்பிட்ட தேவைகள் (உடல்நலக் காப்பீட்டில் நோ-கிளைம் போனஸ் போன்றவை) கவனம் செலுத்துங்கள்.

**3. கொள்கை விதிமுறைகளைப் புரிந்து கொள்ளுங்கள்:** வாங்குவதற்கு முன், கொள்கை விதிமுறைகளைக் கவனமாக மதிப்பாய்வு செய்யவும். சேர்த்தல்கள், விலக்குகள் மற்றும் உரிமைகோரல் செயல்முறைகளில் தெளிவு இருப்பதை உறுதிசெய்யவும்.

**4. ஒரு நிபுணரை அணுகவும்:** உறுதியாகத் தெரியவில்லை என்றால், உரிமம் பெற்ற காப்பீட்டு நிபுணரை அணுகவும். உங்கள் தனிப்பட்ட தேவைகளின் அடிப்படையில் பொருத்தமான கவரேஜில் அவர்கள் உங்களுக்கு வழிகாட்ட முடியும்.

**5. புதுப்பித்த நிலையில் இருங்கள்:** வாழ்க்கை அல்லது வணிகம் மாறும்போது, காப்பீட்டுத் தேவைகளும் மாறுகின்றன. ஒவ்வொரு ஆண்டும் கொள்கைகளை மதிப்பாய்வு செய்வது போதுமான கவரேஜை உறுதிப்படுத்த உதவுகிறது.

### உங்கள் பாதுகாப்பில் ஒரு புத்திசாலித்தனமான முதலீடு

தனிப்பட்ட அல்லது வணிகப் பயன்பாட்டிற்காக இருந்தாலும், காப்பீடு என்பது நிதி அபாயங்களை நிர்வகிப்பதற்கான ஒரு நடைமுறைக் கருவியாகும். காப்பீடு என்ன வழங்குகிறது என்பதைப் புரிந்துகொள்வதன் மூலமும், செயலூக்கத்துடன் செயல்படுவதன் மூலமும், சாத்தியமான இழப்புகளிலிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்ளலாம். இன்றே நமது பாதுகாப்பில் முதலீடு செய்வதன் மூலம் நாளைக்காக நாம் தயாராகிவிட்டோம் என்பதை உறுதி செய்வோம்.



வலையபட்டி மகளிர் சங்கத்தினர் கோவிலில் வண்ண மலர்களால் சிறப்பாக அலங்காரம் செய்த காட்சி

# ஆசை நெஞ்சம் பாடும் பாடல்

சிவ. செல்வராஜன்

எல்லாரும் எல்லாமும் பெறவேண்டும் – இங்கு
இல்லாரும் இல்லாத நிலை வேண்டும்
நாங்கள் வளமுடன் வாழ்கின்ற வரம் வேண்டும் – நீ
வழியெங்கும் துணையாக வரவேண்டும்.

தங்கத்தில் தேர்செய்ய வேண்டும் உனக்கு
மலையாண்டி நீதான் சீர் செய்ய வேண்டும் அதற்கு
இந்தத் திருப்பணி செய்யத் தான் ஆசை அதிகம்
அந்த அருள்மணி ஒலிக்கத்தான் இந்த பாடல் பதிகம்!

ஊரார் எல்லாம் சேர்ந்திடுவோம் ஒன்றாக
யாரார் தடுத்தாலும் தேர் செய்திடுவோம் நன்றாக

அழகான தங்கத் தேர் அலங்கரித்தால் அழகு! – அந்த
கற்பகமே பிள்ளையாய் அவதரித்தால் அழகு!
தேர் திருநாளில் மலைக்கோயில் சுற்றி வரவேண்டும்
ஊர் செழிக்க மகத்தான வெற்றி தரவேண்டும்!

ஊரார் எல்லாம் சேர்ந்திடுவோம் ஒன்றாக
யாரார் தடுத்தாலும் தேர் செய்திடுவோம் நன்றாக

வலையபட்டி பேரூரில் எல்லாம் நிறைகுடம்
அதனால் தான் அது செட்டிநாட்டில் முதலிடம்
என்றே ஊர் உலகம் சொல்ல வேண்டும்
எதிர்வரும் தடைகள் எளிதில் வெல்ல வேண்டும்!

ஊரார் எல்லாம் சேர்ந்திடுவோம் ஒன்றாக
யாரார் தடுத்தாலும் தேர் செய்திடுவோம் நன்றாக

நானும் பணக்காரன் மகனே நீயும் பணக்காரன்
இவ்வூரில் எல்லோரும் பணக்காரர்! பணக்காரர்!
ஏழை என்ற சொல்லுக்கு ஒரு நாளும் இடமில்லை
வாழையடி வாழையென வளமாக வாழ்வோம்!

ஊரார் எல்லாம் சேர்ந்திடுவோம் ஒன்றாக
யாரார் தடுத்தாலும் தேர் செய்திடுவோம் நன்றாக

இங்கே இருக்கின்றார் செல்வந்தர் நூற்றுக்கு நூறு
இது உண்மையே! விரைவில் அந்நாள்வரும் கணக்கிட்டுப்பாரு
இது அந்த ஆண்டவனின் அருள்வாக்கு!
இது அர்த்தமுள்ள அருள்வாக்கு!

ஊரார் எல்லாம் சேர்ந்திடுவோம் ஒன்றாக
யாரார் தடுத்தாலும் தேர் செய்திடுவோம் நன்றாக ■

## வலதுபுறம் உள்ள கட்டங்களில் உங்கள் பரம்பரையை எழுதிப் பார்க்கவும்

| ஏழு தலைமுறை பரம்பரை | |
|---|---|
| பரன் - பரை | |
| ஓட்டன் - ஓட்டி | |
| பூட்டன் - பூட்டி | |
| பாட்டன் - பாட்டி | |
| ஐயா - அப்பத்தா | |
| அப்பா - அம்மா | |
| நான் | |

# வாழ்வியலின் மூலம் இறை வழிபாடு



பேராசிரியர் முனைவர் **அழ.நா. அருணாசலம்,**
கோட்டையூர்

நம்பிக்கை ஓர் உளவியல் சார்ந்த விடயமாகும். ஒருவர் அல்லது ஓரமைப்பு ஒன்றின் மீது அல்லது ஒருவரின் மீது வைக்கும் மிகுந்த பற்று அல்லது கூடிய விருப்பு போன்றவற்றின் அடிப்படையில் அதனை உண்மை என நம்பும் நிலையிலேயே நம்பிக்கை மனித மனங்களில் ஏற்படுகின்றது. அது சரியானதாகவோ, தவறானதாகவோ இருக்கலாம். உண்மையானதாகவோ, உண்மையற்றதாகவோ கூட இருக்கலாம்.

ஆனால் அது அறிவியலின் அடிப்படையில் ஏற்றுக்கொள்ளக்கூடிய உண்மையாக இருக்க வேண்டும் என்பதில்லை. பெரும்பாலும் “நம்பிக்கை” என்பது அறிவிற்கு அப்பால் ஒருவரின் அல்லது ஒன்றின் மிகுந்த பற்றாலும், கூடிய விருப்பினாலும் ஏற்படும் உளம் சார்ந்த வெளிப்பாடாகவே இருக்கும்.

அப்படிப்பட்ட நம்பிக்கையைக் கூட்டாக வாழத் துவங்கிய ஆதி சமூகம் தன்னையும் தன் சமூகம் சார்ந்த சக மக்களையும் காக்கும் ஒரு தலைவனை அல்லது தலைவியை அல்லது தான் வாழும் இயற்கையை உருகவப்படுத்தி அதன் மீது நம்பிக்கை கொண்டு அந்த உருவகப்படுத்திய தலைமையை இறைவன் மற்றும் இறைவி என்று கொண்டாடி பின் வழிபடத் தொடங்கினார்கள்.

இதுவே இறை வழிபாட்டின் மூலம் ஆகும். எனவே, இறைவன் நமக்கு உள்ளேயும் வெளியேயும் இறைந்து கிடப்பவன். காலத்தாலும் இடத்தாலும் நமக்குள்ளும், நம்மைக் கடந்தும் இறைந்து கிடப்பவன் இறைவன்.

இறைவழிபாடு என்பது வாழ்க்கை அல்ல. வாழ்க்கையே ஒரு இறைவழிபாடு தான். அந்த வாழ்க்கையின் அனைத்து கட்டங்களிலும் இறைசிந்தனை, இறைவனின் நினைவு வந்தால் அதுவே வழிபாடு ஆகும். தமிழர்கள் பல சமயங்களைப் பின்பற்றி வாழ்ந்து வருகின்றனர். சமயம் என்ற ஒன்று தமிழர்களிடம் எப்பொழுது தோன்றியது என்பதை அறுதியிட்டுக் கூற இயலாது.

ஆனால், இறை நம்பிக்கை என்பது தொன்றுதொட்டு தமிழர்களிடம் இருந்து வந்துள்ளது. உலக மக்கள் அனைவரும் தத்தம் வாழ்க்கையில் மேற்கொண்டொழுகும் பொதுவான ஒழுகலாறுகளுள் தெய்வ வழிபாடும் ஒன்றாகும்.

'வழிபடு' என்பதிலிருந்து பிறந்தது வழிபாடு என்னும் சொல். வழிபடு என்பதற்கு வணங்குதல், வழியில் செல்லுதல், பின்பற்றுதல், நெறிப்படுத்துதல், பூசனை முறை என்பது பொருள். தெய்வங்களை மகிழ்விப்பதற்காக மேற்கொள்ளப்படும் செயல்பாடுகளும் பூசனை முறைகளுமே வழிபாடு என்றும், இறைவனுடன் இரண்டறக் கலப்பதே வழிபாடு என்றும் வழிபாடு குறித்துப் பல்வேறு விளக்கங்கள் முன் வைக்கப்படுகின்றன.

இங்ஙனம் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் மக்களது வாழ்க்கையில் நிலவிவரும் தெய்வ வழிபாடுகள் சமய நெறியாகவும் அந்நெறி பற்றிய சிந்தனைகள் தத்துவங்களாகவும் வளர்ச்சி பெற்று வந்துள்ளன. இந்நாட்டிற் குடிபுகுந்த அயலவர் கலப்பினால் தமிழ்ச் சமயநெறிகளில் அயலவர் நடைமுறைகள் சில இடம்பெற்றன.

## இந்து மதமும் இறை வழிபாடும்

உலகில் பல மதங்கள் உண்டு. அவற்றை உருவாக்கியவர்களைப் பற்றிய வரலாறு உண்டு. எவராலும் படைக்கபடாமல் இயல்பாகத் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகளாக நம் நாட்டில் நிலவி வரும் மதம் இந்து மதம், இந்து மதம் ஒரு மதமல்ல, அது ஒரு வாழ்க்கை முறை. இந்து மதத்தில் பல பிரிவுகள் உண்டு என்று கூறுவார்கள். இவை பிரிவுகள் அல்ல, வழிபாட்டு முறைகள். இந்து மத வழிபாட்டு முறைகள் ஆறு வகையானவை என்று வகுத்திருக்கிறார் ஆதிசங்கரர், சிவபெருமானை வழிபடுவது சைவம், திருமாலை வழிபடுவது வைணவம், சக்தியை வழிபடுவது சாக்தம், விநாயகரை வழிபடுவது காணபத்யம், முருகனை வழிபடுவது கௌமாரம், சூரிய வழிபாடு ஸௌர்யம் ஆகும்.

சங்க கால மக்கள் ஐவகை நிலங்களில் ஐவகைத் தெய்வங்களை வணங்கி முதன்மைத் தெய்வங்களான முருகனையும், கொற்றவையையும், சிவனையும், திருமாலையும் வணங்கிப் போற்றியும் வந்தனர். ஆனால் அடுத்து வந்த காப்பிய காலத்தில் பல தெய்வ வழிபாடுகளும் நம்பிக்கைகளும் தோன்றின.

சைவசமய வரலாற்றைக் காலமுறைப்படி கருதி பின்னோக்கிப் பார்த்தால் கிறித்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே சிந்து நதிப் பள்ளத்தாக்கிற் சிறந்து விளங்கிய மொகஞ்சதரோ, ஹரப்பா ஆகிய நகரங்களில் வாழ்ந்த மக்களின் சமய வழிபாடு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். இக்காலத்தில் தமிழகத்தில் நிலவிவரும் லிங்க வழிபாடு, சக்தி வழிபாடு, பசுபதி வழிபாடு முதலியன இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தொன்மையுடையதாக விளங்குகிறது.

### முருகன் வழிபாடு

சங்ககால மக்கள் சமுதாயத்தில் பல தெய்வங்களை வழிபட்டுள்ளனர். அவற்றில் செவ்வேள் என்னும் முருகனை வழிபடுதலையும் காணமுடிகிறது. உருவ வழிபாட்டில் தொன்மையானது முருகன் வழிபாடாகும். முருகன் குறிஞ்சி நிலக்கடவுள், மலையும் மலை சார்ந்த இடங்களில் முருகனை வழிபட்டனர். 'குறிஞ்சிக்கிழவன்' 'மலைக்கிழவோன்' என்று தமிழ் நூல்கள் கூறுகின்றன. சங்க காலத்தில் முருகன் கோயில் கொண்டிருந்த இடங்களைப் பற்றிய பல குறிப்புகள் இடம் பெற்றிருக்கின்றன. முருகப் பெருமான் தமிழர்களின் ஒப்பற்ற தெய்வமாவார். தொல்காப்பியரின் கூற்றுப்படி தொன்மையான தமிழர்களின் ஐந்திணை வழிபாடுகளில் முருகன் சேயோனாக வருகிறார். முருகனை வழிபடும் வழக்கம் பழங்காலந் தொட்டே இருக்கிறது. அவரை வழிபடும் மதத்திற்கு கௌமாரம் என்று பெயர். தமிழர்களுக்கும் முருகனுக்கும் உள்ள தொடர்பானது நெடுங்கால பிணைப்பு ஆகும். தமிழர்கள் எங்கு செல்கிறார்களோ அங்கெல்லாம் முருகனை மறவாமல் கொண்டு சேர்ப்பர். முருகன் தமிழ்க் கடவுள். முருகனே தமிழ் மொழியை முதன் முதலில் அகத்தியருக்கு அறிவுறுத்தினான் என்பது வரலாறு. மேலும் சிவபிரானுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்தவன் முருகன்.

### வேல் வழிபாடு

முருகனது ஆயுதங்களில் அவர் கையில் வைத்திருக்கும் வேல் சிறப்பாகப் போற்றப்படுகிறது. வேல்வல்லான் என்று கலித் தொகையும் வல்வேல் கந்தன் என்று புறநானூறும் முருகனை புகழ்கின்றன.

முருகனுக்கு வேலை அருளியவர் சிவபெருமான். அந்த வேலுக்குச் சக்தியை அளித்தவர் பராசக்தி. இதனால் இரட்டைச் சிறப்புகள் வேலுக்குக் கிடைக்கின்றன. முருகனது வேல் மகிமையும், மேன்மையும், தலைமையும்,

தெய்வீகத் தன்மையுமுடையது. எனவே, இது சிறப்பான வழிபாட்டிற்குரியது. முருகனின் ஆறாம்படை வீடான சோலையில் இன்றும் வேல்தான் மூலவராக உள்ளது.

### சிவ வழிபாடு

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள தெய்வழிபாடுகளுக்குள் தலைமையானது சிவ வழிபாடு ஆகும். அத்தகைய வழிபாட்டில் இறைவன் சிவபெருமான், சிவன் என்ற சொல்லால் குறிக்கப் பெறாது பிற சொற்களாலே குறிக்கப் பெறுகிறான். அதாவது சங்க இலக்கியத்தில் சிவன் என்ற சொல்லே இல்லை அதற்கு பதிலாக ஆதிரையான், ஆலமர்செல்வன், ஈசன், தாழ்சடைப் பெரியோன், மக்கட்செல்வன், மணிமிடற்றன் என்ற பெயர்களால் அழைக்கப்பெறுகிறான். அவனுக்கென்று தனியே கோயில் அமைத்து வழிபடும் வழக்கமும், ஊருக்கு நடுவே மன்றங்கள் அமைத்து வழிபடும் வழக்கமும் இருந்துள்ளன.

காரைக்கால் அம்மையாரின் பாடல்களில் தான் சைவ சித்தாந்தக் கருத்துகள் முதன்முதலாகப் போற்றப்பெறுகின்றன. சிவ பெருமானின் பெருமைகள் அனைத்தும் காரைக்கால் அம்மையாரின் பாடல்களில் இடம் பெற்றுள்ளன எனலாம். அம்மையாரின் வழியில் தான் பிற திருமுறை ஆசிரியர்கள் சிவபெருமான் பெருமைகளை உரைத்திருக்கின்றனர். உலகத்தை ஒடுக்கிய சிவபெருமான் உலகத்தை மீளத் தோற்றுவிக்கின்றான் என்ற சைவ சித்தாந்தத் தத்துவத்தை அற்புதத் திருவந்தாதியில் அம்மையார் குறிப்பிடுகின்றார்.

பழந்தமிழ் நாட்டில் 6, 7ஆம் நூற்றாண்டுகளில் திருமுறை ஆசிரியர்களான திருமூலர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய பெருமக்கள் தோன்றிச் சைவ சமயத்தை வளர்த்தார்கள் பிற சமய வழிபாடுகள், கொள்கைகள் சைவ சமயப் பெரியார்களால் வெற்றி காணப்பெற்றுச் சைவம் தழைத்தோங்கியது. இக்காலக் கட்டத்தில் தோன்றியவைகளே திருமுறை இலக்கியங்கள் ஆகும். திருமுறைகளில் காலத்தால் முந்தியது காரைக்கால் அம்மையாரின் பாடல்கள் என்றாலும் நூல் வடிவில் திருமந்திரம் முதன்மை பெறுகிறது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளாகச் சிவ வழிபாட்டைச் சிவாகமங்கள் கூறுகின்றன. அவற்றைத் தத்துவ அடிப்படையில் திருமந்திரம் குறிப்பிடுகின்றது.

6ஆம் நூற்றாண்டின் இறுதியில் திருமூலரால் பாடப் பெற்ற பாடல்கள் திருமந்திர நூலாகத் தொகுக்கப்பட்டன. அதனையடுத்து 7 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியவர்கள் பாடிய தேவாரப் பாடல்கள் முதல் ஏழு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டன. பின்னர் 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்கவாசகரின் திருவாசகம், திருக்கோவையார் இரண்டும் எட்டாம் திருமுறையாகத் தொகுக்கப்பட்டன. எனவே 6ஆம் நூற்றாண்டு முதல் 9ஆம் நூற்றாண்டு வரை இடைப்பட்ட காலத்தைத் திருமுறைக் காலம் எனக் கூறுவர். இந்நூற்றாண்டுகளில் சைவ சமயம், சிவ வழிபாடு ஆகியவை தமிழகத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தன. சைவத் திருக்கோயில்களும், திருவிழாக்களும் உன்னத நிலையில் இருந்தன.

### சக்தி வழிபாடு

சக்தி வழிபாடு என்பது, மிகத் தொன்மையானது. ஆதி காலத்தில் இந்த வழிபாட்டை 'தாய்மை வழிபாடு' என்றே கூறினார்கள். உலகின் முதல் வழிபாடாகச் சக்தி வழிபாடு கருதப்படுகிறது. சதாசிவன், மகேஸ்வரன், ருத்ரன், விஷ்ணு, பிரம்மா ஆகிய 5 பேரை தனது அம்சமாக உருவாக்கிய அன்னை, பிறகு "ஹ்ரீம்" எனும் பீஜத்தில் எழுந்தருளியதாக திருமூலர் கூறியுள்ளார். சாக்தர்களுக்கு மட்டுமல்ல, சைவர்களுக்கும் அன்னை வழிபாடு முக்கியமான ஒன்றாக விளங்குகிறது. "சிவஞானப்பிரதாயினி" என்பது அம்பாளின் திருநாமங்களுள் ஒன்று. சிவஞானப் பேற்றைத் தந்து முக்தி அருளும் சிறப்புடையவள் அன்னை பராசக்தி.

சிவன் இல்லையேல் சக்தி இல்லை என்பதை நாம் அறிவோம். அதே நேரத்தில் சக்தி இல்லாவிட்டால் சிவன் செயல்படார் என்பது உண்மை. இறைவன் இச்சா சக்தியினால் உயிர்களுக்கு அருள்புரிய விரும்புகிறான். ஞான சக்தியினால் அவைகளின் தகுதியை தராதரத்தை தேவைகளை அறிகிறான். கிரியா சக்தியின் துணை கொண்டு உயிர்கள் கடைத்தேறும் படியாக அவைகளைப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் செய்கிறான். சக்தியில்லாவிட்டால் சிவம் இந்தத் தொழில்களைச் செய்ய முடியாது. ஆகவே சிவமோ சக்தியோ ஒன்றை விட்டு ஒன்று இயங்காது. இவை இரண்டும் சேர்ந்தே இருக்கும் என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டும்.

சங்க காலத்திலும் போரில் வெற்றியைத் தரும் தெய்வமாகக் காளி போற்றப்பட்டாள். அவளைக் கொற்றவை என்ற பெயரால் அழைத்தனர்.

முதல் கும்பாபிஷேகப் பத்திரிகையின் நகல்.



உ

சிவமயம்

வலையமாநகரம்

## ஸ்ரீ வடுவகிர் விழியாள் ஸமேத

## ஸ்ரீ வலம்புரிநாத சுவாமி

# கும்பாபிஷேகப் பத்திரிகை

நந்தன ஆண்டு தைத் திங்கள் 19-ஆம் நாள்
(ஆங்கில ஆண்டு 1892) திங்கட்கிழமை

### கலித்துறை

பொன்று ரஞ்சுடிய வையாபுரிக்கிரி பூதலமேல்
மின்று ரஞ்சுடிய மாமலையாண்டி நல்வேழமுகத்
நன்று ரஞ்சுடிய தாளம்புயத்தின் றயவுகளால்
சொன்று ரஞ்சுடிய கும்பாபிஷேகத்தைச் சொல்லுவமே.

### கொச்சகக் கலிப்பா

பூவுலாவிய பூம்புனலும் பொழிற்போதுலாவிய பூங்கரும்போடுதேன்
மாவுலாவிய பொன்னமராபதி வலையமா நகர்வாழ்வுயர் வாசவ
ருவுலாவிய நாடுவலம்புரி நாதர்நாடி நயந்திடு நாயகி
மேவுலாவிய வேலைவடுவகிர் விழியின் மின்னரு ளேமிக
வேண்டுவோம்.

### விருத்தம்

சீருலவு செங்கமல தேனுலவு சேல்களால் சேறுலவு தீங்கரும்பால்
தேறவிடு செந்நெல் செஞ்சேறணி சிறந்ததாற் சீலமிகு தேசமிதுவாம்
பாருலவு பைம்பொன்மணி பானுமதி போலொளி பரந்திலகுபொன்ன
மராபதி வலையமாநக ரணிந்த வையாபுரிப் பருப்பத முகந்த பரனும்
வாருலவு மங்கள வலம்புரி நாதனும் வடுவகிர் விழியாளெனும்
மாதுவள ராலயக் கும்பாபிஷேகமா மகரமதி வாரமதனில்
காருலவு கற்பகக் காவுகங்காதரக் கடவுளிரு கருணை மலரைக்
காசினியு ளோர்களுங் கருதியே கண்களாற் காணவுங் காட்சிதருமே.

### கலிப்பா

நம்புயங்கள் நயந்திடு நாவலர்
பம்புயங்கள் பகர்ந்திடு பாக்கியம்
அம்புயங்க ளருள்மலை யாண்டியின்
செம்புயங்கள் சிறந்திடு சீலமே.

ஸ்ரீசர்வஞ்ஞாதி சுத்த சைதன்னிய பரம்பா சாட்குண்ணிய சொருபகராகிய சிவபெருமான் சத்சித் பிரபஞ்சமெங்கும் பாலில் நெய்போல வெளிப்படாது வியாபித்திருப்பினும் ஆன்மாக்கள் தம்மை வழிபட்டுப்போக மோட்சங்களைப் பெற்றுய்யும் பொருட்டுத் தயிரில் நெய் போல வெளிப்பட்டிருக்குந் தானங்களாகிய சிவஸ்தலங்கள் இப்பரதகண்டத்திலே எண்ணிலாதன உள. அவைகளுள் சமய குரவர்களால் பாடல்கள் பெற்றிருக்கின்ற சிவஸ்தலங்கள் (உளஎ௰௪) நூதனத்துவமாக அனேக சிவாலயங்களுண்டாயிருக்கின்றன.

முற்காலத்தில் கைலாச வர்க்கமென்றும், மூலவர்க்கமென்றும் இரண்டுவிதமாகிய பதினெண்பெயர் சித்தாதிகளுட்சில சித்தர்கள் வகாரக் குளிகைகள்செய்து என்கைக்குளிகை பெரியதென்றும் உன் கைக்குளிகை சிறியதென்றும் ஒருவர்க்கொருவர் வாது கூறுகின்றதைச் சில பெரியோர்களறிந்து நீவிர் பொதிகையின்கண் அகத்தியரிடஞ்சென்று பெரிது இது; சிறிது இது; என்று நிச்சயித்துக் கொள்ளுங்களென்று சொன்னார்கள். அப்படியே அவ்விருவித சித்தர்களும் அகஸ்தியர் முன்னிலையிற்சேர்ந்து குளிகையின் மூலங்களைச் சொன்னார்கள். அதற்கு அகஸ்தியர் நீங்களிரு விதத்தார்களும் ஓர் பரிசுத்தமுள்ள பருப்பதத்திற் கூடியிருங்கள். அப்பருப்பதத்திற்கு நாம் வந்திருந்து உங்கள் குளிகைகளைப் பார்த்துச் சொல்லுகிறோமென்று சொன்னார். அதற்கு அந்த சித்தர்கள் நாங்களெந்தப் பருப்பதத்திற் கூடுவதென்று கேட்டார்கள். அகஸ்தியர் நாம் கௌமனக்குளிகைகள் தருகிறோம்; அதைவாங்கி அடக்கிக்கொள்ளுங்கள் அது எந்த விடத்திற் றங்குமோ; அந்தவிடத்தி லிருங்களென்று குளிகைகளைக் கொடுத்துப் போங்களென்று சொல்லி விட்டு யோகத்திலிருந்தார். அதுபோலே சித்தர்கள் குளிகைகளை வாங்கி அடக்கிக்கொண்டு வெகு பருவதங்களெல்லாஞ் சுற்றியும் அக்குளிகைகள் தங்காததினால் எங்கும் பிரவேசித்துப் பார்த்து இந்தப் பருவதத்தருகே வருகிறபோது குளிகைகள் தங்கியபடியால் இது அத்தியாச்சரியமுள்ள பருவதமென்று இம்மலையின் கண்ணிருந்து அகஸ்தியரை நினைத்தார்கள். அஃதறிந்து அகஸ்தியர் வந்திருந்து சித்தர்களைப்பார்த்து உங்கள் வகாரக்குளிகைகளை வையுங்கள். பிரித்துப் பார்த்துச் சொல்லுகிறோமென்று சொன்னார். சித்தர்கள் குளிகைகளை வைத்தார்கள். அகஸ்தியர் பார்த்து இது நன்றாயிருக்கிறதென்று சொல்லிவிட்டு, நம் வகாரக்குளிகையைப் பாருங்களென்று சித்தாதிகளைக் கூட்டிக்கொண்டு மகமேருவினிடத்தில் அவருடைய குளிகையில் ஒன்றைவைத்தார் வைத்தவுடன் அம்மலை முழுவதும் ௰ அ மாற்றுத் தங்கமாயிருந்ததைப் பார்த்துச் சித்தாதிகளும் ஆச்சரியமடைந்தார்கள். அதன்பின் அகஸ்தியர் சித்தாதிகளைப்பார்த்து நீங்கள் போய் அந்தப் பருப்பதத்தின்கண்ணே கணேசமூர்த்தியை வைத்துப் பூசித்தால் அவரநுக்கிரகத்தினால் உங்கட்கு வகாரவேலை திடச்சித்தமாகுமென்று சொல்லிவிட்டுப் பொதிகைக் கெழுந்தருளினார். உடனே சித்தர்களெல்லாம் இம்மலையில் வந்திருந்து கணேசமூர்த்தியை வைத்துப் பூசித்துத் துதித்து வகார வேலையிற்சித்தி பெற்றனர். அதனால் கணேசமூர்த்திக்கு மலையாண்டியென்றும், குளிகையை வைத்துப்பிரித்துப் பார்த்தபடியால் இம்மலைக்கு வையாபுரியென்றும் பெயர் உண்டாயிற்று. இப்படிக்குப் பெரியோர்களாலும் அகஸ்தியர் பெருங்காப்பிய நூல்களாலுஞ் சொல்லப்படுகின்ற இம்மகாமகிமைபொருந்திய வலையமா நகரத்தில் வீற்றிருக்கின்ற வையாபுரி மலையின்மேல் திருக்கோயில் கோபுரம், மண்டபம் விமானமுதலாகிய அத்தியாச்சரிய விசேஷ விசித்திரமாகச் சிவாலயம் அமைக்கப்பெற்றது. இவ்வாலயத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ மலையாண்டி யென்னும் கணேசப்பெருமான் ஸ்ரீ வலம்புரிநாதசுவாமி ஸ்ரீ வடுவகிர்விழியாம்பிகை முதலிய மூர்த்திகளுக்கும் நிகழும் நந்தன ௵ தை மீ ௰௩ உ சோமவாரம் சுக்கிலபட்சம் திரயோதசி புனர்பூச நக்ஷத்திரமுங்கூடிய சுத்தமங்கள சுபதினத்தில் உதயாதி நாழிகை 7க்கு மேல் 10 நாழிகைக்குள் மீன லக்கினத்தில் அஷ்டபந்தனசகித மகா கும்பாபிஷேகம் நடத்தலால் சிவ பக்திமான்களாகிய தாங்கள் பரிசனஞ்சூழ வந்து தரிசனஞ்செய்து சிவானந்தப் பெரும்பேறடையும்படி பிரார்த்திக்கின்றோம்.

இங்ஙனம்,

நந்தன ௵
மார்கழி மீ 16 உ

**நகரத்தார்,**
**வலையமாநகரம்.**

நாகபட்டணம், "பென்னிங்டன் அச்சுக்கூடத்திற்" பதிப்பிக்கப்பட்டது.



உ
சிவமயம்

# வலயபட்டி

## ஸ்ரீ வடுவகிர் விழியாள் சமேத
## ஸ்ரீ வலம்புரிநாதர் சுவாமி கோவில்
## அஷ்டபந்தன
# மகா கும்பாபிஷேக பத்திரிகை

நள ஆண்டு ஆவணித்திங்கள் 15-ஆம் நாள்
(ஆங்கிலம் 30–8–1916) புதன்கிழமை

தேவாரம்

திருச்சிற்றம்பலம்.

வாழ்க வந்தணர் வானவ ராவினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

மலையாண்ட விநாயகர்.

கலையாண்ட பல்சுருதி காட்டும் பொருளானை
நிலையாண்ட பல்செல்வ நினைப்பார்க் கருள்வானை
மலையாண்ட விந்நிலத்தி லழகார் வலயநகர்
மலையாண்ட விநாயகனை வாழ்த்தி வணங்குவமே.

வலம்புரிநாதர்.

பூவளரு திருமகளிர் பொருந்துதிருத் தமிழ்நாட்டிற் புதுவைக் கோமான்
தூவளரு மாட்சியிற்சீர்ச் சொல்வளரும் வலயநகர் துலங்க வந்த
தேவளருங் கங்கைமதி திகழ்சடையான் றனையடைந்தார் சிறக்க நல்கு
மாவளருங் கருணைநிறை வலம்புரிநா தன்மலர்த்தாள் வணங்கி வாழ்வாம்.

வடுவகிர் விழியாள்.

மலயமெனு மலையிருந்து வந்து வந்து குளிர்விக்கும் வளமார் செல்வ
நிலவமெனுந் தென்னாட்டி லெப்பொருளுந் தனையடைந்தார் நினைப்பி னல்குங்
கலையுருவிற் பெரியானைக் கருணைபெறும் பெயரானைக் காட்சி சான்ற
வலயநகர் வாழவரும் வடுவகிர்க்க ணுமையவளை வணங்கி வாழ்வாம்

ஸ்ரீமக அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சொருபரும், சருவ வியாபகத்வாதி அஷ்ட மங்கள திவ்விய குணங்களையுடையாரும், தம்மையடைந்தாரை இம்மை, மறுமை வீடென்னு மும்மைப்பயனும் அருளிக்காக்கும் பெருங்கருணையாளரும், யோகியாயிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிந்தும், போகியாயோக முக்தியுதவுவோரும் ஆகிய சிவபெருமான், மனம்,வாக்குகளுக்கு எட்டாத பரம்பொருளாகவிருந்தும், ஆன்மாக்கள் தம்மைக்கண்டு வழிபட்டு உய்யும் பொருட்டுக் கருணையுருவாகிய அருட்சக்தி சகிதராய், கந்த கணேசாதி பரிவாரங்களுடன் சிவலிங்காதி திருவுருவேற்றுக் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்குஞ் சிவதலங்கள் பலவுள்ளன.

அவற்றுள்ளே எந்நாட்டினுஞ்சிறந்த நன்னுடாகிய செந்தமிழ் மணக்குந்தென்னுட்டின் கண்ணே, காண்டகு சிறப்புடைப் பாண்டி வளநாட்டில், தேவாரமாகிய தமிழ் வேதத்தாற் பாராட்டப்பெற்ற **கொடுங்குன்றம் என்னும் பிரான்மலையை** மேல்பாலும், **திருப்புத்தூர் என்னுந்** திவ்விய தலத்தைத் தென்பாலுஞ் சமீபத்திற்பெற்று, புதுவைத் தமிழ் மன்னரின் ஆட்சியாற் சிறப்புற்று விளங்கும் **வலயமா நகரம்** என்னும் திவ்விய க்ஷேத்திரமும் ஒன்ருகும்.

இத்தலத்தில் சிவபிரான் வையாபுரி யென்னுந் தீர்த்த வடகரையில் உள்ள பரிசுத்த கிரியின்மேல், பல வருடங்களுக்கு முன் திருப்பணி செய்யப்பெற்ற திவ்யாலயத்தில் தமதருட்சக்தி யுக்தராய்க் கந்த கணேசாதி பரிவாரங்களுடன் எழுந்தருளியிருக்கின்ருர். இத்தலம் அகஸ்தியர் முதலிய சிவபக்தி சீவன்முக்த சித்தர்களால் வசித்து வணங்கப்பெற்றதென்று பெரியோர் கூறுகின்றனர்.

இத்திருக்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் சிவலிங்காதி திருவுருவங்களுக்குப் புனராவிருத்தி அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகஞ்செய்ய வேண்டுமென்று அன்பர்கள் கருதியபடி நிகழும் நள-ஹு ஆவணி-மீ ௧௫௳ (30—8—16) புதன்கிழமை, சுக்கிலபக்ஷம் துதியை திதி உத்தர நட்சத்திரம் அமிர்தயோகங்கூடிய சுத்தமங்கள சுபயோக சுப தினத்தில் உதயாதி நாழிகை ௰௩ இக்கு மேல் ௨௰ இக்குள் தனுர் லக்கினம் ராஜஸ வேளையில் திருவருளை முன்னிட்டு அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகஞ் செய்ய நிச்சயித்திருப்பதால் சிவநேயச் செல்வர்களாகிய தாங்கள் சுற்றத்தார் நண்பர்களுடன் வந்து தரிசனஞ்செய்து எல்லா நலன்களையும் பெற்று வாழும்படி வேண்டுகிரேம்.

நள-ஹு ஆவணி-மீ ௰௨௳ ஆதிவாரம் — அநுக்ஞை, விக்னேசுவர பூஜை.

௸ ௰௩௳ திங்கட்கிழமை — கடஸ்தாபனம்.

௸ ௰௫௳ புதவாரம் நாழிகை ௰௩ இக்கு மேல் ௨௰ இக்குள் தனுர் லக்கினத்தில் மஹா கும்பாபிஷேகம்.

இரவு ஸ்ரீ வடுவகிர் விழியாள் சமேத ஸ்ரீ வலம்புரிநாதர் ஸ்ரீ கணேச சுப்பிரமணிய சண்டேச சகிதராய் திரு வீதி பவனி வந்தருளுந் திருக்காட்சி.

இங்ஙனம்,

வலயபட்டி
நள-ஹு ஆவணி-மீ ௧௳ }

**நகரத்தார்,**
**வலயபட்டி.**

தனவைசியன் பிரஸ், கோநகர். காப்பி 1000.

மூன்றாவது கும்பாபிஷேகப் பத்திரிகையின் நகல்.



உ
சிவமயம்
மலையாண்டி சுவாமி துணை

# வலயமா நகர்
# ஸ்ரீ வடுவகிர் விழியாள் உடனுறை
# ஸ்ரீ வலம்புரிநாத சுவாமி
# அஷ்டபந்தன
# மஹா கும்பாபிஷேகப்பத்திரிகை

**விக்கிரம ஆண்டு தைத்திங்கள் 27-ஆம் நாள்**
**(ஆங்கிலம் 9-2-1941) ஞாயிற்றுக்கிழமை**

திருச்சிற்றம்பலம்.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெ லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

### மலையாண்டி விநாயகர்.

கலையாண்ட ஞானமுங் காண்டரு செல்வமுங் காசினிமேல்
தலையாண்ட சீர்த்தியுஞ் சான்ற வலயத் தனிநகரில்
நிலையாண்ட மாமலைக் கோயில்கொண் டன்பர் நினைவருளும்
மலையாண்டி யென்னுங்கை மாமுகத் தானடி வாழ்த்துவமே.

### வடுவகிர் விழியாள்.

அருளுரு வாயஅன் னையாய் அன்பர் அகமலர்த்தவிசில் வீற்றிருக்கும்
தெருளுரு வாய சிற்பரை வளங்கள் செறிதரும் வலயமா நகரிற்
பொருள்வளர் வணிகர் போற்றிநின் றேத்தப் பொலிவடு [வகிர்விழி யம்மை
இருமையும்அருளும் திருவடிமலரெம் இருதயம்மலர வாழ்த்துவமே.

### வலம்புரிநாதர்.

திருவளர் செல்வப் பெருந்தன வணிகர் சேர்ந்துவாழ் சிறப்புந் [தெய்வக்
கருவள ரறமுங் கலந்தேபே ரின்புங் கனிதரும் வலயமா நகரில்
உருவளர் மலைமே லுமையொரு பாக மொளிர்தரக் [கோயில்கொண் டருளும்
மருவள நிதழி வலம்புரி நாதன் மலர்ப்பதம் வழுத்தி வாழ்த்துவமே.

### முருகப் பெருமான்.

விருப்பறிவு செயலென்று மேதகுசத் திகளாக
மருப்பொலியுங் குழல் வள்ளி வடிவேலின் திரன் மகளார்
இருப்பவெழின் மிகு வலய மெனும்பதியில் எமக்கருளப்
பொருப்பிலுறைந் திருமுருகன் பொன்னடியைப் போற்றுவமே.

எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளும், உண்மையறிவின்ப வுருவாய் அங்கிங்கெனுதபடி யெங்கும் நிறைந்த இறைபரம் பொருளும், படைப்பு முதலிய ஐம்பெருந்தொழிற்கும் தலைவரும், ஐம்பெரும் பூதங்களும் தத்தங் காரணங்களுள் ஒடுங்கி முடிவடையும் மாபேருழிக்காலத்தும் தாம் ஒருவரே வேதத்து ஒலிகொண்டு வீணை கேட்கும் நித்திய விமலரும் ஆகிய சிவபெருமான், மக்கள் முதலிய உயிர்த் தொகுதிகள் தம்மையடைந்து இம்மை மறுமை வீடென்னும் மும்மை நலனும் பெற்றின்புறும் வண்ணம், கருணையே வடிவாகத் திகழும் தம் அருட்சக்தியாகிய உமையம்மை யுடனும், கந்த கணேசாதி பரிவாரங்களுடனும் சிவலிங்காதி திருவுருக்கொண்டு எழுந்தருளி யிருக்குந் திருத்தலங்கள் இந்நிலவுலகிற் பலவுள்ளன.

அவற்றுள்ளே, செந்தமிழ்ப் பாண்டி வளநாட்டில் தேவார அருட்பாசுரங்களால் பாராட்டப்பெற்ற கொடுங்குன்றம் என்னும் பிரான்மலை மேல்பாலும், திருப்புத்தூர் என்னும் திருத்தலம் தென்பாலும் விளங்க, இவற்றின் இடையே திகழ்வதும், புதுக்கோட்டைத் தமிழ் மன்னர் ஆட்சியுட்பட்டதும் ஆகிய வலயமாநகரம் என்னும் திருத்தலமும் ஒன்றாகும்.

இத்தலத்தில் வையாபுரித் தீர்த்தத்தின் வடகரைக்கண்ணுள்ள மலைமேல் அம்மை யப்பர்க்கும், பரிவாரங்களுக்கும் எங்களால் பண்டைக் காலத்தே அமைக்கப்பெற்ற திருக்கோயில் சிதைவுற்றிருத்தலை அறிந்து சிதைவுற்ற பகுதிகளைத் திருத்தியமைத்தும், கோபுரம் முதலிய வற்றைச் சிற்ப முறைப்படி வண்ணச்சுதைகளால் புதுப்பித்தும் திருவருளை முன்னிட்டுத் திருப்பணி செய்யப்பெற்று நிறைவேறியது. ஆதலின்,

இத்திருக்கோயிற்கண்ணே எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வடுவகிர் விழியாள் உடனுறை ஸ்ரீ வலம்புரிநாதசுவாமிக்கும், மலையாண்டி விநாயகர்க்கும், கந்தகணேசாதி பரிவாரங்களுக்கும், நிகழும் விக்கிரம-ஞு தை-மீ உ௭-ந் தேதி (9—2—1941) ஞாயிற்றுக்கிழமை பூர்வ பக்கம் திரயோதசி திதி புனர்வசு நட்சத்திரம் சித்தயோகம் கூடிய நன்னாளில், உதயாதி நாழிகை 13¾-க்கு மேல் 15-க்குள் (காலை மணி 11-30 அளவில்) நல் வேளையுடன் கூடிய ரிஷப இலக்கி னத்தில் அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் செய்யத் திருவருட்டுணைக்கொண்டு நிச்சயித்திருப் பதால், சிவநேசச் செல்வர்களாகிய தாங்கள் சுற்றமுந் துணையுஞ் சூழ்தர வந்து கும்பாபிஷேக தரிசனஞ்செய்து சிவபுண்ணியப் பேற்றை அடைய விரும்புகின்றோம்.

**செயல்முறை விளக்கம்.**

1. விக்ரம-ஞு தை-மீ 20உ (2—2—1941) ஞாயிற்றுக்கிழமை உதயாதி நாழிகை ௰௩ க்கு மேல் ௰௫ க்குள் நல் வேளையுடன் கூடிய இடப இலக்கினத்தில தனபூஜை, அனுக்ஞை, கணபதி வழிபாடு முதலியன.

2. தை-மீ 25உ (7—2—1941) வெள்ளிக்கிழமை உதயாதி நாழிகை ௪-க்கு மேல் ௬-க்குள் நல் வேளையுடன் கூடிய கும்ப இலக்கினத்தில் கடஸ்தாபனம்.

3. தை-மீ 25உ 26உ களில் காலை மாலை நேரங்களில் யாக பூஜை.

4. தை-மீ 27உ (9—2—1941) ஞாயிற்றுக்கிழமை உதயாதி நாழிகை 13¾க்கு மேல் 15க்குள் (காலை மணி 11-30 அளவில்) ஸ்ரீ வடுவகிர்விழியம்மை உடனுறை ஸ்ரீ வலம்புரிநாத சுவாமிக்கும், மலையாண்டி விநாயகர்க்கும் பரிவார தேவதைகட்கும் அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்.

அன்று இரவு ஐம்பெருங் கடவுளரும் திருவீதியில் உலாப்போந்து காட்சியருளுதல்.

இங்ஙனம் அன்புள்ள,

வலயபட்டி
விக்கிரம தை 10உ
23—1—1941

**நகரத்தார்,**
**வலயபட்டி.**

ஸ்ரீ கதிரேசன் பிரஸ், வலம்புரி. 1-41.

நான்காவது கும்பாபிஷேகப் பத்திரிகையின் நகல்.



உ
சிவமயம்
அருள்மிகு மலையாண்டி சுவாமி துணை

## வலையபட்டி

## அருள்மிகு மலையாண்டி சுவாமி கோயில்

## வடுவகிர் விழியாள் சமேத வலம்புரிநாத சுவாமி

# அஷ்டபந்தன

# மஹாகும்பாபிஷேகப்பத்திரிகை

காளயுக்தி ஆண்டு சித்திரைத்திங்கள் 8-ஆம் நாள்
(ஆங்கிலம் 21–4–1978) வெள்ளிக்கிழமை

### மலையாண்டி விநாயகர்.

கலையாண்ட ஞானமுங் காண்டகு செல்வமுங் காசினிமேல்
தலையாண்ட சீர்த்தியுஞ் சான்ற வலயத் தனிநகரில்
நிலையாண்ட மாமலைக் கோயில்கொண் டன்பர் நினைவருளும்
மலையாண்டி யென்றுங்கை மாமுகத் தானடி வாழ்த்துவமே.

### முருகப் பெருமான்.

விருப்பறிவு செயலென்னு மேதகுசத் திகளாக
மருப்பொலியுங் குழல் வள்ளி வடிவேலிந் திரன் மகளார்
இருப்பவெழின் மிகு வலய மெனும்பதியில் எமக்கருளப்
பொருப்பிலுறுந் திருமுருகன் பொன்னடியைப் போற்றுவமே.

### வலம்புரிநாதர்.

திருவளர் செல்வப் பெருந்தன வணிகர் சேர்ந்துவாழ் சீர்மையுந் [தெய்வக்
கருவள ரேமும் கலந்தேபே ரின்புங் கவினுறும் வலயமா நகரில்
உருவளர் மலைமே லுமையொரு பாக மொளிர்தரக் [கோயில்கொண் டருளும்
மருவள ரிதழி வலம்புரி நாதன் மலர்ப்பதம் வழுத்தி வாழ்த்துவமே.

### வடுவகிர் விழியாள்.

அருளுரு வாயஅன் னையாய் அன்பர் அகமலர்த்தவிசில் வீற்றிருக்கும்
தெருளுரு வாய சிற்பரை வளங்கள் செறிதரும் வலயமா நகரிற்
பொருள்வளர் வணிகர் போற்றிநின் றேத்தப் பொலிவடு [வகிர்விழி யம்மை
இருமையும்அருளும் திருவடிமலரெம் இருதயம்மலர வாழ்த்துவமே.

*மெய்யன்பு சான்றீர் !*

அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும் தெரிக்கும் படித்தன்றி நின்ற சிவபெருமான், அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாகி, இவ்வுலகில் உள்ள உயிர்கள் எல்லாம் உய்யும்வண்ணம் சிவலிங்க வடிவமதாய்ப் பெருங் கருணைத் திருமேனியுடன் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் ஏராளம். அவற்றுள் நகரத்தார் போற்றிப் புரந்துவரும் சிவாலயங்கள் கணக்கிலடங்கா.

ஒருநாமம், ஓர்உருவம், ஒன்றுமிலார்க்கு ஆயிரம் திருநாமம் பாடித்தெள்ளேணம் கொட்டும் நகரத்தார், ஆரறிவார் என்ன அனந்த மறை ஓலமிடும் பேரறிவை, இன்பப் பெருக்கைத் தன்னகத்தே இருத்திப் பக்திக் கடலுள் தம்மைப் பதித்துக்கொள்ள, மன்றுடும் வாழ்வாய், மரகதம்சேர் மணிக்குன்றாய்த் திகழும் சிவபெருமானுக்கு, இற்றைக்குச் சற்றேறக்குறைய 90 ஆண்டுகட்கு முன்னர் ஒவ்வொரு நகரத்தார் குடும்பத்திலிருந்தும் நாள்தோறும் ஒவ்வொருவர் விதம் வந்து ஒருங்கிணைந்து குன்றின்மேற் கல்லிழுத்து இச்சிவாலயம் அமைத் தருளினர். அவ்வாறு, நகரத்தார் வாழும் திருத்தலங்களுள் மலைமேல் சிவாலயம் அமையப்பெற்ற திருநகர் இதுவொன்றே.

இத்திருக்கோயில் இதற்கு முன் மும்முறை திருக்குட நீராட்டு விழாச் செய்யப்பெற்றுள்ளது. தற்போது மிகச் சிறந்த முறையில் புதிதாக இராஜகோபுரம் ஒன்றினையும் முன் மண்டபத்தையும் பள்ளியறையையும் சிறப்புற அமைத்தும் ஏற்கெனவே உள்ள கோபுரங்களையும், சுதைகளையும், செப்பனிட்டும், வண்ணம் பூசியும், மதிற் சுவர் எழுப்பியும், சிற்பக் கடவுளர்க்கு அஷ்டபந்தனம் செய்தும் கோயில் திருப்பணி வேலைகள் இறையருளால் இனிதே நிறைவு பெற்றுள்ளன.

எனவே, இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு மலையாண்டி விநாயகருக்கும், வடுவகிர் விழியாள் உடனுறை வலம்புரிநாத சுவாமிக்கும், கந்த கணேசாதி பரிவார தெய்வங்களுக்கும் நிகழும் காளயுக்தி௵ **சித்திரை மீ 8உ (21—4—1978)** வெள்ளிக்கிழமை திரயோதசி திதியும் அஸ்த நட்சத்திரமும் அமிர்த யோகமும் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 4-00க்கு மேல் 6-00க்குள் (காலை மணி 7-41க்கு மேல் 8-24க்குள்) ரிஷப லக்னத்தில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் செய்யத் திருவருட்டுணை கொண்டு நிச்சயித்திருப்பதால் பக்தகோடிகள் அனைவரும் வந்திருந்து கும்பாபிஷேகத்தைக் கண்டு களித்துத் திருவருட் பெருங் கருணைக்குப் பாத்திரராகி எல்லா நலன்களும் பெற்று வாழ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

பிங்கள ௵ மாசி மீ 10உ
22—2—1978

# நகரத்தார்,

**வலையபட்டி,**
புதுக்கோட்டை மாவட்டம்.

---

## நிகழ்ச்சி நிரல்

*காளயுக்தி ௵ சித்திரை மீ 4உ (17—4—78) திங்கட்கிழமை ஆயில்ய நட்சத்திரம், தசமி திதி, சித்தயோகம் கூடிய சுபயோக சுபதினத்தில் மாலை 5 மணிக்கு மேல் 5-30 மணிக்குள் கன்னியா லக்னத்தில்*

**தனபூஜை, அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை.**

*சித்திரை மீ 5உ (18—4—78) செவ்வாய்க்கிழமை மக நட்சத்திரம், ஏகாதசி திதி, சித்தயோகம் கூடிய சுபயோக சுபதினத்தில் மாலை 6 மணிக்கு மேல் 7-30 மணிக்குள் துலா லக்னத்தில் கலாகர்ஷணம் செய்து கும்ப ஸ்தாபனம்.*

*சித்திரை மீ 6உ (19—4—78) புதன்கிழமை காலை, மாலை — யாகபூஜை.*
*,, 7உ (20—4—78) வியாழக்கிழமை காலை, மாலை — யாகபூஜை.*
*,, 8உ (21—4—78) வெள்ளிக்கிழமை காலை — யாகபூஜை.*
*காலை மணி 7-41க்கு மேல் 8-24க்குள்* கும்பாபிஷேகம்.

---

*குறிப்பு :* 20—4—78 & 21—4—78 ஆகிய இரு தினங்களிலும் இன்னிசைக் கச்சேரிகளும், இலக்கிய உபந்நியாசங்களும் நடைபெறும். 21—4—78அன்று இரவு பஞ்சமூர்த்திகள் திருவுலாக் காட்சி நடைபெறும்.

ஸ்ரீ கதிரேசன் மின்னியல் அச்சகம், கும்பகோணம், போன் 678 & விருத்தாசலம், போன் 133. காப்பி 3000+600

உ

சிவமயம்

வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!

அருள்தரு. மலையாண்டி சுவாமி துணை
தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி!



வலையபட்டி நகரத்தார்களுக்குச் சொந்தமான, அருள்தரு. மலையாண்டி சுவாமி,
அருள்தரு. வடுவகிர்விழியாள் உடனாய வலம்புரிநாத சுவாமி திருக்கோயில் நூற்றாண்டு
விழா, மற்றும் எண்வகை மருந்துக் கட்டமைத்து

ஐந்தாவது திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழா,

புதிதாகக் கட்டப் பெற்றுள்ள,
அருள்தரு. வரதராஜப் பெருமாள் திருக்கோயில்
முதலாவது திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழா,
புதிதாகக் கட்டப் பெற்றுள்ள,
அருள்தரு. ஐயப்ப சுவாமி திருக்கோயில்
முதலாவது திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழா,

## அழைப்பிதழ்.

## *25-1-1993*

மலையாண்டி விநாயகர்

1. கலையாண்ட ஞானமும் காண்டகு செல்வமும் காசினி மேல்
   தலையாண்ட சீர்த்தியுஞ் சான்ற வலையத் தனிநகரில்
   நிலையாண்ட மாமலைக் கோயில் கொண்டன்பர் நினைவருளும்
   மலையாண்டி யென்னுங்கை மாமுகத் தானடி வாழ்த்துவமே!

முருகப் பெருமான்

2. விருப்பறிவு செயலென்னு மேதகுசத் திகளாக
   மருப்பொலியுங் குழல்வள்ளி வடிவேலிந்திரன் மகளார்
   இருப்பவெழின் மிகுவலய மெனும்பதியில் எமக்கருளப்
   பொருப்பிலுறுந் திருமுருகன் பொன்னடியைப் போற்றுவமே!

வழிவழியாக வந்த நகரத்தார் மரபில், வலையபட்டியில் வா ழும் ஏழுகோயில் நகரத்தார்கள், வலையபட்டி மலையின் மீது 100 (நூறு) ஆண்டுகட்கு முன்னர், குடும்பத்துக்கு ஒருவர் வீதம் வந்து, நகரத்தார்களே மலை உச்சிக்குக் கல் இழுத்து, மலையாண்டி விநாயகர், வடுவகிர் விழியாள் உடனாய வலம்புரிநாதர், மற்றும் பிற இறைவர் அனைவருக்கும் கற்றளி அமைத்துக் குடமுழுக்கு விழாவும் செய்தனர்

மேலும் இத்திருக்கோயிலில் அவ்வப்போது ஏற்பட்ட பழுதுகள் செப்பனிடப்பட்டும், சுதைகளைப் புதுக்கிச் சீர் செய்தும், வண்ணம் வைத்தும், இதுவரை நான்கு குடமுழுக்கு விழாக்கள் செய்யப் பெற்றுள்ளன.

சென்ற முறை, புதிதாக இராஜகோபுரம் ஒன்றினையும். முன் மண்டபத்தையும் பள்ளியறையினையும், சிறப்பாக அமைத்தும், ஏற்கனவே உள்ள கோபுரங்களையும், சுதைகளையும் செப்பனிட்டும், வண்ணம் பூசியும், இரும்புப் படல்கள் அமைத்தும், மதிற்சுவர் எழுப்பியும், சிற்பக் கடவுளர்க்கு எண்வகை மருந்துக் கட்டமைத்தும், நான்காவது குடமுழுக்கு விழாச் செய்யப் பெற்றது.

தற்போது எல்லாக் கோபுரங்களையும் பழுது பார்த்தும், சுதைகளைச் செப்பனிட்டும், வண்ணம்பூசியும், கற்றள வரிசையமைத்தும், மதிற்சுவரின் உட்புறத்தில் வடமேற்கில் வரதராஜப் பெருமாள் திருக்கோயிலைப் புதிதாகக் கட்டியும், மதிற்சுவருக்கு வெளியில் தென்பால் ஐயப்பசுவாமி திருக்கோயிலைப் புதிதாகக் கட்டியும், கோயிலின் உள்ளே மஹாலெட்சுமி சிலை அமைத்தும், அனைத்துக் கடவுளருக்கும் எண்வகை மருந்துக் கட்டமைத்தும், திருப்பணி வேலைகள் சிறப்புறச் செய்யப் பெற்றுள்ளன. எனவே, நிகழும் ஆங்கிரஸ ஆண்டு தைத்திங்கள் 12ஆம் நாள் *(25-1-1993)* திங்கட்கிழமை வளர்பிறை, திரிதியை திதி, சதய நட்சத்திரம், சித்தயோகம் கூடிய நன்னாளில் காலை மணி *9-45*க்குமேல், *10-30*க்குள் மீனலெக்னத்தில், இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும், அருள்தரு. மலையாண்டி சுவாமி, அருள்தரு. வடுவகிர் விழியாள் உடனாய வலம்புரிநாதர், அருள்தரு ஸ்ரீதேவி. பூதேவி உடனாய வரதராஜப் பெருமாள், அருள்தரு. ஐயப்பசுவாமி, மற்றும் பிற இறைவர்களுக்கும்திருக்குடமங்கலநன்னீராட்டுப்பெருவிழாச்செய்யத்திருவருட்டுணைக்கொண்டுநிச்சயித்திருப்பதால், இறை உணர்வு மிக்க பெருமக்கள் அனைவரும் வந்திருந்து, திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழாவினைக் கண்டு மகிழ்ந்து திருவருட் பெருங்கருணைக்கு உரியவராகி எல்லா நலங்களும் பெற்று வாழ வேண்டுகிறோம்.

காஞ்சி காமகோடி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் வருகைத்தந்து ஆசி கூறுவார்கள்

ஆங்கீரஸ ஆண்டு
கார்த்திகைத் திங்கள்15ஆம் நாள்
*30.11.92.*

இங்ஙனம்,
**நகரத்தார்,**
வலையபட்டி -622 411
புதுக்கோட்டை மாவட்டம்.

உ
சிவமயம்
அருள்தரு மலையாண்டி சுவாமி துணை

வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!



புதுக்கோட்டை மாவட்டம், வலையபட்டி நகரத்தார்களுக்குச் சொந்தமான

# அருள்தரு மலையாண்டி சுவாமி திருக்கோயில் ஆறாவது மஹா கும்பாபிஷேக அழைப்பிதழ்

10-02-2008 • ஞாயிற்றுக்கிழமை

**மலையாண்டி விநாயகர்**

1. [illegible]

**முருகப் பெருமான்**

2. [illegible]

**வலம்புரி நாதர்**

3. திருவளர் செல்வப் பெருந்தன வணிகர் சேர்ந்துவாழ் [illegible]
[illegible]

**வடுவகிர் விழியாள்**

4. [illegible]

**வரதராஜப் பெருமான்**

5. திருக் கண்டேன், பொன்மேனி கண்டேன், திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன், புரிசங்கம் கைக்கண்டேன்,
என்னாழி வண்ணன்பால் இன்று!

**ஐயப்ப சுவாமி**

6. மெய்யப்பன் ஆகி மிளிர்ந்து விளங்குகின்ற
ஐயப்பா! உன்னுடைய அடியினை போற்றிடுவோம்
செய்யப்பா உன்னருளைச் சிறப்புற்று நாங்கொள்வோம்,
உய்யும் வகையில் உவந்து.

மெய்யன்பு சான்றீர்!

பூலோகத்தை வைகுந்தமாக்கி, வைகுந்தத்தைச் சொர்க்கமாக்கும் நகரத்தார்களுக்குச் சொந்தமான வலையபட்டி அருள்தரு. மலையாண்டி சுவாமி, அருள்தரு. வடுவகிர்விழியாள் உடனாய வலம்புரிநாத சுவாமி திருக்கோயில் கட்டி 116 ஆண்டுகள் நிறைவுற்றுள்ளன. தற்போது சுவாமிகளின் அடிப்பீடத்தில் வேதமந்த்ரத் தங்கத் தகடுகள் பதித்தும், எண்வகை மருந்துக் கட்டமைத்தும், வெள்ளிப் பந்தனம் செய்தும், ஆறாவது குடமுழுக்கு விழா நிகழவிருக்கிறது.

இத்துடன் இக்கோயில் வளாகத்தில் அமைந்துள்ள ஸ்ரீதேவி பூதேவி உடனாய அருள்தரு. வரதராஜப் பெருமாள் ஆலயத்திற்கும், அருள்தரு ஐயப்ப சுவாமி ஆலயத்திற்கும் அவ்வாறே மருந்துக் கட்டுகள் அமைத்துக் குடமுழுக்கு விழாக்கள், நிகழும் சர்வசித்து ஆண்டு தைத்திங்கள் 27ஆம் நாள் (10-02-2008) ஞாயிற்றுக்கிழமை காலை 9.15 மணிக்கு மேல் 10.15 மணிக்குள் இனிதே நிகழ்வுறும்.

வழிவழியாக வந்த நகரத்தார் மரபில், வலையபட்டியில் வாழும் ஏழு கோயில் நகரத்தார்கள், தற்போதிருக்கும், மலையாண்டி சுவாமி மலையின் மீது 116 (நூற்றிப் பதினாறு) ஆண்டுகட்கு முன்னர், குடும்பத்துக்கு ஒருவர் வீதம் வந்து, நகரத்தார்களே மலை உச்சிக்குக் கல் இழுத்து, மலையாண்டி விநாயகர், வடுவகிர் விழியாள் உடனாய வலம்புரிநாதர் மற்றும் பிற இறைவர்களுக்கும் கற்றளி அமைத்துக் குடமுழுக்கு விழாவும் செய்தனர். மேலும் இத்திருக்கோயிலில் அவ்வப்போது ஏற்பட்ட பழுதுகள் செப்பனிடப்பட்டும், சுதைகளைப் புதுக்கிச் சீர்செய்தும், வண்ணம் வைத்தும், இதுவரை ஐந்து குடமுழுக்கு விழாக்கள் செய்யப் பெற்றுள்ளன.

தற்போது எல்லாக் கோபுரங்களையும் பழுதுபார்த்தும், செப்பனிட்டும், வண்ணம் பூசியும், எண்வகை மருந்துக் கட்டமைத்தும், சுவாமிகளின் அடிபீடத்தில் தங்க யந்த்ரத் தகடுகள் பதித்தும், வெள்ளிப் பந்தனம் செய்தும், திருப்பணி வேலைகள் சிறப்புறச் செய்யப் பெற்றுள்ளன. எனவே நிகழும் சர்வசித்து ஆண்டு தைத்திங்கள் 27ஆம் நாள் (10-2-2008) ஞாயிற்றுக்கிழமை வளர்பிறை, சதுர்த்தி திதி, உத்திரட்டாதி நட்சத்திரம், அமிர்தயோகம் கூடிய நன்னாளில் காலை 9-15 மணிக்கு மேல் 10-15 மணிக்குள் மீன லக்னத்தில் இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் அருள்தரு. மலையாண்டி சுவாமி, அருள்தரு. வடுவகிர்விழியாள் உடனாய வலம்புரிநாதர், அருள்தரு. ஸ்ரீதேவி, பூதேவி உடனாய வரதராஜப் பெருமாள், அருள்தரு. ஐயப்ப சுவாமி மற்றும் இறைவர்களுக்கும், திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழாச் செய்யத் திருவருட்டுணைக் கொண்டு நிச்சயித்திருப்பதால், இறை உணர்வு மிக்க பெருமக்கள் அனைவரும் வந்திருந்து இப்பெருவிழாவினில் கலந்துகொண்டு, திருவருட்பெருங்கருணைக்கு உரியவர்களாகி எல்லா நலங்களும் பெற்று வாழ வேண்டுகிறோம்.

## நிகழ்ச்சி நிரல்

| தமிழ்த்தேதி | ஆங்கிலத் தேதி | கிழமை | நேரம் | நிகழ்ச்சிகள் | நேரம் | நிகழ்ச்சிகள் |
|---|---|---|---|---|---|---|
| சர்வசித்து வருடம் தை மாதம் 23ஆம் நாள் | 06-02-2008 | புதன் கிழமை | காலை 09.00 | அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, தன பூஜை, கணபதி ஹோமம். | | |
| தை மாதம் 24ஆம் நாள் | 07-02-2008 | வியாழக் கிழமை | காலை 09.00 | நவக்கிரஹ ஹோமம், வாஸ்து சாந்தி | மாலை 04.00<br>மாலை 06.30<br>இரவு 10.00 | மிருத்சங்கிரஹணம், அங்குரார்ப்பணம் ரக்ஷாபந்தனம் கலாகர்ஷணம், யாத்ராதானம் முதல் கால யாகபூஜைகள் பூர்ண ஆகுதி, தீபாராதனை |
| தை மாதம் 25ஆம் நாள் | 08-02-2008 | வெள்ளிக் கிழமை | காலை 09.00<br>காலை 12.00 | இரண்டாம் கால யாக - பூஜைகள்<br>பூர்ண ஆகுதி, தீபாராதனை | மாலை 06.00<br>இரவு 09.00 | மூன்றாம் கால யாகபூஜைகள்,<br>பூர்ண ஆகுதி, தீபாராதனை |
| தை மாதம் 26ஆம் நாள் | 09-02-2008 | சனிக் கிழமை | காலை 08.50<br>காலை 11.50 | நான்காம் கால யாகபூஜைகள்<br>பூர்ண ஆகுதி தீபாராதனை | மாலை 06.30<br>இரவு 09.00 | ஐந்தாம் கால யாகபூஜைகள்<br>பூர்ண ஆகுதி, தீபாராதனை |
| தை மாதம் 27ஆம் நாள் | 10-02-2008 | ஞாயிற்றுக் கிழமை | காலை 05.30<br>காலை 08.30<br>காலை 09.00<br>காலை 9.15 - 10.15 | ஆறாம் கால யாகபூஜைகள்<br>பூர்ண ஆகுதி, தீபாராதனை<br>கடம் புறப்படுதல்<br>மஹா கும்பாபிஷேகம் | மாலை 04.00<br>இரவு | மஹாபிஷேகம்<br>பஞ்சமூர்த்திகள் திருவீதி உலா |

சர்வசித்து ஆண்டு
கார்த்திகைத் திங்கள் 19ஆம் நாள்
5-12-2007

இங்ஙனம்
**நகரத்தார்**
வலையபட்டி - 622 411, புதுக்கோட்டை மாவட்டம்

உ
சிவமயம்
அருள்மிகு மலையாண்டி சுவாமி துணை
தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!



புதுக்கோட்டை மாவட்டம், வலையபட்டி நகரத்தார்களுக்குச் சொந்தமான

# அருள்மிகு மலையாண்டி சுவாமி திருக்கோயில்

## ஏழாவது மஹா கும்பாபிஷேக அழைப்பிதழ்

அன்புடையீர்,

பூலோகத்தை வைகுந்தமாக்கி, வைகுந்தத்தைச் சொர்க்கமாக்கும் நகரத்தார்களுக்குச் சொந்தமான வலையபட்டி அருள்மிகு மலையாண்டி சுவாமி, அருள்மிகு வடுவகிர்விழியாள் உடனாய வலம்புரிநாத சுவாமி திருக்கோயில் கட்டி 132 ஆண்டுகள் நிறைவுற்றுள்ளன. தற்போது சுவாமிகளின் அடிப்பீடத்தில் வேதமந்த்ரத் தங்கத் தகடுகள் பதித்தும், எண்வகை மருந்துக் கட்டமைத்தும், வெள்ளிப் பந்தனம் செய்தும், ஏழாவது குடமுழுக்கு விழா நிகழவிருக்கிறது.

இத்துடன் இக்கோயில் வளாகத்தில் அமைந்துள்ள ஸ்ரீதேவி பூதேவி உடனாய அருள்மிகு வரதராஜப் பெருமாள் ஆலயத்திற்கும், அருள்மிகு ஐயப்ப சுவாமி ஆலயத்திற்கும் அவ்வாறே மருந்துக் கட்டுகள் அமைத்துக் குடமுழுக்கு விழாக்கள், நிகழும் குரோதி ஆண்டு ஆவணித் திங்கள் 23 ஆம் நாள் (08.09.2024) ஞாயிற்றுக்கிழமை காலை 7.35 மணிக்கு மேல் 8.30 மணிக்குள் இனிதே நிகழ்வுறும்.

**மலையாண்டி விநாயகர்**

கலையாண்ட ஞானமும் காண்டகு செல்வமும் காசினி மேல்
தலையாண்ட கீர்த்தியுஞ் சான்ற வலையத் தனிநகரில்
நிலையாண்ட மாமலைக் கோயில் கொண்டன்பர் நினைவுரும்
மலையாண்டி யென்னுங்கை மாமுகத் தானடி வாழ்த்துவமே!

**முருகப் பெருமான்**

விருப்பறிவு செயலென்று மேதகுசத் திகளாக
மருப்பொலியுங் குழல்வள்ளி வடிவேலிந்திரன் மகளார்
இருப்பவெழின் மிகுவலய மெனும்பதியில் எமக்கருளப்
பொருப்பிவுறுந் திருமுருகன் பொன்னடியைப் போற்றுவமே!

**வலம்புரி நாதர்**

திருவளர் செல்வப் பெருந்தன வணிகர் சேர்ந்துவாழ் சீர்மையுந் தெய்வக்
கருவள ரறமுங் கலந்தபே ரின்புங் கவினுறும் வலைய மாநகரில்
உருவளர் மலைமே லுமையொரு பாக மொளிர்தரக் கோயில் கொண்டருளும்
மருவள ரிதழி வலம்புரிநாதன் மலர்ப்பதம் வழுத்தி வாழ்த்துவமே!

**வடுவகிர் விழியாள்**

அருளுருவாய அன்னையாய் அன்பர் அகமலர்த் தவிசில் வீற்றிருக்கும்
தெருளுருவாய் சிற்பரை வளங்கள் செறிதரும் வலய மாநகரில்
பொருள்வளர் வணிகர் போற்றி நின்றேத்தப் பொலிவடுவகிர்விழியம்மை
இருமையும் அருளும் திருவடி மலரெம் இருதயம் மலர வாழ்த்துவமே!

**வரதராஜப் பெருமாள்**

திருக் கண்டேன், பொன்மேனி கண்டேன், திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன், புரிசங்கம் கைக்கண்டேன்,
என்னாழி வண்ணன்பால் இன்று!

**ஐயப்ப சுவாமி**

மெய்யப்பன் ஆகி மிளிர்ந்து விளங்குகின்ற
ஐயப்பா! உன்னடியை அன்புடனே போற்றிடுவோம்
செய்யப்பா உன்னருளைச் சீர்பெற்று நாங்களெல்லாம்,
உய்யும் வகையில் உவந்து.

தன வைசியர், இரத்தின தன வைசியர், பூபால தன வைசியர், மகுட தன வைசியர் என்ற பல சிறப்புப் பெயர்களைப் பெற்றவர்கள் நகரத்தார்கள். ஊருணிகள், குளங்கள் இவை உண்டு பண்ணி மிக்க தர்மங்கள் தாரணியில் செய்திட்ட சத்புருஷர்களாகிய இவர்கள், மன்னர் பின்னோர் என்ற புகழுக்கும் உரியவர்கள், பாண்டிய மன்னர்களுக்கு வழிவழியாக முடிசூட்டுகின்ற பேறும் பெற்றவர்கள், உலகியல் வாழ்வு சிறப்புற இடையறா இறைவழிபாட்டிலும் இறைத் தொண்டிலும் தத்தம்மை ஆட்படுத்திப் பேரின்பப் பெருவாழ்வு கண்டவர்கள்.

நகரத்தார்கள், புதிது புதிதாகக் கட்டிக் குடமுழுக்கு விழாச் செய்த கோயில்கள் ஏராளம், பழம்பெரும் கோயில்களைப் புதுக்கியும், செப்பனிட்டும், குடமுழுக்கு விழாச் செய்தும், பள்ளிகள், கல்விச் சாலைகள், பல்கலைக்கழகங்கள், மருத்துவமனைகள் எனப் பன்னூறு அமைத்தும், அன்னசத்திரம் ஆயிரம் ஆக்கியும், தண்ணீர்ப் பந்தர்கள், நந்தவனங்கள் அமைத்தும், இன்னோரன்ன பிற அறச் செயல்கள் புரிந்தும், தமிழகத்தின் வரலாற்றில் நீண்ட பெரும்புகழ் பெற்றவர்கள்.

வழிவழியாக வந்த நகரத்தார் மரபில், வலையபட்டியில் வாழும் ஏழு கோயில் நகரத்தார்கள், தற்போதிருக்கும், மலையாண்டி சுவாமி கோவில் அமைந்துள்ள மலையின் மீது 132 ஆண்டுகட்கு முன்னர் குடும்பத்துக்கு ஒருவர் வீதம் வந்து, நகரத்தார்களே மலை உச்சிக்குக் கல் இழுத்து, மலையாண்டி விநாயகர், வடுவகிர்விழியாள் உடனாய வலம்புரிநாதர் மற்றும் பிற இறைவர்களுக்கும் கற்றளி அமைத்துக் குடமுழுக்கு விழாவும் செய்தனர். மேலும் இத்திருக்கோயிலில் அவ்வப்போது ஏற்பட்ட பழுதுகள் செப்பனிடப்பெற்றும், சுதைகளைப் புதுக்கிச் சீர்செய்தும், வண்ணம் வைத்தும், இதுவரை ஆறு குடமுழுக்கு விழாக்கள் செய்யப் பெற்றுள்ளன.

தற்போது எல்லாக் கோபுரங்களையும் பழுதுபார்த்தும், செப்பனிட்டும், வண்ணம் பூசியும், சுதைகள் அனைத்தும் புதிதாகச் செய்தும் எண்வகை மருந்துக் கட்டமைத்தும், சுவாமிகளின் அடிப்பீடத்தில் தங்க யந்த்ரத் தகடுகள் பதித்தும், வெள்ளிப் பந்தனம் செய்தும், திருப்பணி வேலைகள் சிறப்புறச் செய்யப் பெற்றுள்ளன. எனவே நிகழும் குரோதி ஆண்டு ஆவணித் திங்கள் 23 ஆம் நாள் (08.09.2024) ஞாயிற்றுக்கிழமை வளர்பிறை பஞ்சமி திதியும் சுவாதி நட்சத்திரமும் சித்தயோகமும் கூடிய நன்னாளில் காலை 7.35 மணிக்கு மேல் 8.30 மணிக்குள் கன்னிகா லக்னத்தில் இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு மலையாண்டி சுவாமி, அருள்மிகு வடுவகிர்விழியாள் உடனாய வலம்புரிநாதர், அருள்மிகு ஸ்ரீதேவி, பூதேவி உடனாய வரதராஜப் பெருமாள், அருள்மிகு ஐயப்ப சுவாமி மற்றும் ஏனைய இறைவர்களுக்கும், **திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழாச்** செய்யத் திருவருள் துணைக் கொண்டு நிச்சயித்திருப்பதால், இறை உணர்வு மிக்க பெருமக்கள் அனைவரும் வந்திருந்து இப்பெருவிழாவினில் கலந்து கொண்டு திருவருட்பெருங்கருணைக்கு உரியவர்களாகி எல்லா நலங்களும் பெற்று வாழ வேண்டுகிறோம்.

இப்படிக்கு
**நகரத்தார்கள்**
வலையபட்டி - 622 411, புதுக்கோட்டை மாவட்டம்

குரோதி ஆண்டு ஆனித்திங்கள் 28 ஆம் நாள்
12.07.2024 வெள்ளிக்கிழமை

## நிகழ்ச்சி நிரல்

| தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|
| குரோதி ஆண்டு<br>ஆவணி மாதம் 20ம் தேதி | **05.09.2024**<br>**வியாழக்கிழமை** | காலை 9.30 மணி<br><br>மாலை 3.30 மணி<br><br>இரவு 7.00 மணி<br>இரவு 9.15 மணி | அனுக்ஞை, ஸ்ரீ விக்னேஸ்வர பூஜை, கணபதி ஹோமம், நவக்கிரஹ ஹோமம், லெட்சுமி பூஜை, பூர்ணாகுதி, தீபாராதனை<br>வாஸ்து சாந்தி, மிருத்சங்கிரஹணம், அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம்<br>கடஸ்தாபனம், முதல் கால யாக பூஜைகள் ஆரம்பம்<br>முதல்கால பூர்ணாகுதி, தீபாராதனை |
| குரோதி ஆண்டு<br>ஆவணி மாதம் 21ம் தேதி | **06.09.2024**<br>**வெள்ளிக்கிழமை** | காலை 8.30 மணி<br>பகல் 12.00 மணி<br>மாலை 6.00 மணி<br>இரவு 8.30 மணி | இரண்டாம் கால யாக பூஜைகள் ஆரம்பம்<br>இரண்டாம் கால பூர்ணாகுதி, தீபாராதனை<br>மூன்றாம் கால யாக பூஜைகள் ஆரம்பம்<br>மூன்றாம் கால பூர்ணாகுதி, தீபாராதனை |
| குரோதி ஆண்டு<br>ஆவணி மாதம் 22ம் தேதி | **07.09.2024**<br>**சனிக்கிழமை** | காலை 8.45 மணி<br>காலை 11.30 மணி<br>மாலை 5.30 மணி<br>இரவு 8.30 மணி | நான்காம் கால யாக பூஜைகள் ஆரம்பம்<br>நான்காம் கால பூர்ணாகுதி, தீபாராதனை<br>ஐந்தாம் கால யாக பூஜைகள் ஆரம்பம்<br>ஐந்தாம் கால பூர்ணாகுதி, தீபாராதனை |
| குரோதி ஆண்டு<br>ஆவணி மாதம் 23ம் தேதி | **08.09.2024**<br>**ஞாயிற்றுக்கிழமை** | காலை 4.30 மணி<br>காலை 6.30 மணி<br>காலை 7.00 மணி<br>காலை 7.35 மணிக்கு மேல் 8.30 மணிக்குள் | ஆறாம் கால யாக பூஜைகள் ஆரம்பம்<br>ஆறாம் கால பூர்ணாகுதி, தீபாராதனை<br>கடம் புறப்பாடு<br>**விமான மஹா கும்பாபிஷேகம்**<br>தொடர்ந்து மூலவர் கும்பாபிஷேகம் |

இரவு பஞ்சமூர்த்திகள் திருவீதி உலா

**யாகசாலை பூஜைக் காலங்களில் வேதபாராயணமும், திருமுறைப் பாராயணமும் நடைபெறும்**

சர்வசாதகம் : "விகாஸ்ரத்னா" டாக்டர். சிவஸ்ரீ. **K. பிச்சைக்குருக்கள்,** பிள்ளையார்பட்டி

வர்ணனை : வர்ணனைச் சக்கரவர்த்தி, தமிழ்க்கடல் டாக்டர். **தேவகோட்டை இராமநாதன்**

முனைவர். **அழகம்மை ஆறுமுகம்** மற்றும் **PR. சிந்து**

# வலையபட்டித் திருப்புகழ்

அரு.அ.அரு.ராம. அருணாச்சலம் செட்டியார்
காரைக்குடி (1910)

தான தன தத்த தன
தான தன தத்த தன
தான தன தத்த தன – தனதானா

மாமதியை ஒத்தமுக
மோடுகட லைக்கயலை
வாள்அயிலை ஒத்தஇரு – விழியோடே

மாரன்மகு டத்தினொடு
சூதுவரை செப்புஅதனை
வாதுபுரி வட்டமுலை – உறுமானார்

காமம்அதில் நித்தம் அலை
யாமல்உமை சத்திசிவ
காமிதரு புத்ர, அருள் – தருவாயே

காலமுகில் ஒத்த அரி
ஏனஉரு உற்றும்அடி
காணஅரிது உற்றசிவன் – அருள்பாலா

பாமயிலும் நற்கமல
மாமயிலும் முத்தமிழ்சொல்
பாவலர்கள் சித்தர்மறை – யவரோடே

பாரிதனை ஒத்தகொடை
யாளரொடும் அத்தன்இரு
பாதமல ரைத்தொழுகும்) – மவர்மேவா

மாமுகில்கள் உற்ற பொழில்
மேவிஅழ குற்று அமர்கள்
வாழ் வலய பட்டிவளர் – குமரேசா

மான்உதவு பொற் கொடியை
வானவரி பெற்ற வளை
வாமம் வலம் வைத்ததொரு – பெருமாளே ■

# பாற்கடலைக் கடைய அமுதம் வருமா?
## – பைத்தியக்காரத்தனம்

அப்படி கடைவதற்கு மேரு மலை மத்தாகப் பயன்பட்டதாம். வாசுகி பாம்பு கயிறாக பயன்பட்டதாம். யப்பா முடியலடா சாமி! இதைவிட ஒரு காமெடி என்னன்னா... அவ்ளோ பெரிய மலையை ஒரு ஆமை தான் முதுகுல தாங்கிக்கிச்சாம் கேட்டா அது விஷ்ணுவோட அவதாரமாம்.

அவ்ளோ பெரிய ஆமையை Discovery Channelல கூட காமிக்கலையே. தேவர்களும், அசுரர்களும் பாம்பின் தலையையும் வாலையும் பிடித்து இழுத்தார்களாம்.

அப்படி இழுக்கும் போது முதலில் ஆலகால விஷம் வந்ததாம்.

அத அப்படியே சிவன் அள்ளிக் குடிச்சாராம்.

சிவன் செத்துறக் கூடாதுன்னு அவரோட சம்சாரம் சக்தி தொண்டையிலேயே அந்த விஷத்த நிக்க வச்சிருச்சாம். விஷத்த குடிச்சா சாமி சாகுமா? இல்ல அப்படிச் செத்தா அது சாமியா? அப்புறம் அமுதம் வந்துச்சாம் அத குடிச்ச தேவர்கள் சாகவே இல்லையாம். இப்படி ஒரு Fantasy கதைய Hollywood படத்துல கூட சொன்னதில்ல.

இந்த கதையையெல்லாம் நம்பிக்கிட்டு இன்னமும் நீ சாமி கும்பிட்டுகிட்டு இருக்க.

இப்படி தன் இரவல் அறிவையெல்லாம் ஒன்று திரட்டி ரொம்ப பெரிய கஷ்டமான கேள்வியைக் கேட்டு விட்டதாகவும் என்னை மட்டம் தட்டி விட்டதாகவும் இறுமாந்திருந்தார் நண்பர் ஒருவர்.

நான் நிதானமாகச் சொன்னேன் இந்த கலாச்சாரத்தில் சொல்லப்படுகின்ற கதைகள் எல்லாம் உருவகங்கள். மிகப்பெரிய தத்துவங்களை எல்லாம் குழந்தைக்கு கூட புரியும் வண்ணம் புனையப்பட்ட உருவகக் கதைகள். இவற்றை அப்படியே எடுத்துக்கொண்டு வாதிடுவது அறிவுடைமை ஆகாது.

அதனால் Encoding செய்யப்பட்ட உருவகங்களை Decoding செய்தால் போதும். பொருள் அதுவாகவே விளங்கும்.

சரி, இப்போது இந்த பாற்கடல் கதையை Decode செய்கிறேன்.

1. பாற்கடல் – குண்டலினி சக்தி
2. மேரு மலை – முதுகுத்தண்டு

3. வாசுகி பாம்பு – மூச்சுக்காற்று (உஷ் ... உஷ் என்று சத்தம் வருதா?)
4. தேவர் – அசுரர் – இடகலை – பிங்கலை (நாடி)
5. ஆமை – ஐம்புலன்களையும் அடக்கி ஆளும் தன்மை
6. தொண்டைக்குழி – விசுக்தி
7. விஷ்ணு – வாழ்வு
8. ஆலகாலவிஷம் – கபம்
9. அமுதம் – நித்ய வாழ்வு (மரணமில்லாப் பெருவாழ்வு)
10. திருமகள் – செல்வம், நிறைவு
11. சந்திரன் – சித்தத் தெளிவு
12. காமதேனு, கற்பக விருட்சம் – நினைத்தது கைகூடும் ஆற்றல்
13. ஐராவதம் – தேக பலம்
14. தன்வந்திரி – ஆரோக்கியம்

அதாவது முதுகுத்தண்டின் இரு பக்கமும் செல்லும் இடகலை – பிங்கலை நாடி வழியே மூச்சுக்காற்று சதா ஓடிக்கொண்டிருக்கிறது. (இதைத்தான் சிவவாக்கியர் சங்கிரண்டையும் தவிர்ந்து தாரை ஊதச் சொன்னார்).

ஆமைபோல் ஐம்புலன்களையும் அடக்கி அதை ஆதாரமாகக் கொண்டு வாசியோகம் மூலம் இடகலை பிங்கலை வழியே மாற்றி மாற்றி மூச்சுக்காற்றை இழுக்கும்போது (நாடி சுத்தி நித்யப் பெருவாழ்விற்கான அமுதம் சுரக்கும். அதை உண்டவர்கள் தேவர்கள் போல மரணமில்லாப் பெருவாழ்வு அடைவர்.

மேலும் பாற்கடலைக் கடையும்போது லட்சுமி, தன்வந்திரி, சந்திரன், கற்பக விருட்சம், காமதேனு, ஐராவதம் போன்றவை வந்தன என்பது வாசியோகம் சித்தி பெற்ற ஒருவனுக்கு முறையே செல்வம் (நிறைவு), ஆரோக்கியம், சித்தத் தெளிவு, நினைத்தது கைகூடும் ஆற்றல், தேக பலம் கிடைக்கும் என்பதற்கான உருவகம்.

ஆனால் இந்தப் பயிற்சியின் போது அளவுக்கதிகமான கபமே முதலில் வெளிப்படும் ஆனால் பரம்பொருள் சிவனின் கருணை அந்த கபத்தை கலைத்து விடும் (சந்தேகம் இருப்பின் வாசியோகம் பயின்றவரிடம் கேட்டு தெளிவு பெறலாம்).

இப்படி விளக்கினேன். அவரும் பாவம் வேறொருவருக்கு பாடம் எடுக்க சென்றுவிட்டார்.

'விநாயகர் சக்தியின் அழுக்குருண்டையில் பிறந்தவராமே?' என்று.

அவர் கிடக்கட்டும். உங்களுக்காக (புரிந்து கொள்ள நினைப்போருக்கு) மேலும் சில உருவகங்களின் Decodings :

1. ஒரே இறைவன் (இஸ்லாம்) - அத்வைதம் (Oneness) சிவசக்தி - துவைதம் (Duality) பிதா, சுதன், பரிசுத்த ஆவி - வசிஷ்டாத்வைதம் (கிறிஸ்த்துவம்)
2. சும்மா இருந்தால் சிவம் (Static), ஓயாமல் அசைந்தால் சக்தி (Dynamic), சக்தி இல்லையேல் சிவம் இல்லை – உருவகம்
3. திரிசூலம் – இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தியின் உருவகம்
4. கணபதியை (பூமியை), சக்தி (Dynamic Force) அழுக்கை (Dust of Universe) உருட்டிப் படைத்தாள் – இது பூமி தோன்றலின் உருவகம்.
5. தில்லை நடராசர் நடனம் - Cosmic dance-ன் உருவகம் (அறிவியல் ஏற்றுக்கொண்டது).
6. சிவன் (யோக சக்தி) + திருமால் (போக சக்தி) இவற்றின் கலவையான சக்தியே ஐயப்பன் – உருவகம்.
7. முப்பரிமாணம் மட்டுமே உணரக்கூடிய மனித மூளைக்கு நாலாவது பரிமாணமான காலத்தை உணர்த்த மகா காலன், அதன் எதிர்பரிமாணம் மகா காளி – உருவகம்.
8. பிறப்பை அருளும் தாயின் உருவத்தை மரணத்தை அருளக்கூடிய கோர உருவமாக காளியாகப் படைத்தது, ஜனனமும் மரணமும் இறைவனுக்கு ஒன்றே என உணர்த்தும் உருவகம்.
9. வாயு மைந்தன் அனுமன் (குரங்கு போன்ற நிலையில்லாத மனம்), யோகம் பயின்றால் கடவுளாகும் தகுதி உண்டு என்ற தத்துவம் – மனதின் உருவகம்.
10. கருடாழ்வார் – மூச்சின் உருவகம்
11. சூரியனின் ஏழு குதிரைகள் – நிறப்பிரிகை VIBGYOR உருவகம்.
12. தசாவதாரம் – பரிணாம வளர்ச்சியின் உருவகம்
13. ஆணும் பெண்ணும் சமம் என உணர்த்தும் அர்த்தநாரீஸ்வரர் உருவகம்.

இப்படி சொல்லிக்கொண்டே போகலாம்.

எல்லாம் உணர்ந்தோர் ஏதும் உணராதோர்க்கு, தாம் உணர்ந்ததை உணர்த்த, ஏதும் உணராதோர் உணர்ந்த தன்மையின் அடிப்படையில் தாம் உணர்ந்ததை (தத்துவத்தை) உருவகமாக்கி உணர்த்தினர்.

நீங்களாவது உணர்ந்து கொண்டீரா?

உணர்ந்து கொண்டோர் பகிர்ந்து கொள்க. ■

# படைப்பு

அசந்தா ஆடி
மறந்தா மாசி
தப்புனா தை
இந்த மூணு மாசத்து
செவ்வாக்கெழமதேன்
ஔவையாத்தாள நெனச்சுக்கிட்டு
செவ்வாப்புள்ளயாரு
விரதம் புடிப்போம்
பள்ளிக்கூடம் போனாலும்
பரபரப்புதேன்
இந்நேரம் தெவ்வான அயித்த வந்திருப்பாகளா
நாச்சம்ம ஆச்சி
வந்திருப்பாகளான்னு
ஏறு பொழுதுல
நெல்லெடுத்து
எறங்கு பொழுதுல
நெல்லுக்குத்தி
ஒருச்சாமம் போக
மறுச்சாமம் கன்னிப்பொண்டுக கூட
களைக்கட்டும்
ஆம்புள்ளேகளுக்கு அனுமதி கெடையாது
மாச்சலுச்சு வீடுகட்டி
மாவெல கும்பம் வச்சு

தீவாரன காட்டி

ஆரம்பிச்சா விடிய விடிய கொலக்கட்ட

செய்ய விடிஞ்சே போகும் பூச முடிய

பெரியாச்சியக யாரும்

வல்லையினா

ஏழு அண்ணம்மாரு ஒரு தங்கச்சி ன்னு கதைய

ஆரம்பிச்சு நறுவிசா சொல்லிப்புடுவேன்

சுத்தியுள்ளவங்களெல்லாம்

கொட்டவேண்டியது பூசை நியதி

கதை மாந்தரையெல்லாம்

மாவில் வடிக்க

சிக்குனு சிரிப்பாரு

நாஞ்செஞ்ச உப்பில்லா மாப்பிள்ளையாரு

கலச மால நழுவி விழ

யாருக்கோ மாலப்பொருத்தம் கூடிருச்சுன்னு

சாடையா கேலி பேச

ஒவ்வொரு கண்ணியா

பிருச்சுவிட்ட பெரும

அரும கொலையாத புள்ளயாரத்தான் சேரும்

உப்பில்லாக்கொலக்கட்டைய சப்புக்கொட்டும்

மனசு மட்டும்

சாம்ப பூத்து கெடக்கு

# வேள்வணிகர் திருப்பணியும் அறப்பணியின் கொடையும்

**கரு. ராமநாதன்**

ஏறத்தாழ 160 ஆண்டுகள் முன்பே நகரத்தார்கள் குடியேறிய 78 ஊர்களில் 43 ஊர்களில் நகரத்தார்கள் பொதுவில் நகரசிவாலயம் நிர்மாணித்தனர் மற்றும் 10 ஊர்களில் தனிப்பட்ட நகரத்தார் குடும்பங்கள் மற்றும் பங்காளிகள் இணைந்து 11 சிவாலயத்தை நிர்மாணித்தனர். 3 ஊர்களில் நகரத்தார் பொதுவிலும் 15 ஊர்களில் தனிப்பட்ட நகரத்தார் குடும்பங்கள் மற்றும் பங்காளிகள் இணைந்து மொத்தம் 20 பெருமாள் கோவில்கள் நிர்மாணித்தனர். 5 ஊர்களில் நகரத்தார்கள் 5 அம்மன் ஆலயங்களை நிர்மாணித்தனர் மற்றும் 20 ஊர்களில் நகரத்தார்கள் பொதுவில் 20 முருகன் கோவில்களை நிர்மாணித்தார். அதோடு பெரும்பான்மையான நகரத்தார் ஊர்களில் தனிப்பட்ட நகரத்தார் குடும்பங்கள் மற்றும் பங்காளிகள் இணைந்தும் பொதுவில் பல விநாயகர் கோவில்கள் நிர்மாணித்தனர். அதோடு தாங்கள் வசிக்கும் ஊர்களில் பசுமடம், நந்தவனம், ஊரணிகள், கோவில் வாகனங்கள், வெள்ளி பூசைப் பொருட்கள், ஆபரணங்கள், அந்தணர்கள் வசிக்க அக்கிரகாரங்கள் என்று பலவற்றை தங்கள் ஊர்களில் அன்றைய மதிப்புப்படி ரூ. 40,000,000/- (ரூபாய் நான்கு கோடி) செலவில் நிர்வகித்தனர். அதோடு இவை தவிர செட்டிநாட்டு ஊர்கள் சுற்றி உள்ள ஊர்களில் நகரத்தார்கள் 35ற்கு மேற்பட்ட கோவில்கள் மற்றும் சுற்றியுள்ள ஊர்களில் ரூ. 65,00,000/- (ரூபாய் அறுபத்தி ஐந்து லட்சம்) செலவில் ஊரணிகள் நிர்மாணித்தும் புனரமைத்துமுள்ளனர் மற்றும் சோழநாட்டில் 78 திருத்தலங்களும் பாண்டியநாட்டில் 20 திருத்தலங்களும் கொங்குநாட்டில் 9 திருத்தலங்களும் நடுநாட்டிலும், தொண்டை நாட்டிலும் 11 திருத்தலங்களும் புனரமைத்து பூசைகள் தடைபடாமல் நிர்வகித்தனர். மொத்தம் 129 கோவில்கள் தமிழகத்தில் மட்டும் புனரமைப்பு செய்து சிறப்பாக குடமுழுக்கு செய்து நிர்வாகம் செய்து பாதுகாத்தனர்.

இதற்காக நகரத்தார்கள் செலவு செய்த மொத்த தொகை 1958ஆம் ஆண்டு வரை கணக்கிடப்பட்டுள்ளது. மொத்தம் ரூ.10,64,40,700/- (ரூபாய் பத்துகோடியே அறுபத்தி நான்கு லட்சத்தி நாற்பதாயிரத்தி எழுநூறு) செலவு செய்துள்ளனர் என்பதை வயிநாகரம் அ. ராமநாதன் செட்டியார் தனது நூலில் ஆவணப்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இதில் நகரத்தார்கள் தங்கள் வசதிக்காக திருத்தலங்கள் அருகில் தங்களுக்கு என்று நிர்மாணித்த நகரவிடுதிகளும் அங்கு அதில் உள்ள கோவில் வீடுகளும் ஆலயத்திருப்பணிக் கணக்கில் வராது இவற்றை இதனோடு சேர்த்து மதிப்பிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இது போன்ற செய்திகளை நாம் நம் இளம் தலைமுறைகளிடம் எடுத்து கூறவேண்டும் அப்போது அவர்களும் நம் முன்னோர் பயணித்த பாதையில் பயணமாக உதவியாக இருக்கும். இந்த பதிவு நகரத்தார்கள் பெருமை பேசக் கூறவில்லை. நம் முன்னோர்கள் செய்த அறப்பணியை நாமும் நம் வாழ்வில் செய்யவேண்டும். அவர்கள் செய்த அளவில் இல்லாவிட்டாலும் நம்மால் இயன்ற அளவு திருப்பணிகள் செய்யவேண்டும் இவற்றை நம் இளம் தலைமுறைகள் தெரிந்து அறத்தின் வழியில் நடக்கவேண்டும் என்பதே. ■

## நால்வர் பிரதிஷ்டையும் வருடாந்திர குருபூஜையும்



எல்லாம் வல்ல கருணைக் கடவுளான மலையாண்டி சுவாமியின் திருவருளால் நம் கோவிலுக்கு 15 வருடங்களுக்கு முன் சமய குரவர்கள் நால்வரின் ஐம்பொன் திருமேனி உபயமாக கொடுக்க திருவருள் கூடி வந்தது. அதன்படி நால்வர் பெருமக்களின் திருமேனிகளை முருகன் திருவருளால் சுவாமி மலையில் செவ்வனே செய்து முடித்தோம். எங்கள் இல்லம் கொண்டு வந்து ஜலவாசம் தானிய வாசம் செய்து திருமேனிகளைப் பிரவேசம் செய்வித்து நம் கோவிலுக்கு நகரத்தார் பெருமக்கள் மற்றும் ஊரார் முன்னிலையில் சமர்ப்பித்தோம்.

அது முதற்கொண்டு ஒவ்வொரு வருடமும் சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி மாதங்களில் நால்வரின் பூஜையை செவ்வனே செய்து வருகிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

நகரத்தார் சிவாச்சாரியார் துணைகொண்டு மேலும் அதை தொடரவேண்டுகிறோம். நம் ஊர் நம் இனமக்கள் மென்மேலும் மேன்மையடைய நால்வரின் திருவடிகளைச் சரணடைவோம். ■



அரு. முத்துராமன் செட்டியார்
கிளப் வீடு, 2ம் நம்பர் ரோடு,
வலையபட்டி



# உயிர் காக்கும் பனை மரம்

**மின்னல் ஏன் எப்போதும் பனை மரம் மீதே விழுகிறது தெரியுமா? அதுக்கு ஒரு சிறப்பான காரணம் இருக்காம்...!**

நாம் சிறுவயது முதலே பனை மரங்களில் இடி விழுவதைப் பார்த்திருப்போம். பனை மரங்கள் மின்னல் தாக்குதல்களைத் தணிக்கும் தனித்துவமான திறனைக் கொண்டுள்ளன. இது விஞ்ஞானிகளைப் பல நூற்றாண்டுகளாகச் சிந்திக்கத் தூண்டும் செயலாகும். இந்த இயற்கை பாதுகாப்பு பொறிமுறையானது வெப்பமண்டல மற்றும் மிதவெப்ப மண்டல பகுதிகள் போன்ற அடிக்கடி இடியுடன் கூடிய மழை பெய்யும் பகுதிகளில் பாதுகாப்பு அரணாக உள்ளது.

மின்னல் தாக்குதல்களைத் தணிப்பதில் பனை மரங்கள் திறம்படச் செயல்பட முதன்மையான காரணங்களில் ஒன்று அவற்றின் அதிக ஈரப்பதம் ஆகும். பனை மரங்களின் தண்டுகளில் நீர் மற்றும் சாறு நிரம்பியுள்ளது. இது மின்னல் தாக்கத்திலிருந்து மின்சாரத்தை உறிஞ்சி வெளியேற்றும். இந்த அதிக ஈரப்பதம் இயற்கையான கடத்தியாக செயல்படுகிறது. இதனால் மின்னல் மரத்தின் வழியாகவும், தரையிலும் குறிப்பிடத்தக்க சேதத்தை ஏற்படுத்தாது.

பனை மரங்களின் மற்றொரு சுவாரஸ்யமான அம்சம் அவற்றின் உயரம். பனை மரங்கள் பெரும்பாலும் சுற்றியுள்ள தாவரங்களை விட உயரமானவை. இதனால் அவை மின்னலால் தாக்கப்படுவதற்கான வாய்ப்புகள் அதிகம். இது ஒரு பாதகமாகத் தோன்றினாலும், இது உண்மையில் அருகிலுள்ள மற்ற தாவரங்கள் மற்றும் கட்டமைப்புகளைப் பாதுகாக்க உதவுகிறது.

மின்னல் தாக்குதல்களை ஈர்ப்பதன் மூலம், பனை மரங்கள் இயற்கை மின்னல் கம்பிகளாகச் செயல்படுகின்றன. மேலும் பாதிக்கப்படக்கூடிய இலக்குகளிலிருந்து மின்சார ஆற்றலைத் திசை திருப்புகின்றன. மற்ற மின்னல் பாதுகாப்பு கிடைக்காத கிராமப்புறங்களில் இந்த பாதுகாப்புப் பங்கு மிகவும் முக்கியமானது.

மின்னல் தாக்குதல்களைத் தணிப்பதில் பனை மரங்களின் செயல்திறன் பல்வேறு அரசாங்கங்கள் மற்றும் அமைப்புகளால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. உதாரணமாக, ஒடிசா அரசாங்கம் மின்னலுக்கு எதிரான இயற்கை பாதுகாப்பாக பனை மரங்களை நடுவதற்கு குறிப்பிடத்தக்க நிதியை ஒதுக்கியுள்ளது. இந்த முன் முயற்சியானது காலநிலை மாற்றம் மற்றும் அதிகரித்து வரும் வெப்பநிலை காரணமாக அதிகரித்து வரும் மின்னல் தொடர்பான இறப்புகளின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கான ஒரு பரந்த திட்டத்தின் ஒரு பகுதியாகும். மாநிலத்தின் புவியியல் இருப்பிடம் மற்றும் தட்பவெப்ப நிலை ஆகியவை குறிப்பாக மின்னல் தாக்கங்களுக்கு ஆளாகின்றன. கடந்த 11 ஆண்டுகளில் 3,790 இறப்புகள் பதிவாகியுள்ளன.

இந்த இறப்புக்களைத் தவிர்க்க 1.9 மில்லியன் பனை மரங்களை நடுவதற்கான திட்டம் வகுத்துள்ளது.

பனை மரங்களின் மின்னல் தாக்குதல்களைத் தாங்கும் திறன், அவற்றின் செயல்திறனுக்கு பங்களிக்கும் மற்றொரு காரணியாகும். பெரும்பாலான பனை மரங்கள் மின்னல் தாக்கத்தைக் கடுமையான சேதம் இல்லாமல் தாங்கும். அவற்றின் அடர்த்தியான பட்டை மற்றும் கடினமான இலைகள் தாக்குதலின் வெப்பம் மற்றும் சக்தியிலிருந்து அவற்றைப் பாதுகாக்க உதவுகின்றன, அவை தொடர்ந்து வளரவும் பாதுகாப்பை வழங்கவும் அனுமதிக்கிறது. இந்த காரணி பாதிக்கப்படக்கூடிய பகுதிகளில் மின்னல் தாக்குதலைத் தணிக்க பனை மரங்களை ஒரு நிலையான மற்றும் நீண்ட கால தீர்வாக மாற்றுகிறது.

மின்னல் தாக்குதல்களைத் தணிப்பதில் பனை மரங்களின் பங்கு, சுற்றுச்சூழல் சவால்களுக்கு இயற்கை எவ்வாறு தீர்வுகளை வழங்குகிறது என்பதற்கு ஒரு சுவாரஸ்யமான உதாரணம். இந்த இயற்கையான பாதுகாப்புகளைப் புரிந்துகொள்வதன் மூலம், மின்னலின் ஆபத்துக்களில் இருந்து மனித உயிர்களையும் உடைமைகளையும் பாதுகாப்பதற்கான உத்திகளை நாம் உருவாக்கலாம்.

**பூத்துக் குலுங்கும் பனைமரம்... பொன்னமராவதியில் அதிசயம்!**

**“பனையில் பல இனம் இருந்தாலும், இந்த தாளிபனைதான் பூக்கும் இனம். தாளிப்பனையை கூந்தல்பனை, விசிறிப்பனை, தேர்ப்பனைன்னு ஒவ்வொரு இடங்கள்லயும் ஒவ்வொரு பெயர்கள்ல சொல்வாங்க... ”**

**புதுக்கோட்டை மாவட்டம், பொன்னமராவதி அருகே வலையப்பட்டியில் உள்ள மலையாண்டி சுவாமி கோயிலின் மலைக்கு மேற்கில் நூற்றாண்டுகள் பழைமையான பனைமரம் ஒன்று பூத்துக்குலுங்கியது.** (இப்போது அந்த மரம் பட்டுப்போய் அடியோடு வீழ்ந்துவிட்டது.) அதன் அருகில் நெருங்கும்போதே, அதிலிருந்து வரும் ஒருவித நறுமணம் நம்மை பரவசமடையச் செய்கிறது. பனைமரம் பூக்குமா? என்ற கேள்வி பலருக்கும் இருக்கக்கூடும். ஆனால், சுமார் 80லிருந்து 100 ஆண்டுகள் பழைமையான தாளிப்பனை மரங்கள் பூக்கும் என்கின்றனர். இந்த வகை பனை மரங்கள் குறைவான அளவில் இருக்கும், மேலும் குறைந்துகொண்டே போவதுதான் வேதனை என்கின்றனர் பனை ஆர்வலர்கள். வலையப்பட்டியைச் சேர்ந்த சிதம்பரம் என்பவரிடம் இதுபற்றிப் பேசினோம். அவர் கூறுகையில்,

“பனையில் பல இனம் இருந்தாலும், இந்தத் தாளிப்பனைதான் பூக்கும் இனம். தாளிப்பனையை, கூந்தல்பனை, விசிறிப்பனை, தேர்ப்பனைன்னு ஒவ்வொர் இடத்திலேயும் ஒவ்வொரு பெயர்கள்ல சொல்வாங்க. எங்க ஊர்ல பெரும்பாலும், கூந்தல்பனைன்னுதான் சொல்வாங்க. எங்க முன்னோர்கள் காலத்துல பெரும்பாலும், கோயில், குளம் இப்படி ஆன்மீகம் சார்ந்த இடங்கள்ல தாளிப்பனைகளை அதிக அளவில் நட்டு வச்சிருக்காங்க. அப்படி தான் மலையாண்டி கோயில்லயும் இந்தப் பனைமரத்தை வச்சிருக்காங்க. எனக்கு 60 வயசாகுது. எனக்கு விவரம் தெரிஞ்சே பெரிய மரமா தான் இருந்துச்சு. எப்படியும் இந்த மரம் 100 வருஷத்துக்கும் மேல தான் இருக்கும். இந்த மரத்தை தான் அந்தக் காலத்துல ஓலைச்சுவடிகள் எழுத பயன்படுத்தியிருக்காங்க. பனை மரம் பூக்கும்னுதான் நாங்களும் கேள்விப் பட்டிருக்கோம். இப்பதான் நேர்ல பார்க்கிறோம். எங்க பகுதியில பனைமரம் பூக்கிறதை இப்பதான் பார்க்கிறோம். 3 மாசத்துக்கு முன்னால, மரத்தோட தலைப்பகுதி கிளைகள் காய்ந்து பட்டுப்போனமாதிரிதான் இருந்துச்சு.

அதற்கப்புறம்தான் எங்களுக்கு ஆச்சர்யமே காத்திருந்துச்சு. அந்த மரத்துல இருந்து கிளைகள் பரவி அதுல லட்சக்கணக்கான பூக்கள் பூத்து உதிர்ந்துகொண்டே இருக்குது. இன்னும் சில மாதங்கள் பூக்களிலிருந்து காய்கள் பிடித்து, காய்கள் வெடித்து சிதறி அந்த மரம் பயனற்று போய்டும்னு சொல்றாங்க.

சுமார் 2 கி.மீ தூரத்துக்கு வெடித்து சிதறும் காய்களிலிருந்து தாளிப்பனைகள் மீண்டும் முளைக்கும்னு சொல்றாங்க. அது எந்தளவுக்கு உண்மைன்னு தெரியலை. பொறுத்து இருந்துதான். பார்க்கணும். ஆனா, அது ஒரு பக்கம் இருந்தாலும், இந்தத் தாளிப்பனைமரங்கள் இன்னைக்கு குறைவான அளவில்தான் இருக்குது. இளைஞர்கள் தாளிப்பனைகளோட விதைகளை தேடிப்பிடிச்சு பொது இடங்கள்ல அதிக அளவில் நடவு செய்யஆர்வம் காட்டணும்” என்றார்.

# எழுந்து வர வேண்டுமய்யா



வலம்புரி **சொ. இராமநாதன்** எம்.ஏ.,

கிழக்கு நோக்கி வீற்றிருக்கும்
மலையாண்டி – எங்க
கிழவங் கெல்லாம் கல் சுமந்தார்
உனை வேண்டி! – மாம்
பழத்துக்காக தம்பிதனை மயில்மீ தேறி
பவனிவரச் செய்தநீயும் அமைதியாக
வழக்கமான தந்தைதாயைச் சுற்றி வந்து
வாங்கிக் கொண்டாய் – பழத்தை நீயும்
சரியாய்ச் செய்தாய்!

மாம்பழத்தைப் பெற்றது போல்
எங்கள் ஊரில்
மலையைத் தன் இருப்பிட மாய்ப்
பிடித்துக் கொண்டாய்!
மலையாண்டி கோவி லெனும்
பேரும் பெற்றாய் – (மலைமீதேறி)
தினம் உன்னை நாடி வரும்
பக்தர்க் கெல்லாம்
தெவிட்டாத தேனமுதாம்
அருளைத் தந்தாய்!

எண்ணெய்க் காப்பு சாத்தி உனை
அபிஷேகித்து
பால் தயிர் பழங்களோடு இளநீ ராலும்
பக்குவமாய் அபிஷேகம்
செய்தே வைத்தார்!

சந்தனமும் பன்னீரும் எந்த நாளும்
உந்தன்
சந்நிதியில் மணம் பரப்ப
வீற்றி ருந்தாய்!

வெள்ளெருக்கு மாலையுடன்
அருகம் புல்லும்
விரும்பி நீ அணி கின்ற
அணி கலன்கள்!
பட்டுப் பீதாம்பரம் கட்டி நீ என்றென்றும்
பகட்டாக வாழ்ந்த தில்லை – உனக்கே உள்ள
பிள்ளையார் துண்டென்று கடையில் கேட்டாலே
பிரியமுடன் தருவார்கள்! விலையொன்றும் அதிகமில்லை!

அவல்பொரி கடலையும்
அவித்து வைத்த மோதகமும்
நவல் பழமும் விளாம் பழமும்
நாங்கள் தரும் படைப்பாகும்!
படைப்புகளை ஏற்றுப்
பக்குவமாய்ச் சாப்பிடும் உன்
நடப்புகளைக் கண்டு
நாங்கள் அதிசயித்தோம்! – இப்படிக்

காட்சிக்கு எளியனாய்
கடுஞ்சொல்லன் அல்லனாய்க்
காட்சி தரும் மலையாண்டிக்கு – நாங்கள்
காணிக்கையாக வெள்ளியால் தங்கத்தால்
கவின் பொருளாம் அங்கி சாத்தி
கண்குளிரக் கண்டு மனங் குளிர
வேண்டி நின்றோம் – கருணை காட்டு!
மண் குளிர வேண்டும் – மக்களிடம்
மன மாற்றம் தான் வேண்டும்! இவையெல்லாம்
உன்னாலே ஆகுமய்யா! உலகம் உய்யுமய்யா!
எந்நாளும் எமைக்காக்க எழுந்துவர வேண்டுமய்யா!

# முத்தான பத்து ...

வலம்புரி **சொ. இராமநாதன்** எம்.ஏ.,

**முகப்பு**

மண்ணில் விளையாடும்
மழலைப் பூக்கள் முதல்
விண்ணிற்கு விடைகேட்டு
விழி வழியே வாழ்வோர்க்கும்
மலையாண்டி அருள்வாக்கு
மனமாற்றம் தரும் வாக்கு
ஏற்றால் வாழ்வு எளிதாகும்!

1. குலம் தெரியாமல் போனாலும்
குலதெய்வம் தெரியாமல் போகக்கூடாது
குலதெய்வ வழிபாடு
கோடி தெய்வ வழிபாடு!

2. வெறுங்கை என்பது மூடத்தனம் – நம்
விரல்கள் பத்தும் மூலதனம்

3. நல்லன ஏற்றலும்
தீயன தவிர்த்தலும்
வரம் வாங்கி வந்தால் மட்டுமே
கிடைக்கக் கூடியவை

4. போராடிக் கொண்டே வாழாதீர்கள்
வாழ்க்கை அர்த்தமற்ற தாகிவிடும்
வாழ்ந்து கொண்டே போராடுங்கள்!
வாழ்க்கை வசந்த மாகிவிடும்!

5. அன்பை எப்போதும்
அளந்து பார்க்காதீர்கள்!
உணர்ந்து பாருங்கள்!

6. குத்தும் ஊசி யிடமெல்லாம்
வாதாடிக் கொண்டிருந்தால்
ஆடை தன் அழகை இழந்து விடும்!
நம்முடைய வாழ்க்கையும் அப்படியே!

7. பலம் கொண்ட உடலைவிட
தன்னம்பிக்கை கொண்ட
மனமே சிறந்தது!

8. வழி தவறிய
பறவைகள் தான்
புதிய காடுகளைக் கண்டறிகின்றன!
புதுமை படைத்துப்
புத்துலகம் காண்போம்!

9. சக்கரம் ஒருமுறை
சுற்றியதற்கே
களிமண் பானையாகிறது!
இந்த பூமி எத்தனை முறை சுற்றியும்
மனிதன் இன்றும் மாறவில்லையே!
நாம் பானையாக மாறுவது எப்போது!

10. வாய் உண்மை பேசினால்
"வாய்மை"
உள்ளம் உண்மை பேசினால்
"உண்மை"
உடல்மொழி உண்மை பேசினால்
"மெய்ம்மை"
இந்த மூன்றுமாக மனிதன் வாழ்ந்தால்
"செம்மை"

# திருவாசகத்தில்
## மகளிர் விளையாட்டுகள்



முனைவர் **பெரி. அழகம்மை**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி.

பாண்டிய நாட்டில் திருவாதவூரில் பிறந்தவர் மாணிக்கவாசகர். சைவ சமயக் குரவர் நால்வரில் ஒருவராகப் போற்றப்படுகிறவர். அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சராகப் பணியாற்றியவர். மாணிக்கவாசகர் பாடிய திருவாசகமும், திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையாகப் போற்றப்பெறுகின்றன. திருவாசகம் ஐம்பத்தொரு திருப்பதிகங்களையும், அறநூற்று ஐம்பத்தி எட்டுப் பாடல்களையும் கொண்ட நூலாகும். இவருடைய பாட்டை இறைவனே சுவடிகளில் எழுதிக் கையொப்பமிட்டார் என்பது சிறப்பு.

திருவாசகத்தின் பெருமைகளைச் சிவப்பிரகாசர், வள்ளலார் முதலிய சான்றோர்கள் சிறப்பாக பாடியுள்ளனர். ஆங்கிலத்தில் ஜி.யு.போப் திருவாசகத்தை மொழிபெயர்த்துள்ளார். “திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்” என்கிற வாக்கு மாணிக்கவாசகருடைய நூலின் சிறப்பு. அத்தகைய திருவாசகத்தில் இறைவனைப் பாடுகின்ற போதிலும் மகளிர்தம் விளையாட்டுகளில் சிலவற்றை மையமாகக் கொண்டு சில பதிகங்கள் இயற்றியுள்ளார். அவற்றின் சிறப்பியல்புகளை விதந்தோதுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### திருவெம்பாவை

இது திருவாசகத்தில் ஏழாம் பதிகம். இதில் இருபது பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இளம்பெண்கள் அதிகாலையில் மார்கழி நீராடுவதற்காக நீர்நிலைகளுக்குப் போகும்போது ஒருவரையொருவர் துயிலெழுப்பும் வகையில் பாடப்பெற்றது திருவெம்பாவையாகும். இருபது பாடல்களிலும் எம்பாவாய் என்ற தொடர் வருகிறது.

**ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெரும்**
**சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்**
**மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?** (திரு.ப.7.1:1-3)

என்று ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெரும் சோதியன் திருவண்ணாமலையில் எழுந்தருளி இருக்கின்றார். அவரை நாங்கள்

எல்லோரும் பாடுவதைக் கேட்டும் நீ தூங்குகிறாயோ? உன் காதுகள் செவிடோ என்று ஒருத்தி எழுப்புகின்றாள். அதற்குத் துயிலிலிருந்து எழுந்தவள்,

பாசம் பரஞ்சோதிக்கு என்பாய் இராப்பகல்நாம்
பேசும்போது எப்போது இப்போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர் (திரு.ப.7.2:1-3)

என்று அன்பு உயர்வான ஒளிவடிவினனான இறைவனுக்கு உரியது என்கிறாள். இவ்வாறு பெண்கள் ஒருவரையொருவர் எழுப்பிக்கொண்டு இறைவனிடம் சரணாகதியடைந்து தாங்கள் விரும்பும் பொருளை வேண்டுகின்றனர்.

### திருவம்மானை

இது திருவாசகத்தில் எட்டாம் பதிகம் ஆகும். இதில் இருபது பாடல்கள் உள்ளன. மகளிர் ஆடிடும் விளையாட்டுகளில் ஒன்று அம்மானை. மரத்தால் சிறுபந்துபோல் உருண்டாய் உள்ள மூன்றோ, ஆறோ கொண்டு இருகைகளிலும் அப்பந்துகளைக் கீழே விழாமல் ஒவ்வொன்றாய்த் தட்டி மேல் எழுப்புவர். இலக்கிய அம்மானையில் மூவர் அமர்ந்திருக்க இறையையோ, அரசனையோ, தான் மதிக்கும் தலைவனையோ பாடுவர். அவருள் ஒருத்தி பாட்டுடைத் தலைவனின் புகழ்ச் செயலைக் குறித்து வினாவிட, இரண்டாமவள் அவ்வினாவிற்கு விடைகூறவும், மூன்றாமவள் அப்புகழ்ச் செயலை மீண்டும் கூறிப் பாராட்டும் நிலையில் அம்மூவரும் ஒருங்கே கூடிப் பாடி மகிழ்தலே அம்மானையாகும். ஒவ்வொரு பாடலின் இறுதியில் 'அம்மானாய்' என விளியேற்கும்.

தன்னைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் கொண்டு 'நாயக நாயகி' பாவனையில் தோழிகளுடன் சேர்ந்து அம்மானையில் இறைவனின் புகழைப் பாடியுள்ளார் மாணிக்கவாசகர்.

கேட்டாயோ தோழி கிறி செய்த ஆறுஒருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டாதன எல்லாம் காட்டிச் சிவம்காட்டித்
தாள்தாமரை காட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடு எய்த
ஆள்தான் கொண்டு ஆண்டவா பாடுதும்காண் அம்மானாய் (திரு.ப.8.6:1-6)

என்று தோழியைப் பார்த்து தோழியே சித்திரம் தீட்டிய எழில் கொண்ட திருப்பெருந்துறையில் உள்ள சிவன் செய்த மாயவித்தையைக் கேள், சொல்கிறேன் என்று இறைவனின் அருட்செயல்களைத் தன்னை ஒரு பெண்ணாகப் பாவித்து பாடல்வழி விளக்கியுள்ளார் மாணிக்கவாசகர்.

## திருப்பொற்சுண்ணம்

இது திருவாசகத்தில் ஒன்பதாம் பதிகமாகும். இதில் இருபது பாடல்கள் உள்ளன. பல்வகை மணப்பொருள்களை உரலில் இட்டு இடிக்கப்படுவது பொற்சுண்ணம். இப்பாடல் தலைவி தன் தலைவன் வரவை நினைத்து மற்ற பெண்களுடன் நறுமணத் திரவியங்களை உரலிலிட்டு இடிக்கும்போது பாடுவதாக அமையும்.

பொற்சுண்ணம் இடித்தல் சங்க காலம் முதல் காணப்படுகிறது. நாட்டுப்புறத்தில் சுண்ணம் இடித்தல் பிள்ளைப்பாட்டு, உரல்பாட்டு, உலக்கைப்பாட்டு, அவலிடி போன்ற பெயர்களால் வழங்கப்பெற்றுள்ளது. இப்பாடல் வகையினைப் பின்பற்றி மாணிக்கவாசகர் சிவபெருமானாகிய தன் தலைவனுக்கு,

**பூவியல் வார்சடை எம்பிராற்குப்**
**பொற்றிருச் சுண்ணம் இடிக்க வேண்டும்**
**மாவின் வடுவகிர் அன்ன கண்ணீர்**
**வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்** (திரு.ப.9.2:1-4)

என்று சுண்ணம் இடிக்க வேண்டுமெனப் பாடுகிறார்.

## திருக்கோத்தும்பி

இது திருவாசகத்தில் பத்தாம் பதிகம். இதில் இருபது பாடல்கள் உள்ளன. தலைமையுடைய வண்டினைக் கோத்தும்பி என்பர். நல்ல மணங்கொண்டு விளங்கும் மலர்களில் உள்ள தேனினை தலைமை வாய்ந்த அரச வண்டு தேன் அதிகமுள்ள மலர்களையே சுற்றித் திரிந்து தேனினைப் பருகும். இதுபோல் விளையாடும் இளமகளிர் மகிழ்ச்சியாக ஒருவருக்கொருவர் கைகளைக் கோர்த்துக் கொண்டு சுற்றி விளையாடும் விளையாட்டினைத் 'தும்பி பறத்தல்' என்று அழைப்பர்.

இவ்விளையாட்டில் ஈடுபடும் மகளிர் கோத்தும்பியை அழைத்து இறைவனின் திருவடிக் கழல்களைச் சேர்ந்து அவனின் புகழ்பாடி வருமாறு வேண்டுவர்.

**வண்ணப்பணித்து என்னை வாவென்ற வான்கருணைச்**
**சுண்ணப் பொன்நீற்றற்கே சென்று ஊதாய் கோத்தும்பீ** (திரு.ப.10.4:3-4)

என்று கோத்தும்பியை இறைவன் புகழ்பாடி வருமாறு கூறுகின்றார் மாணிக்கவாசகர்.

### திருத்தெள்ளேணம்

இது திருவாசகத்தில் பதினொன்றாம் பதிகம் ஆகும். இதில் இருபது பாடல்கள் உள்ளன. தெள்ளேணம் என்பது மகளிர் விளையாடும் விளையாட்டுகளில் ஒன்று. பெண்கள் தங்களது கைகளைக் கொட்டி ஆடும் ஒருவித விளையாட்டு தெள்ளேணம் ஆகும். மகளிர் விளையாடும்போது தெள்ளேணம் கொட்டாமோ என்று விண்ணப்பிப்பது போல மாணிக்கவாசகர் அமைத்துள்ளார்.

ஒருநாமம் ஓர் உருவம் ஒன்றுமிலாற்கு ஆயிரம்
திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ (திரு.ப.11.1:3-4)

என்று சிவனின் புகழைப்பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்று சொல்லி தலைவி தோழிகளை அழைப்பதாகப் பாடியுள்ளார். மேலும் பிறவி வேரறுத்தவனும், திருமாலும், பிரமனும் காண முடியாதவனும், மாயையை அழிப்பவனும், மானுட வடிவெடுத்து மண்ணுலகுக்கு வந்தவனும், ஆடும் பாம்பைக் கச்சையாகக் கட்டியவனும், உலகத் துன்பங்களின்றும் காத்தவனும் ஆகிய சிவன் எனக்கு அருள் புரிந்தார். எனவே தெள்ளேணம் கொட்டி சிவபெருமான் புகழ்பாடுகிறார் மாணிக்கவாசகர்.

### திருச்சாழல்

இது திருவாசகத்தில் பன்னிரெண்டாம் பதிகம். இதில் இருபது பாடல்கள் உள்ளன. சாழல் என்பது ஒருவகை மகளிர் விளையாட்டு. இதனை வரிக்கூத்து வகைகளில் ஒன்று என்பர். இதில் வினாவும் அதற்கேற்ற விடையும் பாடுவது மரபு. இவ்வகையில் மாணிக்கவாசகர் இப்பதிகத்தை அமைத்துள்ளார். முதல் இரண்டு வரிகளில் சிவபெருமான் பெருமையைப் பற்றிக் கேட்கும் கேள்வியும், இறுதிச்சீரில் 'ஏடி' என்றும் மூன்றாவது, நான்காவதடி சிவன் பெருமை கூறி 'சாழலோ' என்றும் இப்பாடல்கள் முடிவடைகின்றன.

அலவரனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
நிலமுதற்கீழ் அண்டமு நின்றதுதான் என்னேடி (திரு.ப.12.6:1-2)

என்று தோழியானவள் கேள்வி கேட்க, அதற்குத் தலைவி,

நிலமுதற்கீழ் அண்டமுற நின்றிலனேல் இருவரும்தம்
சலமுகத்தால் ஆங்காரம் தவிரார்காண் சாழலோ (திரு.ப.12.6:3-4)

என்று பதில்கூறும் முறையில் இப்பாடல் பாடப்பெற்றதுள்ளது.

## திருப்பூவல்லி

இது திருவாசகத்தில் பதிமூன்றாம் பதிகம் ஆகும். இதில் இருபது பாடல்கள் உள்ளன. பூவல்லி என்பது பூக்கொய்து விளையாடும் பெண்கள் விளையாட்டுகளில் ஒன்று. மாலை நேரத்தில் அல்லி பறித்தாடும் ஆடலில் தலைவி, இறைவன் புகழ்பாடி பூக்கொய்வோம் என்று தோழிகளைப் பார்த்துக் கூறுவதாக இப்பதிகம் எழுதப்பெற்றுள்ளது.

**எந்தை எம்தாய் சுற்றம் மற்றும் எல்லாம் என்னுடைய**
**பந்தம் அறுத்து என்னை ஆண்டுகொண்ட பாண்டிப்பிரான்**
**அந்த இடைமருதில் ஆனந்தத் தேன் இருந்த**
**பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ!** (திரு.ப.13.2:1-4)

என்று என் தாய், தந்தை, சுற்றம் எல்லாம் அவனே, அவனைத் தொழுது பூவல்லி கொய்வோமா? என்று தலைவி தோழியைப் பார்த்து கேட்கிறாள்.

நீராடித் திரும்பும்போது பெண்கள் பூஞ்சோலைகளுக்குச் சென்று தங்களுக்குத் தேவையான பூக்களைப் பறிக்கும்போது தங்கள் தலைவன் புகழ்பாடி பறிப்பதைப் போல மாணிக்கவாசகரும் இறைவனாகிய சிவபெருமானின் புகழைப்பாடி தோழியருடன் பூப்பறிக்கின்றார்.

## திருவுந்தியார்

இது திருவாசகத்தில் பதினான்காம் பதிகமாகும். இப்பதிகத்தில் இருபது உந்தி பறக்கும் பாடல்கள் உள்ளன. உந்திபறத்தல் என்பது மகளிருக்கே உரிய ஒரு விளையாட்டாகும். இருகால்களையும் பூமியில் அழுத்தி உயரக் குதித்துப் பாடி விளையாடுவர். இந்தக் காலத்தில் விளையாடும் கயிற்றினைச் சுற்றி குதித்து விளையாடும் விளையாட்டைப் போன்றது. சிவனின் அருள் என்னும் ஞானவெளிச்சம் பெற உந்தி பறந்து விளையாடு என்று மாணிக்கவாசகர் பாடுகிறார்.

**சாடிய வேள்வி சரத்திடத் தேவர்கள்**
**ஓடியவா பாடி உந்தீபற**
**உருத்திர நாதனுக்கு உந்தீபற** (திரு.ப.14.5:1-3)

என்று சிவபெருமானின் பெருமைகளையும், புராணச்செய்திகளையும் கூறி பெண்கள் விளையாடுவதாகத் திருவாதவூரர் பாடுகின்றார்.

## திருத்தோணோக்கம்

இது திருவாசகத்தில் பதினைந்தாம் பதிகம். இதில் பதினான்கு பாடல்கள் உள்ளன. தோள்நோக்கம் என்பதும் ஒருவித மகளிர் விளையாட்டு. மகளிர்

ஒருவர் தோளை ஒருவர் அன்போடு நோக்கித் தொட்டும், தட்டியும், அகமகிழ்ந்தும் ஆடும் விளையாட்டு. இதனை அடியார்க்கு நல்லார் 'தோள் வீச்சு' என்பார்.

> விருப்பு உற்று வேடனார் சேடு அறிய மெய் குளிர்ந்து அங்கு
> அருள் பெற்று நின்றவா தோள் நோக்கம் ஆடாமோ (திரு.ப.15.3:3-4)

என்று மாணிக்கவாசகர் சிவபெருமானின் பெருமைகளை ஒரு பெண்ணாக தோழியருடன் மகிழ்ந்து விளையாடி எடுத்துரைக்கின்றார்.

### திருப்பொன்னூசல்

இது திருவாசகத்தில் பதினாறாம் பதிகம். இதில் ஒன்பது பாடல்கள் உள்ளன. பெண்கள் சோலைகளில் ஒன்று சேர்ந்து விளையாடும் விளையாட்டுகளில் ஒன்று பொன்னூசல். இன்று 'ஊசல்' என்பது 'ஊஞ்சல்' என வழங்குகின்றது. மகளிர் சிவபெருமானின் புகழ்களைப் பாடிக்கொண்டே ஊஞ்சல் ஆடுகின்றனர்.

> துஞ்சல் பிறப்பு அறுப்பான் தூய புகழ்பாடிப்
> புஞ்சம் ஆர்வெள்வளையீர் பொன்ஊசல் ஆடாமோ (திரு.ப.16.4:5-6)

என்று தலைவி தனது தோழிகளுடன் ஆடும் பொன்னூசல் இறைவனது தாளிணைகளைப் பாடி ஆடுவோமா? என்கிறாள். சிவனின் அருட்செயல்களை பெண்கள் ஊஞ்சல் ஆடிக்கொண்டே பாடுவதாகப் பாடுகின்றார் மாணிக்கவாசகர்.

### நிறைவுரை

திருவாசகத்தில் ஐம்பத்தொரு பதிகங்களில் மகளிரின் விளையாட்டுகளை மையமாகக் கொண்டு பாடப்பெற்ற பதிகங்கள் பத்து. ஏழாம் பதிகமான திருவெம்பாவையில் தொடங்கி பதினாறாம் பதிகமான திருப்பொன்னூசல் வரை உள்ள பத்துப் பதிகங்கள் பெண்கள் விளையாடும் பல்வேறு நாட்டுப்புற விளையாட்டுகளின் அடிப்படையில் எழுதப் பெற்றுள்ளன. இப்பதிகங்கள் சிவபெருமானின் புராணச் செய்திகளையும் அருள் தன்மைகளையும் வெளிப்படுத்துகின்றன. மாணிக்கவாசகர் தில்லையைச் சுற்றியுள்ள பல்வேறு திருத்தலங்களுக்குச் செல்லும்போது மகளிர் தமக்குள் விளையாடும் விளையாட்டுகளைக் கண்டு மகிழ்வெய்தினார். அதனையே தம் மனதுள் வைத்து சிவபெருமானின் மீது ஏற்றிப் பாடினார். நாட்டுப்புறப் பாடல் வடிவில் ஒரு பக்தி இலக்கியத்தைக் கொடுத்த பெருமை மாணிக்கவாசகரையே சாரும். மகளிர் விளையாடிய விளையாட்டுகள் மாணிக்கவாசகரின் மனதில் பசுமரத்து ஆணிபோல் பதிந்துள்ளன. ஆகையால் அவ்வடிவிலேயே பல பதிகங்களை இயற்றியுள்ளார். அவற்றில் இறைவனின் பெருமைகளை எடுத்தோதிய விதம் சிறப்பிற்குரியன, படிப்பதற்கும் இன்பம் பயப்பன.

# கங்கை பூமிக்கு வந்த கதை





திருமதி **மீனாட்சி சுந்தர்**
ஆ. தெக்கூர்
வலையபட்டி அ.ந.மு. திருநாவுக்கரசு செட்டியார்,
மாசிலாமணி ஆச்சியின் மகள்

சூரிய வம்சத்தை சேர்த்த சாகர மன்னர் ஒரு சமயம் அஸ்வமேத யாகம் நடத்தினார். அஸ்வமேத யாகக் குதிரை திடீரென்று காணாமல் போய்விட்டது. தன் அறுபதாயிரம் மகன்களையும் அந்த குதிரையைத் தேடிக் கண்டுபிடிக்கச் சொன்னார். இளவரசர்கள் பல இடங்களை அழித்தும், தீ வைத்துக் கொளுத்தியும் குதிரையைத் தேடினார்கள்.

கபில முனிவரின் ஆசிரமத்திற்கு வந்தார்கள். அவர் தவத்தில் ஈடுபட்டிருந்தார். அவருக்கு அருகே அவர்கள் தேடி வந்த குதிரை கட்டப்பட்டிருந்தது. கபில முனிவர் தன்னுடைய யோக சக்தியால் பூமியின் தரைமட்டத்திலிருந்து சற்று மேலே காற்றில் மிதந்தவாறு அமர்ந்து தவம் செய்து கொண்டிருந்தார். கபில முனிவர் தான் குற்றவாளி என்று நினைத்த இளவரசர்கள் அவர் இருந்த இடத்திற்கு அடியில் தீ வைத்தார்கள். அவர் மேனி கீழே சுட ஆரம்பித்தது. தவத்திலிருந்த கபில முனிவர் கண் திறந்தார். அவர் கண் திறந்த உடனே, அவர் முன் நின்றிருந்த இளவரசர்கள் எல்லோரும் சாம்பலானார்கள்.

இளவரசர்கள் திரும்பி வராததால், மன்னர் தன்னுடைய இன்னொரு மகனான அம்ஸுமானை அவர்களைத் தேட அனுப்பி வைத்தார். அம்ஸுமான் கபில முனிவரை சந்தித்தார். நடந்தவை அனைத்தையும் தெரிந்து கொண்டார். முனிவர் அவரிடம் அவர் சகோதரர்கள் ஆத்மாக்கள் உய்யவேண்டுமென்றால் அவர்கள் சாம்பலாக இருக்கும் அந்த இடத்தை சொர்க்கத்தில் ஓடும் கங்கையால் கழுவ வேண்டும் என்று சொன்னார்.

அவர் சகோதரர்கள் சாம்பல் மேல் கங்கை ஓடினால் தான் அவர்களுக்கு விடுதலை என்கின்ற நிலைமையில் அம்ஸுமான் தன் ஆயுள் முழுதும் கங்கையை சொர்க்கத்திலிருந்து கொண்டு வர முயற்சி செய்தார். அது முடியாமலேயே இறந்தும் போனார்.

அவருக்குப் பிறகு அவருடைய மகன் பகீரதனும் அதற்காகத் தொடர்ந்து இறைவனைப் பிரார்த்தித்தார்.

கங்கை பிரம்மலோகத்தில் ஒரு பெரிய கமண்டலத்திற்குள் இருந்தது. அதனால் பிரம்ம தேவரைக் குறித்துத் தவமிருந்தார். அவர் தவத்தை மெச்சி காட்சி கொடுத்த பிரம்ம தேவரிடம் கங்கையை விடச் சொல்லி வேண்டினார். அதற்குப் பிரம்மதேவர், "நாராயணர் வாமன அவதாரம் எடுக்கும் பொழுது, அவர் விஸ்வரூபம் எடுப்பார். அப்பொழுது அவர் பாதம் மூன்று லோகங்களையும் தொடும். அப்பொழுது அவருடைய கால் கட்டை விரல் அந்தக் கமண்டலத்தைத் தட்டிவிட்டு, அதிலிருந்து கங்கை பெருக்கெடுத்து ஓட ஆரம்பிக்கும். அப்பொழுது அது உங்களுக்கு கிடைக்கும்" என்று வரமளித்தார்.

பகீரதன் காத்திருந்த வாமன அவதாரமும் நிகழ்ந்தது. பெருமாளின் கட்டை விரல் பட்டு கமண்டலம் தலைகீழாக சாய்ந்து அதிலிருந்து மொத்தமும் கீழே ஊற்றியது.

பிரம்ம தேவர் பகீரதனிடம், "கங்கை விழுகிற வேகத்தில் பாதாளத்திற்குப் போய்விடும். நீ ஏதாவது செய்தால்தான் அதை பூமியில் நிறுத்த முடியும்" என்று சொன்னார்.

பகீரதன் சிவபெருமானைக் குறித்து தவமிருந்தார். அவர் தவத்தை மெச்சி அவருக்கு காட்சி கொடுத்த இறைவனிடம், "உங்கள் ஜடாமுடியில் கங்கை நீரைத் தாங்கிக் கொள்ள வேண்டும். இல்லையென்றால் என் முயற்சி எல்லாம் வீணாகி விடும்" என்று பிரார்த்தித்தார். சிவபெருமானும் கங்கையைத் தன் ஜடாமுடியில் தாங்கினார். ஆனால் அதைக் கீழே ஓட விடாமல் ஜடா முடிக்குள்ளேயே வைத்துக்கொண்டார். பகீரதன் மீண்டும் சிவபெருமானைக் குறித்து தவமிருந்தார். கங்கை நீரை பூமியில் பாய்ந்து ஓட விடச் சொன்னார். சிவபெருமானும் தன் ஜடாமுடிக்குள் பூட்டி வைத்த கங்கை நீரைக் கீழே பாயவிட்டார்.

பூமியில் விழுந்த கங்கை கடும் வேகமாக ஓடியது. கங்கை ஓடி வந்த பாதையில் ஜானு முனிவரின் ஆசிரமம் இருந்தது. அதற்குள்ளும் ஓடினது கங்கை. ஜானு முனிவருக்குக் கோபம் வந்தது. அவர் மொத்த கங்கை நீரையும் குடித்துவிட்டார். பகீரதன் ஜானு முனிவரை வேண்டிக் கேட்டுக்கொண்டார். "தயவு செய்து கங்கை நீரை விடுங்கள்" என்று பிரார்த்தித்தார். முனிவரும் தான் முழுவதும் முழுங்கிய கங்கை நீரைத் தன் காது வழியாக விட்டார். அதனால் அங்கு கங்கைக்கு ஜான்வி என்று பெயர் தோன்றியது.

திரும்பியும் பாய்ந்து ஓடிய கங்கை பகீரதன் முன்னோர்கள் சாம்பல் மேல் ஓட, அந்த ஆத்மாக்கள் எல்லாம் விடுதலை அடைந்தன.

ஓர் இடத்தில் மந்தாகினி என்றும், இன்னொரு இடத்தில் பாகீரதி என்றும், இன்னொரு இடத்தில் ஜான்வி என்றும் கங்கை இந்த பூமியில் புனித நதியாக ஓடுகிறது. கோமுக் என்னும் இடத்தில் பாகீரதி என்னும் பெயரில் ஓடும் கங்கை,

தேவப்பிரயாகையில் அலக்நந்தா நதியோடு சேர்ந்த பிறகு கங்கை ஆனது. அலகாபாத்தில் கங்கையோடு யமுனையும் சேர அதோடு அந்தர்யாமியாக சரஸ்வதி நதியும் பூமிக்கு அடியிலிருந்து வந்து சேர, கங்கை அங்கே திருவேணி சங்கமமாகப் பேராற்றல் அடைகிறது.

பஜகோவிந்தத்தில் ஆதிசங்கரர், "யார் ஒரு சொட்டு கங்கை நீரைக் கொடுத்திருக்கிறார்களோ, யார் ஒரு முறையாவது கிருஷ்ணரைக் கும்பிட்டிருக்கிறார்களோ அவர்கள் எமதர்மரை சந்திக்க வேண்டிய அவசியமே இல்லை" என்று சொல்லி இருப்பார். இது பூமியில் பிரபாவமாக ஓடும் கங்கையின் மகிமை.

# இறைவனுக்கு அஞ்சுவோம், இறையருள் கிடைக்கும்



State Express
**V.L. ராமநாதன்,** தேவகோட்டை
ஆசிரியர் : பாலதண்டாயுதபாணி மலர்

இறை வழிபாடு என்பது உலகம் தோன்றிய காலந்தொட்டு நிகழ்ந்து வருகிறது. பல மதங்கள் தோன்றி கூட்டம் கூட்டமாக இறைவனை வழிபட்டு வருகிறோம். திருவண்ணாமலை, பழனி, ஐயப்பன் கோயில், திருப்பதி என கூட்டம் கூட்டமாகச் செல்கிறோம். வழிபடுகிறோம். ஆனால் எத்தனை பேர் உள்ளத்தில் இறைவனை நினைக்கிறோம் என்பதை அவரவர் ஆராயவேண்டும்.

வழிபாடுகள் குறைவில்லாமல் நடந்தாலும் இறைவனுக்கு அஞ்சி நடப்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். நல்லவர்கள் மத்தியில் அதர்மக்காரர்களின் தீய எண்ணங்கள் பெருகி வருகின்றன. அவர்களை எதிர்க்கும் துணிவையும், போராடும் பலத்தையும் இறைவனை வழிபடுவதின் மூலம் பெறலாம். உண்மையான வழிபாடு என்பது இறைவனுக்கு அஞ்சி தர்ம வழியில் நம் செயல்பாடுகள் இருக்க வேண்டும். தர்ம வழியில் செல்பவர்களுடன் இணங்கிச் செயலாற்ற வேண்டும்.

பொறாமைப்படாமல், பிறருக்குத் தீங்கு செய்யாமல் மனித நேயத்துடன் எல்லோருக்கும் உதவும் பண்பை வளர்த்துக்கொள்வது இறையருள் பெறுவதற்கான ஒரு வழியாகும். இறைவனுக்கு அஞ்சி உண்மையுடன் நாம் வழிபட்டு சமூகத்தினருக்குத் துன்பம் கொடுக்காமல் வாழ்ந்தால் இறையருள் நிச்சயம் கிடைக்கும்.

# தினம் துதிக்க அபிராமி அந்தாதியின் அருட்கொடை



திருமதி. **சேவா அருணாசலம்** M.Com., M.Phil., B.Ed.,
கோட்டையூர்.

உலகில் சரணாகதி அடைந்த பக்தருக்காக அம்மையும் அப்பனும் விதியையும், திதியையும் மாற்றிய அருள் திருத்தலமாகச் சிறப்பு பெற்று விளங்குவது திருக்கடையூர் திருத்தலம், பக்தன் மார்கண்டேயனுக்காக, இறைவன் அமிர்தகடேஸ்வரர் காலனை சம்ஹாரம் செய்ததோடு, 16 வயதில் முடியும் மார்க்கண்டேயனின் விதியை, என்றும் சிரஞ்சீவியாக இருக்க அருளச் செய்த தலம் திருக்கடையூர். தம் பக்தனின் வாக்கையும் அன்னை மீது கொண்ட நம்பிக்கையையும் மெய்ப்பிப்பதற்காக, அமாவாசை திதியை பவுர்ணமி திதியாக மாற்றிக் காட்டியவள் இத்தல அபிராமி அன்னை.

அருள்மிகு அமிர்தகடேஸ்வரரையும் அபிராமி அன்னையையும் மனதார வணங்கிச் சென்றால் ஆயுள் பலம் கூடும். சகல ஐஸ்வரியங்கள் மற்றும் பதினாறு செல்வங்களும் கிடைக்கும். வாக்கு வன்மை, கல்வி, ஞானம், கீர்த்தி, புகழ் ஓங்கும் என்பது தொன் நம்பிக்கை.

கருணையும் கனிவுமாக ஆட்சி நடத்தும் அபிராமி அன்னையை நினைக்கும் போதே, அபிராமி அந்தாதியையும் அந்தாதியைத் தந்த அபிராமிப் பட்டரையும் இந்த அகிலம் என்றும் போற்றும். ஒரு பாடலின் ஈற்றடியின் கடைச்சொல் அந்தம் ஆனது, அடுத்து வரும் பாடலின் துவக்கச் சொல்லாக – ஆதியாக அமையும் இலக்கணமுறை அந்தாதி ஆகும். அபிராமிப் பட்டர் என போற்றப்படும் சுப்ரமணியப் பட்டரால், திருக்கடையூர் தலத்தில் அருள் செய்யும் அபிராமி அன்னையின் மீது பாடப்பட்ட 100 பாடல்களே அபிராமி அந்தாதி ஆகும். அந்தம் என்றால் முடிவு, ஆதி என்றால் துவக்கம். ஒரு பாடலின் முடிவாக அமையும் வார்த்தையை அடுத்து பாடலின் ஆரம்பமாகக் கொண்டு அபிராமி அன்னையை போற்றி பாடப்பட்டதால் இதற்கு அபிராமி அந்தாதி என்று பெயர்.

இறைத் துதிகளை நாம் பாராயணம் செய்யும் போது நமது மனம் மென்மையாகும். எதையும் சாதிக்கும் ஒரு துணிவு வரும். மட்டற்ற மகிழ்ச்சி வரும்.

அம்பிகையின் அருளைப் பெறுவதற்குரிய முக்கியமான பாடல்களில் ஒன்று அபிராமி அந்தாதி. இந்த 100 பாடல்களைத் தினமும் படித்து வந்தால் தலை விதியே மாறி விடும் என்பார்கள். நடக்க முடியாத அமாவாசை அன்று நிலவு தோன்றும் நிகழ்வை தனது பக்தனுக்காக நிகழ்த்தி காட்டியவள் அம்பாள். அதனால் அவளுக்குரிய இந்த 100 பாடல்களையும் பக்தியுடன் பாடி வந்தால் நடக்கவே முடியாது, நடப்பதற்கு வாய்ப்பே இல்லை என்ற காரியம் கூட நடந்து விடும்.

| பாடல் எண் | அபிராமி அந்தாதி பாடல் முதல் வரி | பாராயணம் செய்வதால் கிடைக்கப்பெறும் பலன் |
|---|---|---|
| | தாரமர் கொன்றையும் | கணபதி காப்பு |
| 1. | உதிக்கின்ற செங்கதிர் | ஞானமும் நல்வித்தையும் பெற |
| 2. | துணையும் தொழுந்தெய்வமும் | பிரிந்தவர் ஒன்று சேர |
| 3. | அறிந்தேன் எவரும் | குடும்பக் கவலையிலிருந்து விடுபட |
| 4. | மனிதரும் தேவரும் | உயர் பதவிகள் அடைய |
| 5. | பொருந்திய முப்புரை | மனக்கவலை தீர |
| 6. | சென்னியது உன்பொன் | மந்திர சித்தி பெற |
| 7. | ததியுறு மத்திற் | மலை போன்ற துன்பமும் பனியென நீங்க |
| 8. | சுந்தரி! எந்தை | உலகப் பற்றுகள் நீங்கி பக்தி பெருகிட |
| 9. | கருத்தன, எந்தைதன் | அனைத்தும் வசமாகக் கிடைக்க |
| 10. | நின்றும், இருந்தும் | மோட்சம் கிடைக்க |
| 11. | ஆனந்தமாய் என் | இல்வாழ்க்கையில் இன்பம் பெற |
| 12. | கண்ணியது உன்புகழ் | நெஞ்சம் தியானத்தில் நிலைபெற |
| 13. | பூத்தவளே புவனம் | வைராக்கிய நிலை எய்த |
| 14. | வந்திப்பவர் உன்னை | தலைமை பெற |
| 15. | தண்ணளிக் கென்று | பெருஞ்செல்வமும் பேரின்பமும் பெற |
| 16. | கிளியே! கிளைஞர் | முக்காலமும் உணரும் திறன் உண்டாக |
| 17. | அதிசயமான வடிவுடையாள் | நல்ல வரன் அமைய |

| பாடல் எண் | அபிராமி அந்தாதி பாடல் முதல் வரி | பாராயணம் செய்வதால் கிடைக்கப்பெறும் பலன் |
|---|---|---|
| 18. | வவ்விய பாகத்திறைவரும் | மரண பயம் நீங்க |
| 19. | வெளிநின்ற நின் | பேரின்ப நிலையடைய |
| 20. | உறைகின்ற நின் | வீடு வாசல் முதலிய செல்வங்கள் உண்டாக |
| 21. | மங்கலை! செங்கல | பாவம் தொலைய |
| 22. | கொடியே! இளவஞ்சிக் | இனிப் பிறவா நெறி அடைய |
| 23. | கொள்ளேன் மனத்தில் | எப்போதும் மகிழ்ச்சியாய் இருக்க |
| 24. | மணியே! மணியின் | நோய்கள் விலக |
| 25. | பின்னே திரிந்து | நினைத்த காரியம் நிறைவேற |
| 26. | ஏத்தும் அடியவர் | சொல்வாக்கும் செல்வாக்கும் பெருக |
| 27. | உடைத்தனை வஞ்சப் | மனநோய் அகல |
| 28. | சொல்லும் பொருளும் | இம்மை மறுமை இன்பங்கள் அடைய |
| 29. | சித்தியும், சித்தி | அணிமாதி அஷ்ட சித்திகளைப் பெற |
| 30. | அன்றே தடுத்து | அடுத்தடுத்து வரும் துன்பங்கள் நீங்க |
| 31. | உமையும், உமையொரு | மறுமையில் இன்பம் உண்டாக |
| 32. | ஆசைக்கடலில் அகப்பட்டு | அகால மரணமும் துர்மரணமும் வராமலிருக்க |
| 33. | இழைக்கும் வினைவழியே | இறக்கும் நிலையிலும் அம்பிகை நினைவோடு இருக்க |
| 34. | வந்தே சரணம் | சிறந்த நன்செய் நிலங்கள் கிடைக்க |
| 35. | திங்கட் பகவின் | திருமணம் நிறைவேற |
| 36. | பொருளே! பொருள் | பழைய வினைகள் வலிமை பெற |
| 37. | கைக்கே அணிவது | நவமணிகளைப் பெற |
| 38. | பவளக் கொடியில் | வேண்டியதை வேண்டியவாறு அடைய |
| 39. | ஆளுகைக்கு உன்தன் | கருவிகளைக் கையாளும் வலிமை பெற |
| 40. | வாணுதல் கண்ணியை | பூர்வ புண்ணியம் பலன்தர |

| பாடல் எண் | அபிராமி அந்தாதி பாடல் முதல் வரி | பாராயணம் செய்வதால் கிடைக்கப்பெறும் பலன் |
|---|---|---|
| 41. | புண்ணியம் செய்தனமே | நல்லடியார் நட்புப் பெற |
| 42. | இடங்கொண்டு விம்மி, | உலகினை வசப்படுத்த |
| 43. | பரிபுரச் சீறடிப் | தீமைகள் ஒழிய |
| 44. | தவளே! இவள் | பேதபுத்தி நீங்க |
| 45. | தொண்டு செய்யாது | உலகோர் பழியிலிருந்து விடுபட |
| 46. | வெறுக்கும் தகைமைகள் | நல்நடத்தையோடு வாழ |
| 47. | வாழும்படியொன்று கண்டு | யோக நிலை அடைய |
| 48. | சுடரும் கலைமதி | உடல் பற்று நீங்க |
| 49. | குரம்பை அடுத்துக் | மரணத் துன்பம் இல்லாதிருக்க |
| 50. | நாயகி; நான்முகி; | அம்பிகையை நேரில் காண |
| 51. | அரணம் பொருள் | மோகம் நீங்க |
| 52. | வையம், துரகம் | இம்மையில் பெருஞ்செல்வம் அடைய |
| 53. | சின்னஞ்சிறிய மருங்கினில் | பொய்யுணர்வு நீங்க |
| 54. | இல்லாமை சொல்லி | கடன் தொல்லைகள் தீர |
| 55. | மின்னாயிரம் ஒரு | விருப்பு வெறுப்பற்ற மோனநிலை எய்த |
| 56. | ஒன்றாய் அரும்பிப் | யாவரையும் வசீகரிக்கும் ஆற்றல் உண்டாக |
| 57. | ஐயன் அளந்தபடி | வறுமை ஒழிய |
| 58. | அருணாம் புயத்தும் | மன அமைதி பெற |
| 59. | தஞ்சம் பிறிதில்லை | பிள்ளைகள் நல்லவர்களாக வளர |
| 60. | பாலினும் சொல்இனியாய் | மெய்யுணர்வு பெற |
| 61. | நாயேனையும் இங்கொரு | மாயையை வெல்ல |
| 62. | தங்கச்சிலை கொண்டு | எத்தகைய அச்சமும் அகல |
| 63. | தேறும்படி சில | அறிவு தெளிவோடு இருக்க |
| 64. | வீணே பலிகவர் | பக்தி பெருக |

| பாடல் எண் | அபிராமி அந்தாதி பாடல் முதல் வரி | பாராயணம் செய்வதால் கிடைக்கப்பெறும் பலன் |
|---|---|---|
| 65. | ககனமும், வானமும் | மகப்பேறு அடைய |
| 66. | வல்லபம் ஒன்றறியேன் | கவிஞராக |
| 67. | தோத்திரம் செய்து | பகைவர்கள் அழிய |
| 68. | பாரும், புனலும் | நிலம் வீடு போன்ற செல்வங்கள் பெருக |
| 69. | தனம்தரும்; கல்விதரும் | சகல சௌபாக்கியங்களும் அடைய |
| 70. | கண்களிக்கும்படி கண்டுகொண்டேன் | கலைகளில் சித்தி பெற |
| 71. | அழகுக்கு ஒருவரும் | மனக்குறைகள் தீர்ந்து மகிழ்ச்சி பெற |
| 72. | என்குறை தீரநின்று | பிறவிப் பிணி தீர |
| 73. | தாமம் கடம்பு | குழந்தைப் பேறு உண்டாக |
| 74. | நயனங்கள் மூன்றுடை | தொழிலில் மேன்மை அடைய |
| 75. | தங்குவர் கற்பகத் | விதியை வெல்ல |
| 76. | குறித்தேன் மனத்தில் | தனக்கு உரிமையானதைப் பெற |
| 77. | பயிரவி, பஞ்சமி, | பகை அச்சம் நீங்க |
| 78. | செப்பும், கனக | சகல செல்வங்களையும் அடைய |
| 79. | விழிக்கே அருளுண்டு | கட்டுகளில் இருந்து விடுபட |
| 80. | கூட்டியவா! என்னைத் | நிலையான மனமகிழ்ச்சி நிலைத்திட |
| 81. | அணங்கே அணங்குகள் | நன்னடத்தை உண்டாக |
| 82. | அளியார் கமலத்தில் | மன ஒருமைப்பாடு அடைய |
| 83. | விரவும் புதுமலர் | ஏவலர் பலர் உண்டாக |
| 84. | உடையாளை, ஒல்கு | தர்ம சங்கடங்கள் நீங்க |
| 85. | பார்க்கும் திசைதொறும் | துன்பங்கள் நீங்க |
| 86. | மாலயன் தேட | ஆயுத பயம் நீங்க |
| 87. | மொழிக்கும், நினைவுக்கும் | செயற்கரிய செய்து புகழ் பெற |
| 88. | பரம் என்று | எப்போதும் அம்பிகை அருள் பெற |
| 89. | சிறக்கும் கமலத் | யோக சித்தி பெற |
| 90. | வருந்தா வகை என்மனத் | கணவன் மனைவி கருத்து வேற்றுமை நீங்க |
| 91. | மெல்லிய நுண்ணிடை | அரசாங்கச் செயலில் வெற்றி பெற |

| பாடல் எண் | அபிராமி அந்தாதி பாடல் முதல் வரி | பாராயணம் செய்வதால் கிடைக்கப்பெறும் பலன் |
|---|---|---|
| 92. | பதத்தே உருகி, | மனநிலை பக்குவமடைய |
| 93. | நகையே இஃதிந்த | உள்ளத்தில் ஒளி உண்டாக |
| 94. | விரும்பித் தொழும் | மனநிலை தூய்மையாக |
| 95. | நன்றே வருகினும் | தூய மனநிலை பெற |
| 96. | கோமள வல்லியை | எங்கும் தலைமையும் புகழும் பெற |
| 97. | ஆதித்தன், அம்புலி | புகழும் அறமும் வளர |
| 98. | தைவந்து நின் | வஞ்சகர் செயல்களிலிருந்து பாதுகாப்புப் பெற |
| 99. | குயிலாய் இருக்கும் | அருள் உணர்வு வளர |
| 100. | குழையைத் தழுவிய | அம்பிகையை மனத்தில் காண |
| | **நூற்பயன்** | |
| 101. | ஆத்தாளை, எங்கள் | 100 பாடல்களைப் பாராயணம் செய்த பலன் |

இந்த வகையில் தினம் 100 பாடல்களையோ அல்லது அவரவர் பலன் நோக்கில் உரிய பாடலையோ தினம் பாராயணம் செய்து வந்தால் அன்னை அபிராமி அனைத்தும் அருள்வாள். தினம் 100 பாடல்களைப் பாராயணம் செய்ய இயலாதவர்கள் கணபதிக் காப்பு பாடலான தாரமர் கொன்றையும் சண்பகமாலையும் சாத்தும் தில்லை ஊரர்தம் பாகத்து உமைமைந்தனே! உலகேழும் பெற்ற சீர் அபிராமி அந்தாதி எப்போதும் என் சிந்தையுள்ளே காரமர் மேனிக் கணபதியே! நிற்கக் கட்டுரையே என்று பாடி விநாயகரை வணங்கி பின் 101 வது பாடலான ஆத்தாளை, எங்கள் அபிராமவல்லியை, அண்டமெல்லாம் பூத்தாளை, மாதுளம் பூநிறத்தாளை, புவி அடங்கக் காத்தாளை அங்குச பாசாங் குசமும் கரும்பும்அங்கை சேர்த்தாளை, முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லையே என்று மெய்யுருகி அன்னை அபிராமியை தொழுதால் அபிராமி அந்தாதியில் உள்ள 100 பாடல்களைப் பாடிய பலன் கிடைக்கும் என்பது உண்மை.

அபிராமிப் பட்டர் அருளிய அபிராமி அம்மைப்பதிகத்தின் முதல் பாடலை அனைவரும் பாராயணம் செய்து கலையாத கல்வியும், குறையாத வயதும், ஓர் கபடு வாராத நட்பும், கன்றாத வளமையும், குன்றாத இளமையும், கழுபிணி இலாத உடலும், சலியாத மனமும், அன்பு அகலாத மனைவியும், தவறாத சந்தானமும், தாழாத கீர்த்தியும், மாறாத வார்த்தையும், தடைகள் வாராத கொடையும், தொலையாத நிதியமும், கோணாத கோலும், ஒரு துன்பம் இல்லாத வாழ்வும், துய்ய நின்பாதத்தில் அன்பும் உதவிப், பெரிய தொண்டரோடு கூட்டு கண்டாய், அலைஆழி அறி துயில்கொள் மாயனது தங்கையே! ஆதி கடவூரின் வாழ்வே! அமுதீசர் ஒரு பாகம் அகலாத சுகபாணி! அருள் வாமி! அபிராமியே என்று வணங்குவோம். ■

# தர்மம் தலைகாக்கும்



Agri. SP. சொக்கலிங்கம்

நகரத்தார் சமூகம் தர்மம் செய்வதற்கென்றே பிறந்த சமூகம். நம் முன்னோர்கள் செய்த தர்மங்களினால்தான் நகரத்தார்களாகிய நாம் நன்றாகக் கல்வி கேள்விகளில் சிறந்து செல்வச் செழிப்பாக உள்ளோம்.

நம் சமூகத்தவர்கள் பாய்மரக் கப்பல்களில் உயிரைப் பணையம் வைத்து, குடும்பத்தினரை ஊரில் விட்டுச் சென்று பர்மா, செய்கோன், மைடான், மலேசியா, சிங்கப்பூர், இலங்கை ஆகிய வெளிநாடுகளில் வியாபாரம் செய்து சம்பாதித்து சிக்கனமாக இருந்து அந்தந்த ஊர்களிலும், தம் சொந்த ஊர்களிலும் தர்மங்கள் செய்து கோயில்கள் கட்டி, தெய்வச் சிலைகளுக்கு வெள்ளி, சொர்ண அங்கிகள் செய்து தங்க வைர நகைகள் செய்து அணிவித்து மகிழ்ந்தார்கள். தங்கரதம் வெள்ளி ரதங்கள் செய்து வைத்தார்கள். கல்விச் சாலைகள் அமைத்து ஏழை எளிய மக்களும் கல்வி கற்க உதவினார்கள். தர்ம ஆஸ்பத்திரிகள் கட்டி அனைத்து மக்களுக்கும் இலவச சிகிச்சை கிடைக்கச் செய்தார்கள்.

மேலே குறிப்பிட்ட தர்மங்களை நகரத்தார்கள் செய்ததினாலேயேதான், பர்மா கெட்டாலும் , செய்கோன், மலேசியா, சிலோன் கெட்டாலும் நம் சமூகம் நன்றாகவே இருக்கிறது.

வெளிநாடுகளிலிலிருந்து நம் நாட்டுக்கு வந்த பின்னர் வட்டித் தொழில், நகை அடகுக்கடை போன்ற தொழில்கள் செய்தார்கள்.

பின்னர் வட்டிச் சட்டம் கடுமையானபோது அனைவரும் தொழிற்சாலைகள், பேப்பர் கடைகள், மருந்துக் கடைகள் வைத்தார்கள். நம்மவர்கள் ஆரம்பித்த IOB, IB, B.O.M போன்ற வங்கிகளில் வேலைக்குச்சேர்ந்தார்கள். குடும்பங்களைத் தொழில் செய்த இடத்திற்குக் கூட்டிச் சென்று பிள்ளைகளை நன்றாகப் படிக்க வைத்தார்கள்.

போட்டிகளின் காரணமாக வியாபார வருமானம் சற்றுக் குறைந்தாலும் நம் பிள்ளைகள் ஆண், பெண் இருவரும் நன்றாகப் படித்ததால், அவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று நல்ல சம்பளம் வாங்கி தாய், தந்தையரை மிக நன்றாகப் பார்த்துக் கொள்கிறார்கள். அருமையான வீடுகள் கட்டி, சகோதரிகள் திருமணங்களையும் சிறப்பாகச் செய்து வருகிறார்கள்.

வெளிநாட்டு வருமானம் நின்ற போதிலும், உள்நாட்டு வருமானம் குறைந்த போதிலும், நம் பிள்ளைகளின் பெரிய சம்பளங்களால் நம் சமூகம் சிறந்து விளங்க நாம் செய்த தர்மங்களே காரணம்.

மேலும் தர்மம் தலைகாக்கும் என்பதற்கு உதாரணமாக ஒரே ஒரு நிகழ்ச்சியை மட்டும் கூறுகிறேன்.

வடஆற்காடு மாவட்டத்தை இரண்டாகப் பிரித்து புதிய திருவண்ணாமலை மாவட்டம் உருவானது. புதிய கலெக்டர், காவல்துறை ஆணையர் நியமனம் செய்யப்பெற்றார்கள். காவல்துறை அலுவலகம் நமது "ஓய" மடத்தில் தான் இயங்கியது.

மாவட்ட ஆட்சியரும், காவல்துறை ஆணையரும் அண்ணாமலையார் கோவிலுக்குச் சென்று பார்வையிட்டபோது, கோவிலுக்கு முன்பாக ஒழுங்கற்ற நிலையில் கூரைவேய்ந்த டீக்கடைகளும், சாப்பாட்டுக் கடைகளும், சிறு சாமான்கள், பூஜைப் பொருட்கள் விற்கும் கடைகளும் இருந்திருக்கின்றன. கோவிலுக்குப் போகும் வழி சுத்தமில்லாமல் டீக்கடை கழிவுத் தண்ணீர், சாப்பிட்ட இலைகள் யாவும் அசிங்கமாகக் கிடந்து மிகவும் சுகாதாரக் கேடாக இருந்திருக்கின்றது. இவைகளைப் பார்த்த அதிகாரிகள் இருவரும் கடைக்காரர்களைக் கூப்பிட்டு இந்தக் கடைகளைப் பூராவும் அப்புறப்படுத்திவிட்டு புதிய கட்டிடம் கட்டித்தருகிறோம். ஒத்துழைப்பு தாருங்கள் என்று கேட்டுக் கொண்டதற்கு, கடைக்காரர்கள், கட்சிக்காரர்களைக் கூட்டி வந்து எதுவும் செய்ய முடியாது. இப்படியேதான் இருப்போம் என்று சொல்லிவிட்டார்களாம்.

கட்சிக்காரர்கள் தலையிட்டு விட்டார்கள். நாம் ஒன்றும் செய்ய முடியாது பின்னர் பார்ப்போம் என்று கலெக்டரும் எஸ்.பி.யும் சென்று விட்டார்கள்.

பின்னர் ஒருநாள், இயற்கையாக டீக்கடையிலிருந்து ஒரு தீப்பொறி பறந்து கடைகள் தீப்பற்றி எரிந்து கொண்டிருக்கின்றன.

அப்போது அங்கு சென்ற கலெக்டரிடம் அண்ணாமலையார் கோவில் அர்ச்சகர்கள் ஓடிவந்து கடைகளுக்குப் பக்கத்தில் கடியாபட்டி தீ.சொ. குடும்பத்தார் செய்து வைத்த வெள்ளி ரதம் ஷெட்டுக்குள் நிற்கிறது. உடனடியாக அதை வெளியேற்றாவிட்டால் வெள்ளிரதம் எரிந்து, வெள்ளி உருகிவிடும் என்று பதட்டமாகச் சொல்லியிருக்கிறார்கள். உடனடியாகக் கலெக்டர், எஸ்.பி.க்கு உத்தரவு பிறப்பித்து ஷெட்டு ஷட்டர் பூட்டை உடைத்து வெள்ளிரதத்தையும், காளாஞ்சிமடல், விபூதிமடல், சூடத்தட்டு போன்ற வெள்ளிப் பொருட்களையும், பத்திரமாக மீட்டுப் பாதுகாப்பான இடத்திற்குக் கொண்டு சென்று வெள்ளி ரதத்தைக் காப்பாற்றி விட்டார்கள்.

மறுநாள் தகவல் தெரிந்து உபயதாரர்களான கடியாபட்டி தீ.சொ. குடும்பத்தைச் சேர்ந்த தீ.சொ.கி.மு. கிருஷ்ணப்ப செட்டியார் அவர்கள் உடனடியாகத் திருவண்ணாமலைக்கு வந்து கலெக்டர் அவர்கள் கையைப் பிடித்துக் கொண்டு, ஐயா வெள்ளி ரதத்தைக் காப்பாற்றி விட்டீர்கள், மிக்க நன்றி. எங்கள் ஐயா காலத்தில் செய்தது, இப்பொழுது நினைத்துக் கூடப் பார்க்க முடியாது என்று கண்ணீர் மல்கக் கூறியிருக்கிறார்கள்.

அப்பொழுது கலெக்டர் சொன்னாராம், தர்மத்தைத்தான் காப்பாற்ற முடிந்தது. அதர்மமான, அக்கிரமமான கடைகளெல்லாம் எரிந்து விட்டது. நகரத்தார் செய்ய தர்மங்கள் என்றும் தலைகாக்கும் என்று கூறினாராம்.

நம் முன்னோர்கள் செய்த தர்மங்களில் சில நின்று போயிருந்தாலும், இப்பொழுது நம் பிள்ளைகள் தேடித்தேடி மிகச் சிறப்பாகத் தர்மங்களைச் செய்து வருகிறார்கள். நம் நகரத்தார் சமூகம் என்றும் நன்றாக இருக்கும். ■

## பசுமடம்



மலையாண்டி சுவாமி கோவில் இராஜகோபுரத்துக்கு எதிரில் மலையை ஒட்டி அமைந்துள்ளதுஇந்தப் பசுமடம். சுற்றுச் சுவர்களுடன் உள்ளே நடுவில் உள்ள கூடத்தில் பசுவும் கன்றும் நின்ற நிலையில் கற்சிலைகளாக நிறுவப்பட்டுள்ளன. 1920ல் புதுக்கோட்டை மன்னரிடம் இருந்து திவான் மூலமாக இந்த இடத்தைப் பெற்று சுப.நா.சுப. சுப்பையா செட்டியாரின் அப்பத்தா வீட்டு ஐயா அ.சி.சுப. சுப்ரமணியன் செட்டியார் இதனை நிறுவியுள்ளார். அவர்தம் குடும்ப வாரிசுகள் இன்றளவும் பசுமடத்தை நன்கு பராமரித்து, மாட்டுப் பொங்கலன்று சிறப்பு அபிஷேகம், பூஜைகள் செய்தும், தை மாதத்தின் திங்கள், வெள்ளிக் கிழமைகளில் பொங்கல் வைத்தும் கொண்டாடி வருகிறார்கள். மற்ற நகரத்தார் பெருமக்களும் இந்தக் கிழமைகளில் பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள். ■

# எளிமையும் பெருமையும்



கவிஞர் தென்னவன்
**வெ.நா. வெங்கடாசலம் (எ) மாணிக்கம்** M.A.,
வலையபட்டி

ஊர்மேவு குளக்கரைகள்
ஒற்றைமரம் தெருவெல்லாம்
உட்கார்ந் திருக்கும் எளியோன்

உண்மையாய் அன்புருக
உள்ளம் நினைந்தார்க்கே
உதவுபெருங் கருணைவிழியான்

கூர்மேவு வேலனுக்கே
சொந்தமென இவ்வுலகின்
குன்றங்கள் யாவுமென்ற

கூற்றினை மாற்றிவளர்
கொஞ்சுதமிழ்த் தென்னவன்
கும்பிடும் யானைமுகனே

சீர்மேவு தனவணிகர்
வலம்புரியின் மலையமர்ந்த
சிவனாரின் மூத்தமகனே

செந்தமிழ் மரகத
விநாயகச் செம்மலே
சிந்தைமற வா துவந்தே

யார்மேவி வந்தாலும்
அவரவர்க்கு வேண்டுவன
அள்ளியிடும் வள்ளல் பெருமான்

அகத்தியன் வணங்கியே
அமைத்திட்ட வலையநகர்
அரசாளும் மலையாண்டியே!

# தேவாதி தேவன்

கவிஞர் தென்னவன்
**வெ.நா. வெங்கடாசலம் (எ) மாணிக்கம்** M.A.,
வலையபட்டி

வானோரும் தொழுகின்ற
வடுவகிர் விழியாளின்
வண்ணம் கலந்த பெருமான்!

வந்தாரின் வினைதீர்க்கும்
வலம்புரி நாதனவன்
வல்லபம் பொருந்துமகனே!

தானேறு சூரனவன்
ஆணவம் தணித்தற்குத்
தம்பிதன் துணையானவன்!

தவமோங்கு நவகோடி
சித்தரும் தேவர்களும்
தாள்பணியும் பெருமையுடையான்.

தேனாறு பாயுமிள
நலமுடையான் தென்னவன்
தெண்டனிடும் யானைமுகனே!

செந்தமிழ் வடிவேலன்
வள்ளியை மணந்திடச்
சிந்தையருள் கூர்ந்த தலைவா!

ஆனேறு சடையானின்
ஆங்காரப் பிரணவ
ஐயனே மூலமுதலே!

அகத்தியன் வணங்கியே
அமைத்திட்ட வலையநகர்
அரசாளும் மலையாண்டியே!



கும்பாபிஷேகத்திற்கு நகர விருந்து வழங்கிய காட்சியில் ஒரு பகுதி



# ஏழாவது குடமுழுக்கு விழா பற்றி நாளிதழ்களில் வந்த செய்திகள்



தமிழ்நாடு

பொன்னமராவதி

## வலையபட்டி அருள்மிகு மலையாண்டி சுவாமி கோயில் வரலாறு



ஆனந்த ஜோதி

வியாழன், செப்டம்பர் 5, 2024

## வலையபட்டி மலையாண்டி சுவாமி கோயிலில் மகா கும்பாபிஷேகம்

கே.சுந்தரராமன்

புதுக்கோட்டை மாவட்டம், வலையபட்டி நகரத்தாருக்கு சொந்தமான மலையாண்டி சுவாமி கோயிலில் செப்டம்பர் 8-ம் தேதி (ஞாயிற்றுக் கிழமை) 7-வது மகா கும்பாபிஷேகம் நடைபெற உள்ளது.

மலையாண்டி சுவாமி, வடுவகிர்விழியாள் உடனாய வலம்புரிநாத சுவாமி கோயில் கட்டப்பட்டு 132 ஆண்டுகள் நிறைவு பெற்றுள்ளன. முதலில் விநாயகர் மட்டுமே கோயில் கொண்டுள்ள சிறுகூரைக் கூடம் இருந்தது. பின்னர் நகரத்தாரின் முழு முயற்சியால் குன்றின் மீது கற்கள் ஏற்றப்பட்டு, கோயில் எழுப்பப்பட்டது. புதுக்கோட்டை சமஸ்தானத்தின் ஆட்சி உரிமை பெற்ற திவான் சேஷய்யா சாஸ்திரிகள், வலையபட்டிக்கு வருகை புரிந்து நகரத்தாரின் திருப்பணிகளை நேரில் கண்டார்.

பிடாரம்பட்டி கிராமத்தில் மூங்கிற்புதரில் இருந்த சிவலிங்க மூர்த்தி (வலம்புரிநாதர்), இக்கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டார். புதிதாக செதுக்கப்பட்ட வடுவகிர்விழியாள் அம்பாள் விக்கிரகமும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. நந்தன ஆண்டு தை 19-ம் தேதி (1892) இக்கோயிலில் முதல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. தற்போது 7-வது மகா கும்பாபிஷேகம் செப்டம்பர் 8-ம் தேதி காலை 7-35 முதல் 8-30 மணிக்குள் நடைபெற உள்ளது.

இவ்விழாவுக்கான யாகசாலை பூஜைகள், செப். 5-ம் தேதி காலை 9.30 மணி முதல் தொடங்குகின்றன. அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, கணபதி ஹோமம், நவக்கிரக ஹோமங்கள், ஆறு கால யாகசாலை பூஜைகள் பிள்ளையார்பட்டி சிவஸ்ரீ கே.பிச்சைக்குருக்கள் முன்னிலையில் நடைபெற உள்ளன. நிகழ்ச்சி குறித்த விபரங்களை அறிந்து கொள்ள 9944020202 என்ற அலைபேசி எண்ணை தொடர்பு கொள்ளலாம்.

இந்து தமிழ் திசை



பிள்ளையார்பட்டி பிச்சைக்குருக்களுடன் மலர்க் குழுவினர்

# முதுமையைப் போற்றுவோம்... முதியோரை வாழ்த்துவோம்



**L. மீனாட்சி லெட்சுமணன்** M.A.,B.Ed.,
உதவித் தலைமை ஆசிரியர் (ஓய்வு)
வலையபட்டி

மண்ணாண்டு பொன்னாண்டு மட்டத்த நாள் வாழ்ந்தீர்கள்
மகிர மக்கள் கண்டு மாத்தி மஞ்சம் பெற்றீர்கள்
மகித்துவமா வாழ்ந்தீர்கள். மகிழ்ந்த கல்யாணம்
மலையாண்டி முன்னே மகிழ்ச்சி பண்ணி செய்தீர்கள்

பொன்னாண்டு மண்ணாண்டு பெருவாரி நாள் வாழ்ந்தீர்கள்
போத மக்கள் பெற்று பிஞ்சு மக்கள் பெற்றீர்கள்
பிரபல்லியமா வாழ்ந்தீர்கள் பெரிய கல்யாணம்
பிள்ளைகள் முன்னே பெருமை பண்ணி செய்தீர்கள்

பொழிஞ்சாண்டார் எல்லையிலே பேருள்ளார் வீட்டில் பிறந்தீர்கள்
மதிச்சாண்டார் எல்லையிலே விலாசமுள்ளார் வீட்டில் வளர்ந்தீர்கள்

வளர்ந்த ஓவியம் போல் வரிசை பல கண்டீர்கள்
பிறந்த ஓவியம் போல் பேரு பல பெற்றீர்கள்
அகவை அறுபதிலும் அழகாக நடந்தீர்கள்
வயது தொண்ணூறிலும் வலுவுடன் நடந்தீர்கள்

நீங்கள் இருவரும்
சாலப்பகுசி சரிவரப் பார்க்க வேணும்
மெத்தப்பகுசி மேனி குளிர பார்க்க வேணும்
கனத்த பகுசி கண்குளிர பார்க்க வேணும்
நிறைய பகுசி இமை குளிர பார்க்க வேணும்

குடகுமலைக் காவேரி குதித்து வருவது போல்

குல மக்களோடு கொஞ்சி மகிழ வேண்டும்

ஸ்ரீரங்கம் காவேரி சேர்ந்து குமிழ் பாய்ந்தது போல்

சீரடியா மக்களோடு சேர்ந்து மகிழ வேண்டும்.

ஸ்ரீரங்கம் காவேரி சேர்ந்து குமிழ் பாய்ந்தது போல்

சித்தடியா மக்களோடு சிரித்து மகிழ வேண்டும்.

கொள்ளிடம் காவேரி கூடிக் குமிழ் பாய்ந்தது போல்

கொம்பணையா மக்களோடு கொஞ்சி மகிழ வேண்டும்

மாயவரம் காவேரி பாய்ந்து வந்தது போல்

மயிலணையா மக்களோடு மகிழ்ந்து வாழ வேண்டும்.

இன்னும் பல்லாண்டு பல்லாண்டு பல கோடி நூறாண்டு நோய் நொடியின்றி

வாழ வேண்டும் என்று வலையமாநகர் மக்கள் வாழ்த்துகின்றோம்.





# மலையாண்டி கோயில் வரலாறு

வலம்புரி லேனா

பண்டைக் காலத்தில் சித்தர்கள் நாடு வளம் கொழிக்க நாலாறு திசைகளிலும் பவனி வந்துள்ளனர். வலையபட்டி என்னும் வலையகிரியில் சித்தர்கள் தேச சஞ்சாரம் செய்திருக்கின்றனர். அவ்வாறு தேச சஞ்சாரம் செய்த சித்தர்களில் ஒருவர் மலையாண்டி என்னும் சித்தர்.

மலையின் மீது விநாயகர் சிலை வைத்து வழிபட்டு, அங்கேயே தங்கி தொண்டு செய்து வந்துள்ளார். சிறு கூரைக் கூடம் அமைத்து வழிபாடு நடைபெற்று வந்துள்ளது. ஐங்காரமூர்த்தியாக விளங்கிய கஜமுக சதுர்புஜ அங்குச விநாயகருக்கு மலையாண்டி சித்தர் தினமும் ஊருக்குள் அன்னக்காவடி எடுத்து கிடைத்த தானியங்களைப் பொங்கிப் படைத்து பக்தர்களுக்கு விநியோகம் செய்தார்.

பின்னொரு நாளில் அந்த மலையாண்டி சித்தர் விநாயகர் ஒளியுடன் சிவபதமாய் ஐக்கியம் மேற்கொண்டு விட்டார். பக்த மஹாஜனங்கள் ஜீவமுக்தியடைந்த அவரை வலையகிரிமலை மீதுள்ள சுனைக்கு வடபுறத்தில் ஜீவசமாதி ஆக்கி அதிர்ஷ்டானம் செய்தனர். அன்று முதல் விநாயகரை மலையாண்டி விநாயகர் எனப் பெயர் சூட்டி அவர் வைத்திருந்த தண்டம், வேல் வைத்து பூஜை செய்து வழிபட்டனர்.

நகரத்தார் பெருமக்கள் கல் திருப்பணி மூலம் விநாயகருக்கு ஆலயம் எழுப்ப எண்ணினர். நகரக் கூட்டத்தை கூட்டினர். கூரைக் கூடத்திலிருந்த விநாயகப் பெருமானுக்கு கற்றளி அமைப்பது எனவும், வீட்டுக்கொருவர் நாள் தவறாது திருப்பணி வேலைக்கு வரவேண்டுமெனவும் தீர்மானம் இயற்றப் பெற்றது.



கோயில் கட்டுவதற்குரிய கற்கள் வந்தன. நகரம் கூடிற்று. தினம், தினம் காலை முதல் மாலை வரை கற்றூண்களையும், கோயில் அமைப்பதற்குரிய கற்களையும், வடக்கயிறுகளால் பிணைத்துக் கட்டி, நகரத்தார்களே குன்றின் உச்சிக்குக் கல் இழுத்துக் கோயில் கட்டினர்.

இத்திருப்பணியின் சிறப்பு ஊரெங்கும் பரவிற்று. வெள்ளையர் ஏகாதி பத்தியத்தின் கீழ் வரையறுக்கப்பட்ட "சுயராஜ்யமாக", புதுக்கோட்டை சமஸ்தானம் விளங்கியது. புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள வலையபட்டியில் நடைபெறும் திருப்பணிப் பெருமை சமஸ்தானத்தின் செவிகளிலே வீழ்ந்தது. சமஸ்தானத்தின் ஆட்சி உரிமை பெற்ற 'திவானாக,' சேஷய்யா சாஸ்ரிகள் விளங்கினார்கள். அவர்களுக்கு இத்திருப்பணியை நேரில் பார்க்க வேண்டுமென்ற பேராவல் எழுந்தது. திவான் பொன்னமராவதிக்கு வருகை புரிந்தார். வலையபட்டியில் நகரத்தார் தாமே செய்யும் திருப்பணியை நேரில் கண்டார்.

அவர் கேட்டார், "இந்தக் கற்கோயிலில் எந்த தெய்வத்தை வைத்து வழிபடப் போகிறீர்கள்?"

"இதோ இங்கிருக்கின்ற விநாயகரைத் தான்!"

"ஓ! அப்படியா! மிக்க மகிழ்ச்சி! உங்கள் ஊரில் சிவன் கோயில் இருக்கிறதா?"

"இல்லை"

"அப்படியானால் சிவன்கோயிலுக்குச் செல்வதானால் எங்கு செல்ல வேண்டும்?"

"பொன்னமராவதி சிவாலயத்துக்குத்தான்"

ஒரு கணம் சிந்தித்தார், சேஷய்யா சாஸ்திரிகள்.

"உங்கள் ஊருக்கென, இந்த கற்கோயிலையே சிவன் கோயிலாகக் கட்டிக் கொண்டாலென்ன?" நகரத்தாரின் சிந்தனையைத் தூண்டிவிட்டார் சேஷய்யா சாஸ்திரிகள்.

நகரம் கூடிற்று. விநாயகராலயம் சிவாலயமாக உருப்பெற்றது.

இதன் சிறப்பை,

> "வட்டமதி முகத்தார்க்கும் மலையாண்டிக்கும்
> வலம்புரிநா தர்க்கும்வடு வகிர்விழி யாட்கும்
> திட்டமுடன் ஏழுநகர் வணிகர் கூடித்
> திருப்பணி வேலைகள் செய்ய வரியும்போட்டுப்
> பிட்டையுண்டோன் பேரருளால் குமரப்பேந்திரப்
> புண்ணியவான் ஈன்றெடுத்த புள்ளாஞ்செட்டிக்
> கட்டழகன் முயற்சியினால் நகரங் கூடிக்
> கைலாசம்போற் கோயில் கட்டினார்கள்"

என்ற பாட்டால் அறியலாம்.

சிவாலயத்தில் வைக்கச் சிவலிங்கமும், அம்பாளும் வேண்டுமே!. சிலையை எங்கு வாங்குவது! என்று கேட்டபோது ஜாதகப்படி அது தானாகவே ஊருக்கு மேற்கே மூங்கில் புதரில் கிடைக்கும் என்று புதுக்கோட்டை திவான் சேஷய்யா சாஸ்திரி சொல்ல நகரத்தார்கள் தேடும் பணியில் ஈடுபட்டனர். நமது ஊருக்கு அருகில், பிடாரம்பட்டி என்னும் கிராமத்தில் மூங்கிற் புதரில் சிவலிங்கம் இருப்பதாக அறிந்து அந்தச் சிவலிங்கத்தை பல்லக்கில் சுமந்து வந்து மலையில் உள்ள சுனையில் ஜலவாசம் செய்து பிரதிஷ்டை செய்யப்பெற்றது.

புதுக்கோட்டை சமஸ்தான திவான் சேஷய்யா, மலையகிரியில் ஸ்ரீமன் நாராயண மூர்த்தியின் சுதர்சன சக்கரம் வலம்புரிந்து அருள்பாலித்து வருவதால் சிவனுக்கு வலம்புரிநாதர் என்று பெயர் சூட்டினார். அம்பாள் விக்ரஹம் கிடைக்காததால், புதிதாக அம்பாள், 'வடுவகிர் விழியாள்', சிலை செய்யப்பெற்று



பிரதிஷ்டை செய்யப்பெற்றது. மற்றும் பரிவார தெய்வங்களும் செய்யப்பெற்று நந்தன ஆண்டு தைத்திங்கள் 19ஆம் நாள் (ஆங்கில ஆண்டு 1892) திங்கட்கிழமை கும்பாபிஷேகம் நடைபெற்றது.

தற்போது ஏழாவது முறையாக குரோதி ஆண்டு ஆவணித் திங்கள் 23ஆம் நாள் (08.09.2024) ஞாயிற்றுக்கிழமை மஹா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

குறிப்பு : இந்த வரலாறு 1978ஆம் ஆண்டு கும்பாபிஷேக மலரில் எழிலன் திருப்பதி செட்டியார் எழுதியிருந்ததைக் கொண்டும், கோசன்சேது தொகுத்து எழுதிக்கொடுத்திருந்ததை புதுக்கோட்டை சமஸ்தான சரித்திர ஆவணங்களிலிருந்தும் கசாப்புளி சோமசுந்தரம் செட்டியார் சொல்லக் கேட்டு எழுதியதைக் கொடுத்த T. நாச்சம்மை திருப்பதி அவர்களின் குறிப்புக்களில் இருந்தும் ஒருங்கிணைத்து எழுதியவர் வலம்புரி லேனா. ■



கோயில் வரலாற்றினைக் கூறும்
ஓவியங்களை வரைந்தவர்
**L. செந்தில் குமரன்**



# கும்பாபிஷேகத்திற்குப் பின் மூர்த்திகள்



அருள்மிகு மலையாண்டி




அருள்மிகு கன்னிமூல கணபதி



அருள்மிகு தட்சனாமூர்த்தி



அருள்மிகு வள்ளி தேவசேனா சமேத முருகப்பெருமான்



அருள்மிகு சரஸ்வதி



அருள்மிகு கஜலெட்சுமி



அருள்மிகு துர்க்கை



சந்திரன்



அருள்மிகு வரதராஜப் பெருமாள்



சூரியன்



நவகிரகங்கள்

# பின்னப்பட்ட சிலைகள்

இரண்டாவது கும்பாபிஷேகத்தின் போது (30.08.1916) வடுவகிர் விழியாள் அம்பாளின் திருமேனியில் சுண்டு விரல் பழுதடைந்திருப்பதை அறிந்து வேறு புதிய அம்பாள்சிலை செய்து பிரதிஷ்டை செய்யப் பெற்று கும்பாபிஷேகம் நடந்தது.

பழைய அம்பாள் விக்ரகம் கோயிலின் மகா மண்டபத்தில் வைக்கப்பட்டது. புதிய விக்ரகமும் துர்க்கா பார்வையுடன் இருப்பதாகப் பின்னர் அறியப்பட்டதால் தற்போது உள்ள அம்பாள் விக்ரகம் புதிதாகச் செய்து பிரதிஷ்டை செய்யப்பெற்றது.

இரண்டாவது விக்ரகமும் மகா மண்டபத்தில் பின்னப்பட்ட அம்பாள் விக்ரகத்துக்கு அருகில் வைக்கப்பட்டது.

அதேபோன்று வள்ளி தேவசேனா சமேத முருகப் பெருமான் விக்ரகமும் பின்னப்பட்டதன் காரணமாக புதிய விக்ரகம் செய்து நிறுவப்பட்டு, பழைய சிலை அதே மகா மண்டபத்தில் அம்பாள் சிலைகளுக்கு அருகில் வைக்கப்பட்டு மூன்று விக்ரகங்களுக்கும் நித்திய பூஜையும் நடைபெறுகிறது.









# வீடுகளில் கட்டப்படும் தோரணங்களில் உள்ள பண்பாடும் தத்துவங்களும்!

நமது கலாசாரத்தில் உள்ள பல பழக்க வழக்கங்களை ஆராய்ந்து பார்த்தால் அவை, பெரும்பாலும் உடல் நலத்தையும், மன நலத்தையும் மேம்படுத்துவதற்காகவே உருவாக்கப்பட்டிருக்கும். நாம் காலங்காலமாகக் கடைபிடிக்கும் பல்வேறு பழக்கங்களுக்குப் பின்னால் அறிவியல் ரீதியான காரணங்கள் பல இருக்கும்.

அக்காலத்தில் அழைப்பிதழ்கள் அச்சடிக்கப்படுவதில்லை. மங்கல, அமங்கல நிகழ்வுகள் நடப்பதைக் குறிக்க வீட்டு வாசலில் தோரணங்கள் கட்டப்பட்டன. அவை கட்டப்பட்டிருக்கும் முறையை வைத்தே அந்த வீட்டில் என்ன நடக்கிறது எனக் கூறி விடலாம்.

பொதுவாக அலங்காரத்துக்காகக் கட்டப்படும் தோரண இலைகள் காற்றைத் தூய்மைப்படுத்த உதவும். தென்னங் குருத்தோலை கொண்டு செய்யப்படும் தோரணங்கள் குருவிகள் போன்ற வடிவத்தில் கட்டப்படும். மாவிலைகளும் சில நேரங்களில் சேர்க்கப்படும். குருவி இறக்கை கீழ்நோக்கி இருந்தால் மங்கல நிகழ்வு என்றும் அது மேல்நோக்கி இருந்தால் அமங்கல நிகழ்வு என்றும் வகைப்படுத்தப்பட்டது.

தென்னங் குருத்தோலை கொண்டு செய்யப்படும் தோரணங்களில் குருவி இறக்கை கீழ்நோக்கி இருப்பின் அது மங்கலத் தோரணம் என்று கொள்வர்; இது நான்கு அல்லது ஐந்து குருவிகளைக் கொண்டு இருக்கும்.

நம் தென்னாட்டிலும் இலங்கையிலும் இம்முறை கடைப்பிடிக்கப்படுகிறது. நமது நாட்டில் நான்கு அல்லது ஐந்து குருவிகள் கொண்டு விளங்கும்.

இலங்கையில் ஐந்து குருவிகளைக் கொண்டு விளங்கும். அதற்குக் காரணமும் சொல்கிறார்கள். மங்கலத் தோரணமாவது தென்னைமரத்தின் மஞ்சள் குருத்தோலைகளில் ஐந்து தளங்களுடன் இரு முனைகளும் நிலத்தைப் பார்க்குமாறு கட்டப்படவேண்டும். இவை ஐந்து கன்மேந்திரியங்களையும், ஐந்து ஞானேந்திரியங்களையும் குறிக்கும் என்றும், கன்மேந்திரியங்களாலும் ஞானேந்திரியங்களாலும் புவியில் இன்ப துன்ப நிகழ்வுகளை அனுபவித்துக்கொண்டு வாழ்ந்துகொண்டிருந்தாலும் இறைவனை நோக்கியே எமது (ஆன்மாவின்) செயல்பாடுகள் அமைகின்றன என்பதைக் குறிக்கின்றன என்னும் தத்துவ விளக்கத்தைத் தருகிறார்கள். மங்கலத் தோரணங்களிடையே மாவிலைகளையும் இணைப்பர்.

அமங்கலத் தோரணம் மூன்று குருவிகள் இறக்கை மேல்நோக்கி கொண்டிருக்கும். அறம், பொருள், இன்பம் அனுபவித்த ஆன்மா பூவுலகை விட்டு மேலுலக வாழ்வில் வீடு பேற்றை நோக்கி இருவினைகளுடன் சென்றுகொண்டிருக்கிறது என்பதை விளக்குகிறது என்னும் தத்துவ விளக்கத்தைத் தருகிறார்கள்.

மாவிலை கட்டும்போது அதன் காம்பினை முன்பக்கம் எடுத்துக் குத்துதல் வேண்டும். கொத்தாகக் கட்டுதலும் நன்மை தரும். அமங்கல நிகழ்வில் மாவிலை பயன்படுத்தல் கூடாது.



மலையாண்டிசுவாமி கோயில் முன் மண்டபத்தின் மேற்கூரையில் வரையப்பட்டுள்ள சிவலிங்கத் திருமேனி எந்த திசையில் நின்று பார்த்தாலும் நம்மை நோக்கி காட்சிதரும் விதமாக 3D பெயிண்டிங் செய்யப்பட்டுள்ளது.

# தமிழரின் நோயணுகா விதி, ஒழுக்கம்

## உணவும் உடலும்

உணவு என்பதற்கு உள்ளுணர்வினால் அனுபவிக்கபடுவது எதுவோ அதுவே உணவு என உபநிடதங்கள் கூறுகின்றன.

நம் உடலானது பஞ்சபூதங்களின் கூட்டுறவால் 7 உடற்தாதுக்களான சாரம், செந்நீர், ஊண், கொழுப்பு, என்பு, மூளை, சுக்கிலம் / நாதம் இவைகளால் ஆக்கப்பெற்றதாகும். ஏழு உடல் தாதுக்களில் ஏற்படும் நோய்கள் மூன்று உயிர்த் தாதுக்களில் மாறுபாட்டை ஏற்படுத்தி குற்றங்களாக மாறி வாதம், பித்தம், கபம் ஆகிய நாடிகளின் வாயிலாக பிரதிபலிக்கும். இவ்வாறாக உடலில் உள்ள ஏழு உடற்தாதுக்களையும் மூன்று உயிர்த் தாதுக்களையும் போசித்து வளர்ப்பது உணவேயாகும்.

மனிதனுக்கு முக்கியமானதும் முதன்மையானதும் உணவு தான். எந்த ஒரு அசைவிற்கும் (Movement) செயலுக்கும் (Actions) உடலுக்கு சக்தி தேவைப்படுகிறது. அச்சக்தி உணவின் மூலமே கிடைக்கிறது.

தமிழர் மருத்துவத்தில் நமது நா அறியக்கூடிய உணவின் சுவைகளை ஆறு வகையாகப் பிரிக்கின்றனர். (அறுசுவை உணவு) அவை; இனிப்பு, புளிப்பு, உப்பு, கசப்பு, கார்ப்பு, துவர்ப்பு.

உடலானது ரத்தம், தசை, கொழுப்பு, எலும்பு, நரம்பு, உமிழ்நீர், மூளை என ஏழு முக்கிய தாதுக்கள் கொண்டதாலே உடலை யாக்கை எனக் கூறினர். இதில் ஏழாவது தாதுவான மூளை சரிவர இயங்க முதல் ஆறு தாதுக்கள் தகுந்த அளவில் இருத்தல் அவசியம். இவ் ஆறு தாதுக்களும் ஆறு சுவைகளுடன் சம்பந்தமுடையது.

இனிப்பு – தசையை வளர்க்கிறது

புளிப்பு – கொழுப்பினை வழங்குகிறது

உப்பு – உமிழ்நீரை சுரக்கச் செய்கிறது

துவர்ப்பு – இரத்தத்தைப் பெருக்குகிறது

கார்ப்பு – எலும்புகளை வளர்க்கிறது

கசப்பு – நரம்புகளைப் பலப்படுத்துகிறது.

உணவிலிருந்து கிடைக்கும் சக்தியானது மாவுப்பொருட்கள் (Corbohydrate) புரதப்பொருட்கள் (Protein) நார்ச்சத்து, கொழுப்பு (Fat) 3:2:1 என்ற அளவில் தேவைப்படுகிறது.

மாவுப்பொருட்கள் : உடலுக்கு சக்தியை அளிக்கிறது.

புரதப்பொருட்கள் : உடல் தசைகள், திசுக்கள், இரத்தம் போன்றவற்றிற்கு தேவைப்படுவதால் இதை கட்டுமான உணவு எனப்படும்.

கொழுப்புப் பொருட்கள் : மாவுப்பொருட்களின் பற்றாக்குறையின் போது கொழுப்பில் இருந்து சக்தி பெறப்படுகிறது.

இதுவன்றி வைட்டமின்கள் (Vitamins) தாது உப்புகளும் (Mineral Salsts) அமினோ அமிலங்கள் (Amino Acids) மனித உயிருக்கு இன்றியமையாதவையாகும்.

காரம், அமிலம் ஆகிய இருவித உணவுகளும் உடல் வளர்ச்சிக்கு அவசியம். உப்பு (அ) கார உணவு 80%மும் அமில உணவு 20% தேவை.

இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு ஆகிய சுவைகளைக் கொண்ட உணவு அமில உணவாகும்.

உப்பு, காரம், கசப்பு ஆகிய சுவையுடையது கார உணவுகளாகும்.

அமில உணவுகள் உடலுக்கு அதிக நச்சுத் தன்மையும், கெடுதலையும் ஏற்படுத்தும்.

கார உணவுகள் அதிக நன்மை பயக்கும். இது மின்கடத்தி உணவாகும்.

## பௌர்ணமி கிரிவலம்

பிரதி மாதம் பௌர்ணமி தினத்தில் அம்மனுக்கு சந்தனக்காப்பும், கிரிவலம் வரும் பக்தர்களுக்கு இரவு உணவும் வழங்கப்படுகிறது.









# திருத்தல மரங்களும் (தல விருட்சம்) திருநெறிய நகரத்தாரும்



**மு.சுப. கருப்பையா**
ஆசிரியர், அப்பச்சி பேசுகிறேன் இதழ்

நற்குடி மக்களைத் தேடி தனது நாட்டிலிருந்து சோழநாடு சென்ற பாண்டிய மன்னன் 1500 தேர்கள் செய்து அவற்றில் நற்றமிழ் பேசும் நகரத்தார் பெருமக்களை அனைத்து மரியாதைகளோடும் அழைத்து வந்ததாக வரலாறு கூறுகின்றது. தெற்கே திருமங்கலம், மேற்கில் உலகம்பட்டி, வடக்கே பிரான்மலை, கிழக்கில் வெள்ளாறு. இதற்குட்பட்ட 96 ஊர்களில் அவர்கள் குடியேறிய பகுதிகள் அனைத்திலும் வெறும் காடுகளே மண்டிக்கிடந்தன. எனவே தான், அறம்பாடும் பாட்டரசர் – அருளாளர் – பாடுவார் முத்தப்பச் செட்டியாரவர்கள் இலக்குமி நம்மிடமே என்றென்றும் தங்கியிருக்க வேணும் என்று பாடும்போது தொடக்கதிலேயே ''காடு வெட்டிப்போட்டுக் கழய நிலம் திருத்தி'' என்று தொடங்குவார்.

காடழித்து நாடாக்கிய பின் நகருக்கொரு கோவில் வேண்டாமா?. "கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று கூறுகின்றார்களே எனச் சிந்தித்து பாண்டிய மன்னன் ஆதரவோடு ஆங்காங்கே உள்ள ஊர்களில் நகரச் சிவன் கோவில்களைக் கட்டினார்கள்.

பாண்டி மண்டலத்தின் தலைநகராகிய மதுரையம்பதியில் என்றென்றும் நின்று நிலவிப் பேரருள் வழங்கும் அன்னை மீனாட்சி உடன் வளர் சுந்தரேசுவரர்

பெயரே உங்களது செட்டிநாட்டு நகரச் சிவன் கோவில்களிலும் வைக்க வேணுமென்று மன்னன் வேண்டுகோள் விடுத்தான். அதனால்தான் நமது செட்டிநாட்டின் நகரச் சிவன் கோவில்கள் அனைத்திலும் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் என்ற பெயரே நிலை பெற்றுள்ளது.

நாம் ஏற்கனவே கூறியவாறு நகரத்தார் பெருமக்கள் ஒட்டுமொத்தமாக சோழ நாட்டிலிருந்து இங்கே வந்து சேர்ந்த இடம் **"ஓங்காரக்குடி"** என்று சொல்லப்படுகின்றது. இந்த **"ஓங்காரக்குடி"** இன்றைய பிள்ளையார்பட்டியா அன்றி காரைக்குடியா என்பதில் வரலாற்று ஆய்வர்களிடையே கருத்து வேறுபாடுள்ளது.

இந்த ஓங்காரக்குடியிலிருந்து ஏழூர் நகரத்தார் என்றழைக்கப்படும் இவர்கள் இளையாற்றங்குடியில் தங்கி பின்னர் ஒன்பது ஊர்களில் பரவி ஆங்காங்கே தங்களுக்குள் நகரக் கோவில்களைக் கட்டிக் கொண்டனர். ஊருணிகளும் அமைத்துக்கொண்டனர். அந்தந்தக் கோவில்களில் உள்ள இறைவன் இறைவியர்க்கு வெவ்வேறு பெயர்களைச் சூட்டி மகிழ்ந்தனர். எடுத்துக்காட்டாக முதன்முதலில் உள்ள நகரக் கோவிலாகிய இளையாற்றங்குடியில் உள்ள மூலவருக்கு அருள்மிகு கைலாசநாதர். அம்மன் அருள்மிகு நித்தியகல்யாணி.

நகரச் சிவன் கோயில்கள் என்பது வேறு. ஒன்பது நகரக் கோவில்கள் என்பது வேறு. இதையெல்லாம் இப்போது இங்கே கூறுவதற்குக் காரணம் எந்தக் கோவிலாக இருந்தாலும் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல காடாக இருந்ததைத் திருத்தி – அதாவது மரங்களை வெட்டி சுத்தம் செய்துதான் கோவில்களைக் கட்ட ஆரம்பித்தனர். அப்பகுதியில் மிகுதியாக – பெரிய மரமாக இருந்த ஒன்றை மட்டும் வெட்டாமல் கோயிலுக்குள்ளேயே இருக்குமாறு வைத்துக் கட்டினர். அதற்கு முக்கியத்துவம் கொடுத்து மரியாதைகள் செய்யப்பட்டது. இன்றும் கூட சிலர் வீடு கட்டத் தொடங்கும் போது ஏற்கனவே அங்கே மரங்கள் இருந்தால் அதனை விட்டுவிட்டு சுற்றுச்சுவர் வைத்துக் கட்டுவதைப் பார்க்கலாம்.

இங்ஙனம் திருக்கோயில்களில் தொன்றுதொட்டு இருந்து வந்த மரங்கள் தான் இன்றுவரை தல விருட்சங்களாகப் போற்றி வணங்கப்பட்டு வருகின்றன. இயற்கையாகவே உள்ள மரங்கள் ஒரு காலக்கட்டத்தில் பட்டுப்போய் இருக்கக் கூடும். எனவே கற்சிலைகளை வடித்து திருக்கோயில் தெய்வங்களுக்கு ஒப்பாக எண்ணெய் தடவி வழிபாட்டுக்கு உகந்ததாக வைத்து போற்றப்படுகின்றது. எடுத்துக்காட்டாகப் பிள்ளையார்பட்டிக் கோவிலில் உள்ள தல விருட்சம் மருதமரம் ஆகும். இதே போன்று செட்டிநாட்டின் நகரச் சிவன் கோவில்களிலும் நகரத்தாரின் ஒன்பது கோவில்களிலும் தனித்தனியே தல விருட்சங்கள் உள்ளன.

பொதுவாகவே மரங்கள் அனைத்தும் தெய்வத்திற்கு இணையானவை. சுற்றுப்புறச் சூழலைத் தூய்மையாக வைப்பதில் பெரும்பங்காற்றி வருகின்றன. நாற்பத்து நான்கு வகையான "பாவங்களைப்" பட்டியலிட்டுக் காட்டுகின்ற வள்ளல் பெருமான் இராமலிங்க அடிகளார் அவர்கள் "நிழல் தரும் மரத்தை வெட்டினேனா?" என்று பதறியபடி கேட்கின்றார்கள். மரங்கள் மற்றும் தாவரங்கள் அனைத்தும் கெட்ட காற்றை (கரியமில வாயு) உட்கொண்டு தூய்மையான – நல்ல காற்றை (ஆக்ஸிஜன்) வெளிவிடுகின்றன. இவற்றின் அருமை கருதியே பேரரசர் அசோகன் காலந்தொட்டு மன்னர்கள் அனைவரும் நெடுவழிப் பாதைகளின் இருமருங்கிலும் மரங்களை வைத்து வளர்த்து வந்தனர். அதுவும் மக்களுக்கு உபயோகப்படக் கூடிய புளி, மா, நாவல் மரங்களை வைத்தனர்.

நமது நகரக்கோவில்களில் ஒன்றாகிய வைரவன் பட்டியில் வடக்கே உள்ள வெளிதிருச்சுற்றில் "ஏறமுஞ்சி" என்ற ஓர் மரம் இன்றும் உள்ளது. இதிலிருந்து விழுகக் கூடிய விதைகள் திரும்பவும் சென்று அந்த மரத்திலேயே ஒட்டிக் கொள்ளக்கூடிய அதிசயத்தை இப்போதும் காணலாம். இறைவனால் படைக்கப்பெற்ற உயிரினங்கள் அனைத்தும் திரும்பவும் அவனது திருவடி நிழலைச் சென்றடைகின்றன என்ற தத்துவத்தை உணர்த்துவதாகவே இது அமைந்துள்ளது.

அது மட்டுமல்லாமல் 27 நாள் மீன் (நட்சத்திரம்)களுக்கும் உரிய 27 மரங்களையும் இங்கே வளர்த்து வருகின்றார்கள். (எடுத்துக்காட்டாகச் சில)

அசுவினி – எட்டிமரம்
பரணி – நெல்லி மரம்
கார்த்திகை – அத்தி மரம்
ரோகிணி – நாவல் மரம்
மிருகசீரிடம் – கருங்காலி
திருவாதிரை – செங்கருவை
புனர்பூசம் – மூங்கில்
பூசம் – அரசமரம்

செந்தமிழ்ச் சிறப்பும் சீர்மிகு பண்பாடும் மாண்புடை மரபும் கொண்டிலங்கிய நம் நகரத்தார் பெருமக்கள் தொலைநோக்குச் சிந்தனையோடு திருக்கோவில்களில் மரங்களுக்கும் மரியாதை செய்து "தல விருட்சங்களை" அமைத்துள்ளனர்.

**மரம் வளர்ப்போம்! தலங்களில் மட்டுமல்ல வீடுகளிலும்!!**

# எண்ணங்களே வாழ்வு



**சி. நாகப்பன் M.B.A.,**
மேலைச்சிவபுரி
சன்மார்க்க சபை

எண்ணங்கள் அழகானால்
சிந்தனைகள் அழகாகும்
சிந்தனைகள் அழகானால்
வார்த்தைகள் அழகாகும்
வார்த்தைகள் அழகானால்
வாழ்க்கையே அழகாகும்.

ஆதலால் நம்முடைய எண்ணங்கள் நல்லதாகவும், சிறந்ததாகவும், சிந்தனையுடையதாகவும் இருக்க வேண்டும். எண்ணங்கள் தான் வாழ்க்கை. நாம் என்ன எண்ணுகின்றோமோ அதன்படியே எல்லாம் அமையும். அதனால் தான் பாரதி கூட.

எண்ணிய முடிதல் வேண்டும்,
நல்லதே எண்ண வேண்டும்

என்கின்றார்.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின் — என்பது வள்ளுவர் வாக்கு.

ஜப்பானியர்களின் முன்னேற்றத்திற்குக் காரணம் அவர்களின் 'கெய் சென் தத்துவம்' கெய்சென் என்பதற்கு ஜப்பானிய மொழியில் மேம்பாடு அல்லது தொடர் மேம்பாடு என்று பொருள். அது 'கேய்' மற்றும் 'சென்' என்ற இரண்டு ஜப்பானிய வார்த்தைகளிலிருந்து வருகிறது. நன்மைக்கான மாற்றம் என்ற பொருளைத் தருகிறது.

1. ஒரு செயலை இப்படித்தான் செய்ய வேண்டும் என்ற நிலையான எண்ணத்தை விட்டுவிடுங்கள்.
2. குறை கூறாதீர்கள். மற்றவர்கள் உங்களை எப்படி நடத்த வேண்டும் என்று விரும்புகிறீர்களோ அப்படி மற்றவர்களை நடத்துங்கள்.
3. நல்லதையே நினைக்கவும். செய்ய முடியாது என்பதைத் தவிருங்கள்.

கெய் சென் தத்துவத்தின் ஒரு சில உதாரணங்களே இவை.

சிறந்த துணை என்பது உடனிருப்பதோ, உணவளிப்பதோ, உடையளிப்பதோ கிடையாது. எண்ணங்களுக்கும், உணர்வுகளுக்கும் மதிப்பளிப்பதாகும்.

உயர்ந்த எண்ணம் உள்ளோருடன் நட்பு கொண்டோர்க்கு ஒரு நாளும் தனிமையில்லை. எண்ணங்கள் நன்றாக இருந்தால் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் நன்றாக அமையும்.

நீங்கள் எப்படி இருந்தாலும், எப்படி வாழ்ந்தாலும் உங்கள் எண்ணங்கள் உயர்வாக இருந்தால் போதும். ஒரு நாள் உங்கள் எண்ணமே உங்கள் உயர்வுக்கு காரணமாக அமையும்.

**மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்**
**எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவில்லை**

என்பது திருஞானசம்பந்தர் பாடல். ஆதலால் எண்ணங்கள் சிறப்பாக இருந்தால் எந்தக் குறைவுமில்லை. எண்ணங்கள் உயர்வாய் இருக்கட்டும். மலைபோல் உயர்ந்து நிற்பீர்கள். எண்ணங்கள் அழகாய் இருக்கட்டும். ஆழ்கடல் போல் அமைதியாய் இருப்பீர்கள். எண்ணங்கள் வலிமையானதாய் இருக்கட்டும், செயல்களில் வெற்றியடைவீர்கள்.

**வெள்ளத்தனைய மலர் நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத் தனையது உயர்வு**

என்கிறார் வள்ளுவர். ஆதலால் நாம் நமது உள்ளத்திலே உயர்வான எண்ணங்களைக் கொண்டு வாழ்ந்தால், நமது வாழ்வு நிச்சயமாக உயர்வான நிலையினை அடையலாம்.

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**
**தீதும் நன்றும் பிறர் தர வாரா**

என்பது கணியன் பூங்குன்றனாரின் பாடல். நமக்கு ஏற்படக் கூடிய நன்மையும், கெடுதலும் பிறரால் உண்டாகாது என்பது தான் அவரது கூற்று. ஆதலால் நாமும் நல்லதையே எண்ணி, நல்லதே நடக்கும் என நமது வாழ்வை முன்னேற்றப் பாதையில் அமைத்துக்கொள்வோம்.

எண்ணத்தில் கவனமாய் இருங்கள். ஏனெனில் எண்ணங்கள் தான் சொற்களாகின்றன. சொல்லில் கவனமாய் இருங்கள். ஏனெனில் சொற்கள் தான் செயல்களாகின்றன. செயலில் கவனமாய் இருங்கள். ஏனெனில்

செயல்கள் தான் பழக்கங்களாகின்றன. பழக்கத்தில் கவனமாய் இருங்கள். ஏனெனில் பழக்கங்கள் தான் ஒழுக்கங்களாகின்றன. ஒழுக்கத்தில் கவனமாய் இருங்கள். ஏனெனில் ஒழுக்கங்கள் தான் உங்கள் வாழ்வாகிறது.

**"சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக"** என்பது தான் எமது சன்மார்க்க சபையின் உயரிய நோக்கம், கொள்கையாகும். நமது நகரத்தார்கள் சைவத்தை மிகுந்து கடைப்பிடித்து, தமிழையும் கல்வியையும் மேலோங்கச் செய்திடல் வேண்டும்.

**"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவர்க்கு மாடல்ல மற்றையவை"** – திருவள்ளுவர். அழியாத சிறந்த செல்வம் கல்வியே. பிற பொருள் செல்வம் அல்ல.

**நல்லாவின் பால் முழுதும் கன்றுக்கில்லை**
**நறும்பூவின் மணம் முழுதும் சோலைக்கில்லை**
**நெல்லாகும் கதிர் முழுதும் நிலத்துக்கில்லை**
**நிறைகின்ற நீர் முழுதும் குளத்துக்கில்லை**
**பல்லாரும் கனி முழுதும் மரத்துக்கில்லை**
**பண்ணரம்பின் இசை முழுதும் யாழுக்கில்லை**
**எல்லாமே பிறர்க்குழைக்க காணுகின்றேன்**
**என்வாழ்வும் பிறர்க்குழைக்க வேண்டும், வேண்டும்**

– வ.சுப.மா.

இயற்கை அன்னையின் நியதிப்படி நீர், நிலம், மலர், மரம், செடி, கொடி என அனைத்துமே பிறருக்கு உதவும் வகையில்தான் தோற்றம் பெற்றுள்ளன.

**படமாடக் கோயில் பகவருக்கு ஒன்று ஈயில்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஆகா**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில்**
**படமாடக் கோயில் பகவர்க்கும் ஆகுமே**

– திருமூலர்

ஆதலால் நாமும் நமது வாழ்வில் சிறந்த கல்வி கற்று, உயர்வான எண்ணங்களுடன், மனிதநேயத்துடன் மற்றவர்களுக்கு நம்மால் இயன்ற உதவிகளைச் செய்து நல்ல உறவுகளுடன், உன்னதமான வாழ்வை அமைத்துக்கொள்வோம்.

# வளம்கொழிக்கும் வலம்புரி



**அ. சாமிநாதன்**
கல்லூரிக் குழுத் தலைவர்
கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி

வளம் கொழிக்கும் வலம்புரி மாநகரில்
நலம் செழிக்க நல்லதொரு ஆலயமாம்
குலம் தழைக்க குன்றமர்ந்த தெய்வங்கட்கு
உளம் நிறைகிற உன்னதமாய்க் குடமுழுக்கு

சிவனிருக்கும் ஆலயத்தில் திருமாலும் சேர்ந்திருக்க
பவனிவரும் தெய்வங்கட்கு பலமான சக்தியுண்டு
அவனிதனில் அண்ணன் கணபதியும் குன்றமர
ஆவணியில் காண்பதுவும் அழகான குடமுழுக்கு

வடுவகிர் விழியாள் உடனாய வலம்புரி நாதருக்கு
எடுக்கின்ற குடமுழுக்கு எண்ணிக்கையில் ஏழாகும்
கொடுக்கின்ற திருமாலுக்கு குதூகலமாய்க் குடமுழுக்கு
அடுத்திருக்கும் ஐயப்பனுக்கும் ஆனந்தமாய்க் குடமுழுக்கு

நூற்றோடு முப்பதும் இரண்டுமாகக் கூட்டி
காற்றுப்போய் காலங்கள் விரைந்து கடந்தாலும்
மாற்றுக் குறையாது மரபும் மீறாது
ஆற்றுப் படுத்துகின்றார் அழகான குடமுழுக்கு

மலையமரும் தெய்வமென்றால் மாறாது குமரனென்பார்
மலையாண்டித் தெய்வமது மாற்றாக விநாயகராம்
அலைபாயும் கடலோரம் அவன் செய்வான் சூரன்வதம்
வலையப்பட்டி ஊர்தனிலும் அவன்வதம் நடப்பதுண்டு

திருவண்ணாமலை மலையதனில் ஏற்றுகின்ற தீபம்போலும்
பெருநகராம் வலம்புரியில் ஏற்றுகின்றோம் பெருந்தீபம்
திருவாசக முற்றோதலும் திறம்படவே நடத்துகின்றோம்
திருமணங்கள் கைகூட சுயம்வரமும் கூட்டுகின்றோம்

தொலைக் காட்சிக் குழுவினரின் நாட்டியமும் இசையும்
கலைநிகழ்ச்சிகளும் கண்ணுக்கும் காதுக்கும் விருந்தாகும்
மலையாண்டி கோவிலுக்கு மகுடம் சூட்டுகின்றோம்
வலையபட்டி நகரத்தார் வரலாறு படைக்கின்றோம்

தெய்வங்களின் துணையுடனே தெளிவான மனதுடன்
மெய்யகத்து உணர்வுகளும் மேலோங்கி நின்றுவர
செய்கின்ற குடமுழுக்கால் செய்தொழிலும் பெருகிவர
வையகம் உள்ளவரை வலம்புரியும் வளர்ந்திடுக!

# வலையபட்டி நினைவலைகள்

**சிவ. செல்வராஜன்**

வலையபட்டி நகரத்தார்கள் எல்லோருக்கும் என் வணக்கம். வலையபட்டி ஓர் செழித்த நிலம். இந்த பூமி எங்கும் நல்ல வளம்! இங்கே விதைத்த விதைகள் முளைத்து, வளர்ந்து, செழித்து இருப்பதோ ஏராளம்! ஏராளம்! அதை சேகரிக்கப் பாடுகின்றேன் கேளீரோ! ஆதரிக்க எல்லோரும் வாரீரோ!

**வலையபட்டி கடலின் நினைவலைகள் இதோ**

வலையபட்டியில் ஓர் திருவண்ணாமலை அது திருக்கார்த்திகை தீபத் திருநாள்!

வலையபட்டியில் ஓர் திருச்செந்தூர் அது சூரசம்ஹாரத் திருவிழா!

வலையபட்டியில் ஓர் தென்பழநி அது பங்குனி உத்திரக் காவடித் திருவிழா!

வலையபட்டியில் ஓர் திருத்தணி! அது தைப்பூசத் தீர்த்தத் திருவிழா!

இங்கே நடைபெறும் திருவிழா! அது ஆன்மீகப் பெருவிழா!

வலைபட்டியில் ஓர் காஞ்சிபுரம். அது பட்டுக் கண்டாங்கி நாகப்பர் அடையாளம்!

வலையபட்டியில் ஓர் திருப்புவனம்!. அது பட்டுக் கண்டாங்கி அருணாசலத்தார் அடையாளம்!

ஆச்சிகள் ஆசை ஆசையாய் கண்டாங்கி வாங்கிக் கொண்டாடிய கல்யாணம் கணக்கில்லை.

வலையபட்டியில் சைவர் பள்ளியில் சரஸ்வதி! இப்படிச் சொல்வதில் மிகையில்லை. இப்பள்ளி திருக்குறள், திருவாசகம் வளர்த்த தமிழ்ச் சங்கம்! சைவர் ஐயாவின் மனக் கணக்கு வகுப்பும், காலையில் ஐயா பாடமும், நவராத்திரி ஊர்சுற்றிப் பாடலும் பிள்ளைகள் நவராத்திரி நாட்களில் வீட்டுக்கு வீடு சென்று சிவபுராணம் போன்ற தெய்வீகப் பாடல்களைப் பாடி கொண்டாடிய நவராத்திரி விழாவின் சிறப்பை சொல்லத்தான் வார்த்தை ஏது. சைவர் பள்ளியின் பெயர் பழநியப்பா கல்லூரி. பழநியப்பா செட்டியார் குடும்பத்தாருக்கு நன்றிகள் பல.

வலையபட்டி வடுகனாதன் செட்டியார் குடும்பத்தார்கள் ஊர் பெயரை முன் வைத்து வலம்புரி வடுகனாதன் உயர்நிலைப் பள்ளியைத் தந்தார்கள். புதுக்கோட்டை மாவட்டத்தில் மிகச் சிறந்த பள்ளி இது! இங்கே படித்த பல்லாயிரம் மாணவர்களில் நானும் ஒருவன். அங்கே கற்றுத் தந்த ஆசிரியர்களின் பெருமை சொல்ல, தனியே ஒரு விழா கொண்டாடவேண்டும். தலைமை ஆசிரியர் ஸ்ரீநிவாசன், ரைட்டர் வைத்தினாத ஐயர், கணித ஆசிரியர் முத்து சந்தானம், தமிழ் வளர்த்த நல்லப்ப ரெட்டியார், விஞ்ஞான ஆசிரியர் நாராயணன் மிகச் சிறந்த ஆசிரியர்கள்!

பாடத்தை கதையாய் எழுதி வகுப்பில் நடித்துக் காட்டிய சிவாஜிகணேசன் கணபதி ஆசிரியர். இவர்களை எல்லாம் மறக்கவே முடியாது. நினைத்தாலே இனிக்கும் நினைவுகள்.!

இந்த நாளில் ஹோட்டல் சரவணபவன் அறுசுவை, இன்சுவை உணவகம். அதை அந்த நாளில் இங்கே உடுப்பி ஹோட்டலில் நாங்கள் கண்டதுண்டு. உடுப்பி ஹோட்டல் காபி, ரவாதோசை, வெள்ளை அப்பம் ருசியோ ருசி! அதை இன்று நினைத்தாலும் பசி!

இந்த நாளில் அப்பல்லோ ஹாஸ்பிடல் பிரபலம். அந்த நாளில் இங்கே மங்களம் பிள்ளை ஹாஸ்பிடல் பேரோ வலையபட்டியில் வந்தது நகர்வலம். கை தேர்ந்த வைத்தியம்! மகராசன் காசுபணம் ரொம்ப வாங்க மாட்டாரு. கைராசி அப்படி ராசி. இது எங்கப்பத்தா சொல்ல கேட்டதுண்டு.

வலையபட்டி பாப்பாயி ஆச்சி ஹாஸ்பிடல் டாக்டர் தேவகி. மகப்பேறு மருத்துவத்தில் தாயுமான ஜானகி! அந்த டாக்டரின் மிகச் சிறந்த சேவைக்கு 60 ஆண்டு ஆனாலும் மறக்காமல் நன்றி சொல்வோம். இந்த ஹாஸ்பிடல் கட்டித் தந்த காசி அய்யா குடும்பத்தாருக்கும் நன்றி சொல்வோம்.

செட்டிநாட்டில் எத்தனையோ ஊரிருக்க வசதி படைத்தவர்கள் எத்தனையோ பேரிருக்க கும்பாபிஷேகம் செய்ய சுப்புசுந்தரம் செட்டியாரை தேர்வு செய்தார் காசிநகர் ஈசனே!

வலையபட்டிக்கு ஈசன் வரம் தந்த காட்சி!
அதற்கு காசி விஸ்வநாதர் விசாலாட்சியை சாட்சி.
நமக்கெல்லாம் வரம் தரும் விஸ்வநாதரை
நாளும் போற்றுவோம்!

புதுக்கோட்டையில் கவியரசு கண்ணதாசன் ஆரம்ப நாளில், நண்பரென மாலை போட்டார் வலம்புரி சோமனாதன் தோளில்! இருவரும் கலைத்துறையில் இணைந்தார்கள், நடந்தார்கள், வாழ்ந்தார்கள்! சிறுகூடல்பட்டிக்கும் வலையபட்டிக்கும் நெருக்கமுண்டு. இப்படிச் சொல்வதில் அர்த்தமுண்டு!

மங்கல இசைக்கெனப் பிறந்த மகன். வலையபட்டி பேரை உலகறியச் செய்த மகன். வலையபட்டி தவில் சுப்பிரமணியம். தவிலோடு இசைத்த நாதஸ்வரம், வயலின்! கலைவாணி இவ்வூருக்கு அள்ளித் தந்த வரம்!

வலம்புரித் தும்பிக்கை விநாயகர் மலைமேல் ஆட்சி! ஸ்ரீ மலையாண்டி சுவாமி பேருடையார். வள்ளி தெய்வானை முருகன் தான் மலையெங்கும் ஆட்சி. இங்கே அண்ணன், தம்பி இருவரின் ராஜாங்கம் நடக்குது. அதனால் இவ்வூரில் தினம் தினம் நன்மையே நடக்குது.

மலை மேலே அழகான சுனை உண்டு. அது சுவாமிக்கு அபிஷேக தீர்த்தம். நித்தம் அருள் மழை பொழியும் அமுதசுரபி. மலைக் கோயிலில் சிவனும் அம்பிகையும் அவதாரம்.

திருமாலும் திருமகளும் அலங்கரிக்கும் கோயிலும் இங்கே உண்டு. ஏழுமலையானே மலைமேல் வந்திருப்பதாக ஓர் நினைப்பு. திருக்கோயில் கதவுகள் திறந்தாலென்னா? திருமகளை உன் கண்கள் மலர்ந்தாலென்ன? என்றே பாடத் தோன்றும் அழகு! இக்கோயில் தந்த செந்தில்நாதன் செட்டியார் குடும்பத்தாருக்கு நன்றி சொல்வோம்.

அழகுநாச்சி அம்மன், சங்கரன் குண்டு பிள்ளையார், அடைக்கலம் காத்தார் ஐயனார், கைலாசநாதர் இந்த நால்வரும் வலையபட்டி நான்கு எல்லைக்கும் காவல் தெய்வங்கள்.

ஸ்ரீ மலையாண்டி சுவாமி பாடல் 1970ல் நான் எழுதி வைத்த பாடல். இந்தப் பாடல் இப்போது கும்பாபிஷேக விழாவில் இனிய இசையுடன், இனிய குரலுடன் ஒலிக்கிறது. கேட்டு மகிழுங்கள்!

எல்லாரும் எல்லாமும் பெறவேண்டும் இங்கே
இல்லாரும் இல்லாத நிலை வேண்டும்
நாங்கள் வளமுடன் வாழ்கின்ற வரம் வேண்டும்
மலையாண்டி நீ வழியெங்கும் துணையாக வரவேண்டும்

நினைக்க நினைக்க எத்தனை இனிமை!
மறக்கத் தான் முடியுமா வலையபட்டி மகிமை!
இன்றும் நிறையவே சிந்திப்போம், எல்லோரும்
கும்பாபிஷேக விழாவில் சந்திப்போம்!

எங்கள் தெய்வமே மலையாண்டி சுவாமியே
எல்லார்க்கும் வரம் அருள்கவே வணங்குகின்றேன்.





# சூரன் திருவிழா என்ற கந்தர் சஷ்டி விழா

வெ.ராம.சிவ. முருகப்பன்
THE HINDU (Rtd.,)

காசியப முனிவருக்கும் மாயைக்கும் சூரபதுமன், சிங்கமுகன், தாரகன் என்ற மூன்று மகன்கள் பிறந்தனர். அவரகள் தங்கள் தாய் மாயையின் ஆணையை ஏற்று சிவபெருமானை நோக்கி பல வருடம் கடும்தவம் புரிந்தனர். இறுதியில் சிவபெருமான் தோன்றி அவர்கள் கேட்ட அழிவில்லா ஆயுள், யாராலும் வெல்ல முடியாத வெற்றி மற்றும் அதிகாரம், பெரும் செல்வம், பலவிதமான ஆயுதங்கள் ஆகியவற்றை வரமளித்தார்.

வரம் பெற்ற சூரபதுமன் ஆணவத்துடன் மூவுலகையும் அடக்கி ஆண்டான், தேவர்களை ஓடவிட்டான். அவனது அகங்காரம் அளவுக்கு அதிகமாகி உயிர்கள் அனைத்தையும் வதைக்க சூரனை அழிக்கும்படி தேவர்கள் முருகப் பெருமானை வேண்டினர். முருகப்பெருமான் அன்னை பராசக்தியிடம் வேல் வாங்கி சூரபதுமனின் ஆணவத்தை அழித்து, அவனைத் தன் மயில் வாகனமாகவும் சேவற் கொடியாகவும் மாற்றி, நல்லவருக்கெல்லாம் நல்வாழ்வு வழங்கினார். தேவர்கள் நன்றி கூறும் விதமாக தேவேந்திரன் மகள் தேவயானையை முருகனுக்கு மணம் முடித்தனர். இந்த ஆறு நாட்கள் நிகழ்வு கந்தர் சஷ்டி என்றும் சூரன் திருவிழா என்றும் அழைக்கப்படுகிறது.

வலையபட்டியில் இந்தக் கந்தர் சஷ்டி விழா பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த நகரத்தார்களால் முன்பு ஆறு நாட்களும் பின்னர் நான்கு நாட்களும் நடத்தப் பெற்று தற்போது மூன்று நாட்கள் நடைபெற்று வருகிறது.

சிறுவயதில் நடந்த சூரன் திருவிழாக் காட்சிகள் இன்றும் பசுமையாக நினைவில் நிற்கின்றன. சூரபதுமன் ஒருகாலை மடித்து மறுகாலை ஊன்றி போருக்கு ஆயத்தமாக கைகளில் வாளும் கேடயமும் தாங்கி இருக்கும் மரத்தாலான சிற்பம் ஒரு மரப்பீடத்தில் (சப்பரத்தில்) தூக்குவதற்கு ஏதுவாக இருபெரும் மூங்கில்கள் பொருத்தித் தயாராக இருக்கும்.

அந்த சப்பரத்தைத் தூக்கிக் கொண்டு காலில் சதங்கையும் ராணுவ உடுப்பும் தரித்த அவனது படைவீரர்கள் பிற்பகல் முதலே மக்கள் கூட்டத்தின் நடுவே ஓடி, சப்பரத்தை மேலும் கீழும் ஆட்டி அட்டகாசம் செய்வர். மாலை சம்ஹாரம் நடக்கும் வரை இந்த ஆட்டம் தொடரும்.

முருகப் பெருமானின் தேரில் உள்ள மயில் வாகனம் துணியால் போர்த்தப்பட்டிருக்கும். மலையாண்டி கோவில் மலையையும் வையாபுரி ஊருணியையும் சுற்றியுள்ள பெரிய பாதையில் முருகப் பெருமானின் தேர் சூரபதுமனைத் துரத்தியபடி வரும்போது, சரியான இடைவெளிகளில் சூரன் தலையை மட்டும் மாற்றி வேறு வேறு உருவங்களைப் பொருத்தி விளையாட்டுக் காட்டுவர். சூரன் தலைகளை மாற்றுவதற்காகச் சப்பரத்தின் மீது ஏறி நிற்பவரைக் கீழே தள்ளும் விதமாகச் சப்பரம் தூக்குபவர்கள் மேலும் கீழும் ஆட்டும்போது அவர் சூரன் கழுத்தைக் கட்டிக் கொண்டு கத்துவது பார்ப்பவர்களுக்கு சிரிப்பாக இருக்கும்.

இவ்வாறு வரும் சூரன் மாலை வேளையில் இராஜ கோபுரத்துக்கு எதிரே, மலை அடிவாரத்தில் முருகப் பெருமானை நேருக்கு நேர் சந்தித்து ஆட்டம் போடுவான். அப்போது கோவிலின் தலைமை அர்ச்சகர் முருகப் பெருமான் சார்பாக அம்மனிடம் இருந்து சக்தி வேலை வாங்கி, அவர் தெய்வ அருளில் இருப்பதால் இரண்டு பேர் அவரைத் தாங்கிப் பிடிக்க, மலைமீது இருந்து இராஜகோபுரப் படிக்கட்டுகள் வழியாக இறங்கி வந்து, சக்தி வேலை முருகப் பெருமான் கையில் வைத்து, தேருக்கு நேரே நிற்கும் சூரப்பதுமனின் தலையைக் கொய்வார். உடனே முருகப் பெருமானின் மயில் வாகனத்தின் திரை விலக்கப்படுவதும், வெள்ளை நிறச் சேவல் சூரனின் சப்பரத்தில் இருந்து மூன்று முறை மேலே பறக்க விடப்படுவதும் ஒன்றாக நிகழும்.

ஆணவம் அழிந்த சூரன் முருகப் பெருமானின் வாகனமாகவும் (மயில்) கொடியாகவும் (சேவல்) மாறி உயர்நிலை அடைவான். அதுவரை ஆட்டம் போட்ட சூரனின் படை வீரர்கள் தலைகளைத் தொங்கப் போட்டுக் கொண்டு அமைதியாக சப்பரத்தைச் சுமந்து செல்வது "என்ன ஆட்டம் போட்டாலும் இறுதியில் ஆணவம் அழிவது உறுதி" என்ற தத்துவத்தை உணர்த்தும் விதமாக இருக்கும். சூரசம்ஹாரம் நமக்கெல்லாம் உணர்த்துவதும் அதுவே. ■

# நகரத்தார்களின் வாழ்க்கை

## அன்றும் இன்றும்



**சகுந்தலா சொக்கலிங்கம்**
பொன். புதுப்பட்டி

வலையபட்டி என்னும் நன்னகரில், ஆன்றோர்கள், சான்றோர்கள், அறிவில் சிறந்தோர்கள், தொழிதிபர்கள், உழைப்பால் உயர்ந்தோர்கள் என்று, அத்துணைபேரும் வாழ்ந்து வரும் அதிகப் புள்ளிகள் வாழும் ஊர் என்பது யாவரும் அறிந்த ஒன்று. வலையபட்டிக்கு மாப்பிள்ளைக் கூடத்திற்கு மாப்பிள்ளையாக வருபவர்களும், மருமகளாய் வருபவர்களும், கொடுத்து வைத்திருக்க வேண்டும். ஏனெனில், அவ்வளவு பெருமைகளையும், சிறப்புகளையும் பெற்ற ஊர். ஊருக்கு நடுவில் அமைந்துள்ள, எட்டுப்பட்டை கொண்ட அடைக்கன் ஊருணியும், வையாபுரி ஊருணியின் அழகும், (மலையாண்டி மலைக்கோவிலுடன் இணைந்த ஊருணி) க.சா. ஊருணியும், சேங்கை ஊருணியும், அழகியவாணன் செட்டி ஊருணியும், கழுதவரி என்று கூறும் வண்ணாரவீடு துணி துவைக்கும் ஊருணியும், ஊருக்கே அழகூட்டும், எப்பொழுதும் தண்ணீர் வற்றாத ஊருணிகளாகும். இந்த ஊரில் பள்ளிகளுக்கும் பஞ்சமில்லை; படித்தவர்களுக்கும் பஞ்சமில்லை. அந்தக் காலம் போல் பெட்டியடி கைபழகி, பெரிய பெரிய தொழிலதிபர்கள் வாழும் ஊரும், இதுவேயாகும்.

அந்தக் காலத்தில் அதாவது 1990 வரை ஒவ்வொரு குடும்பமும், ஒரு ஆலமரம் தான். நான் எங்கள் வீட்டை "ஆலமரம்" என்றுதான் சொல்வேன். ஆலமரம் என்றால் விழுதுகள் விட்டு கிளைகள் நிறைந்திருக்கும்.. அதுபோல் ஒவ்வொரு வீட்டிலும் 8, 9, 10 என்று பிள்ளைகள நிறைந்திருக்கும். அவர்கள் பெண் எடுத்து பெண் கொடுத்த இடங்களிலும், அதே போல் பிள்ளைகள் நிறைந்திருககும். அதுவே உறவுகள் நிறைந்து, ஒரு வீட்டில் சின்ன விசேஷம் என்றால் கூட, நான்கு நாட்கள் முன்பாகவே வீடு கலகலப்பாக இருக்கும். உறவுகளுக்குப் பஞ்சமில்லை. ஊர் முழுக்க உறவுகள் தான்.

நாங்கள் சிறுபிள்ளைகளாக இருக்கும்பொழுது, கல்யாணம், திருவிழா, சடங்கு, குடிபுகுதல் (கிரகப்பிரவேசம்) போன்ற விசேஷங்களில், உறவுகளுடன் கூடி, உறவாடி, உண்டு மகிழ்ந்து 4, 6 நாட்கள் ஒன்றாக இருந்து வந்தோம். ஒரு ஊருக்கு இரண்டு, நான்குபேர், நான்கு சக்கர கார் வாகனங்கள் வைத்திருப்பார்கள். மற்றபடி இரண்டு சக்கர வாகனமாக சைக்கிள்தான் அதிகமாக இருக்கும். ஆனால் அந்தக் கார் வைத்திருப்பவர்கள் இன்றுபோல், இரண்டு பேர் போனாலும், காரை நிறுத்தி எங்கு செல்கிறீர்கள் எனக் கேட்டு, காரில் கூட்டிபோய் இறக்கிவிட்டுச் செல்வார்கள்.

அந்தக் கால வாழ்க்கையே தனி. மனதில் நினைக்கயிலே மலரும் நினைவுகளாய் இனிக்கத் தோன்றும். காலையில் பள்ளிக்குச் சென்று, மாலையில் எல்லோரும் வீதிகளில் கூடி விளையாடி மணி 6 ஆனவுடன் வீட்டிற்குச் சென்று, கை கால் முகம் கழுவி வீட்டுப்பாடம் எழுதப் படிக்க என்று செய்துவிட்டு இரவுச்சாப்பாடு முடித்துத் தூங்கச் செல்வோம். இப்பொழுது, வாழ்க்கையில் எல்லாமே மாற்றம் தான். அன்று பெற்றோர்களே பிள்ளைகளுக்கு தரம் பார்த்து, மாப்பிள்ளை பெண் பார்த்து நிச்சயம் செய்த திருமணம் தான் எல்லாத் திருமணமும்.

அன்று எங்கள் ஆத்தாவெல்லாம் வாரம் இருமுறை சந்தை கூடும் இடங்களுக்குப் போய், காய்கறிகளை (உரம் போடாமல் இயற்கை உரங்களான சாம்பல், குப்பை, எரு ஆகியவைகளைப் போட்டு பயிர் செய்த காய்கறி பழங்களை) வாங்கி வந்து வீட்டில் பரப்பி வைத்து, ஒரு வாரம் வரை சமைக்க வைத்துக கொள்வார்கள். அவையும் கெடாமல், ருசியாகவும், நன்றாகவும் இருக்கும். ஏனெனில் அன்று குளிர் சாதனப்பெட்டியெல்லாம் கிடையாது. சந்தையில் காய்கறிகளை வாங்கி வந்த பின் ஒரு சாம்பார், இரண்டு காய்களைச் சமைத்துவிட்டு எங்களுக்கு சனிக்கிழமை எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி விட்டு, பின்பு சமைத்து சுடச்சுடப் பறிமாறி டேபிள் ஃபேன் வைத்துவிட்டு, தலை துவட்டி விட்டுச் சாப்பிடச் சொல்வார்கள். தரையில் உட்கார்ந்து சம்மணம் கொட்டித்தான் சாப்பிடுவோம். ஊரே, கல்யாண வீடு முதற்கொண்டு, தரையில் தான் உட்கார்ந்து சாப்பிடுவார்கள். இன்று எல்லாமே அவசர உலகத்தில், அவசரச் சமையல், அவசரச் சாப்பாடு உணவுப் பொருட்கள் அத்தனையும் உரம்போட்ட சாப்பாடு, அதனால் வரும் உடம்புக் கேடு என் செய்வது.

நம்மவர் சமத்துக்கு இன்றளவும் ஒரு குறையும் இல்லை. ஆனால், இன்றைய சமுதாயத்தில், இரண்டொரு பிள்ளைகளை வைத்துக்கொண்டு,

“காசே தான் கடவுளடா” என்று வேலை பார்ப்பதிலும், சம்பாத்தியத்திலும் குறிக்கோளாய், கம்ப்யூட்டரும் கரன்ஸியுமாய், வாழ்க்கையை ரசிக்காமல், சாப்பாட்டை ருசிக்காமல் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று, பிள்ளைகளை அவர்கள் நோக்கத்திற்கு வளர்த்து, சிறுவயது முதலே இவர்களுக்கு, Tension, Stress ஆக இருக்கிறதென்று, பிள்ளைகளிடம் “செல்” என்னும் அலைபேசியைக் கொடுத்து, எல்லாமே அதில் உறவாடி மகிழ்கிறார்கள். பிள்ளைகளுக்கு உறவுகள் தெரியவில்லை. வாட்ஸ்அப்பில் தான் உறவுகளைக் காண்கிறார்கள். உறவுகளுடன் உறவாடுவதும் வாட்ஸ்அப்பில் தான். டி.வி.யில் பார்க்கின்ற ஆடைகளை வாங்கி உடுக்கச் செய்து, எல்லா வகையிலும் இன்றைய இளைய தலைமுறையினர், சாப்பாடு, நடைமுறைப் பழக்கவழக்கங்கள் எல்லாமே நம் நகரத்தார் பண்பாடு கலாச்சாரம் இல்லாமல் ரொம்பவும் மாறி, கலப்புத் திருமணங்களில் போய் முடிகிறது. இது எங்கே போய் நிற்கும் என்பது தெரியவில்லை. ஆனால் நம் நகரத்தார் சங்கங்கள் அத்துணையும், நம் சமூகம் பழைய நிலைக்கு வரவேண்டுமென்று வெகுபாடுபடுகிறார்கள். இறைவன் அதற்குத் துணையிருந்து வழிவிடவேண்டும். நாம் நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும் என்று சொல்லி இறைவனிடம் வேண்டிடுவோம்.

இக்கால இளைய சமுதாய மக்களுக்கு அவர்கள் பெற்றோர்கள், சொல்லிச்சொல்லி அவர்கள் கடைப்பிடிக்க வேண்டியது வீட்டிற்கு வரும் உறவுகளை “வாங்க” “இருங்க”, “சாப்பிடுங்க” நல்ல இருக்கீங்களா என்றும், விசேஷ வீடுகளில் “வாங்க” “சாப்பிடுங்க”, “சாப்பீட்டீங்களா” என்ற வார்த்தைகளைக் கடைப் பிடிக்கச் சொல்ல வேண்டியது. நம்மில் பெரிய கோடீஸ்வரர்கள் கூட அவர்கள் வீட்டுக் கல்யாணங்களில் கண்டும் காணாதது போல் “வாங்க” என்று கூட கேட்காமல், பணம் பார்த்து உபசரிப்பார்கள். அது மிகத் தவறு. அப்படியிருப்பவர்கள் இவர்களுக்குப் பத்திரிக்கையோ, அழைப்போ அனுப்பக் கூடாது. ஏனெனில் அவர்களெல்லாம் சாதாரண நாட்களில், நம் வீடுகளுக்கு வரப்போவதில்லை. இதை எல்லோரும், நடைமுறைக்குக் கொண்டு வந்தால் நன்றாக இருக்கும். வருபவர்களும் மனசு குளிர்ந்து, வாழ்த்திவிட்டுச் செல்வார்கள். இது நம்மவரில் நிச்சயம் மாற வேண்டும்.

திருமூலர் சொன்னபடி

**மதியார்தம் வாசல் மதித்தொருகால் சென்று மிதியாமை கோடி பெறும்**
**உண்ணீர், உண்ணீர் என்று உபசரியார் தம் மனையில் உண்ணாமை கோடி பெறும்**
**கோடானகோடி கொடுப்பினும் தன்னுடைய நா கோடாமை கோடிபெறும்**
**கோடி கொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு கூடுதல் கோடி பெறும்**

மனிதரை மனிதர் மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். பணம் பெரிதல்ல. மனமும் பெரிதுதான். மனம் பெரிதென்று நினைப்பவர்கள் தரம் குறையாமல் நடந்து கொள்வார்கள்.

**எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர்**
**திண்ணியர் ஆகப் பெறின்.**

என்ற வள்ளுவர் குறளுக்கேற்ப உறுதியான உள்ளம் கொண்ட இக்காலப் பெற்றோர் நம் நகரத்தாரில் திருமணம் செய்து, புள்ளிகள் பெருகிட வேண்டும் என்று உறுதி எடுக்க வேண்டும். இதுவே 1960 ஆம் ஆண்டிற்கு முன் பிறந்தசெட்டி மக்களின் ஆசையாகும். இறைவன் வழிவிட வேண்டும். இதுவே எல்லோருடைய அவாவும். நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும். ■

## ஏழாவது குடமுழுக்கன்று நடைபெற்ற நிகழ்வுகள்

கோவை வலையபட்டி நகரத்தார் சங்கம் மற்றும் மீனாட்சி பெரியண்ணன் மருத்துவமனை, பொன்னமராவதி இணைந்து கும்பாபிஷேக சமயத்தில் வலையபட்டி பழனியப்பா தொடக்கப்பள்ளி வளாகத்தில் இலவச மருத்துவ முகாம் நடத்தினர்.

சென்னை வாழ் வலையபட்டி நகரத்தார் சங்கம் சார்பில் கும்பாபிஷேக சமயத்தில் மெய்யப்பா - வள்ளியம்மை காஞ்சி சங்கர வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளி வளாகத்தில் மாபெரும் இலவச வேலை வாய்ப்பு முகாம் நடத்தப்பட்டது.

1978ஆம் ஆண்டு நடைபெற்ற மலையாண்டி கோயில் கும்பாபிஷேகத்தை திருச்சி வானொலி நிலையத்தார் வருகைத்தந்து எல்லா நிகழ்ச்சிகளையும் வானொலியில் ஒலிபரப்பினர்.

**"வருவான் வடிவேலன்"** என்ற திரைப்படத்தில் 1978ஆம் ஆண்டு நடைபெற்ற மலையாண்டி கோயில் கும்பாபிஷேகம் காட்டப்பெற்றது. அவ்வாண்டு புதிதாகக் கட்டப்பெற்ற இராஜகோபுரம் வண்ணப்பொலிவுடன் அழகு மிளிரத் திரைப்படமாக்கப்பட்டது.

# உலகில் உயர்ந்த உயிரினங்கள்



முனைவர் **மெய்யப்பன் சீனிவாசன்** M.Sc., Ph.D., D.Sc.,
இந்திய கடல் வாழ் உயிரினங்கள் ஆய்வகம் (ஓய்வு)
சென்னை – 600 028.

இவ்வுலகம் 71 சதவிகிதம் நீராலும் 29 சதவிகிதம் நிலத்தாலும் சூழப்பட்டது. நீரிலும் (கடல், ஆறு, குளம், ஏரி, கிணறு) நிலத்திலும் உயிரினங்களும் தாவரங்களும் வாழ்கின்றன.

உயிரினங்களை முதுகெலும்புள்ளவை, இல்லாதவை என்று இரு வகையாகப் பிரித்து உள்ளனர். ஒரு செல் (திசு) உயிரினமான அமீபா (AMEEBA) தொடங்கி பல திசுக்கள் கொண்ட புழுக்கள், பூச்சிகள், தேள், பூரான், நத்தை, கணவாய், கடல் அட்டைகள் போன்றவைகள் முதுகெலும்பு இல்லாதனவற்றிலும், மீன், தவளை, பாம்பு, பல்லி, பறவைகள், கால் நடைகள், குரங்குகள், காட்டு விலங்குகள், மனிதன் எல்லாம் முதுகெலும்பு உள்ளன வகையிலும் அடங்கும்.

எல்லா உயிரினங்கட்கும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், இரையைத் தேடிக் கொள்ளவும் இயற்கை (இறைவன்) ஏதோ ஒரு வகையில் சில சக்திகளைக் கொடுத்துள்ளது.

சான்றாக மீன்கள் தங்களின் படகு போன்ற உடலமைப்பால் வேகமாக நீந்தி இரையைப் பிடிக்கவும், எதிரிகளிடமிருந்து தப்பிக்கவும் செய்கின்றன. வேகமாக நீந்த இயலாத தட்டையான வடிவம் கொண்ட கடலின் அடியில் வாழும் திருக்கை மீன் இனத்தைச் சார்ந்த நார்சின் (Narcine) மீன்கள் தங்கள் உடலின் மேற்பகுதியில் இருபக்கங்களிலும் உள்ள செல்களினால் மின்சாரம் போன்ற அதிர்வை ஏற்படுத்தி எதிரிகளிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்கின்றன. (இந்த வகை மீன்களை மனிதர்கள் உண்ணமாட்டார்கள்)

முதுகெலும்பில்லாத கணவாய் (Cuttle fish) இனத்தின் உடலினுள் ஒரு பை போன்ற உறுப்பு (Ink Sac) உள்ளது. யாராவது அவைகளைப் பிடிக்க வந்தால் இந்தப் பையினின்றும் மை போன்ற திரவத்தைப் பீச்சியடித்து மறைந்து கொள்ளும் கிட்டத்தட்ட காவலர்கள் கண்ணீர்ப் புகை குண்டுகளை உபயோகிப்பது போல இம்மையைத் தண்ணீரில் பீச்சியடித்து காப்பாற்றிக் கொள்ளும். (மனிதர்கள் இந்தக் கணவாயை சமையலுக்கு பயன்படுத்தும் போது இந்த மை உள்ள பையை அகற்றி விடுவார்கள்)

தேள், பூரான், குளவி, பாம்பு போன்றவைகள் தங்களிடமுள்ள விஷத்தினால் மற்றவர்களிமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுகின்றன. காட்டு விலங்குகள் வேகமாக ஓடித் தப்பித்துக் கொள்ளுகின்றன.

ஆனால் மனிதன் மட்டும் தன்னிடம் இயற்கை அளித்த சக்தியை வீணடித்துவிட்டு தன்னைக் காத்துக் கொள்ள மற்ற பிற ஆயுதங்களைச் (கம்பு, வேல், ஈட்டி, துப்பாக்கி, அணு ஆயுதங்கள்) கொண்டு தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் மற்றவர்களை அழிக்கவும் செய்கின்றான். இதற்குக் காரணம் நாம் நமக்கு இயற்கை கொடுத்த சக்தியைப் பயன்படுத்துவதில்லை. முன்பெல்லாம் அதிக தூரம் செல்வதற்கு மட்டும் மாட்டு வண்டிகளைப் பயன்படுத்துவார்கள். அருகில் உள்ள இடங்கட்கும், ஊர்கட்கும் நடந்துதான் செல்வார்கள். எனவே அவர்கட்கு சர்க்கரை நோய், இதயநோய், மூட்டுவலி போன்றவை அதிகம் இல்லை.

இன்றும் அந்தமான் தீவுகளில் ஒன்றில் வசிக்கும் ஜாரவாஸ் பழங்குடியினர் உடம்பில் எந்த உடையும் அணிவதில்லை. இடுப்பில் மட்டும் இலை தழைகளைக் கட்டிக் கொள்ளுகின்றார்கள். கூரிய அம்புகளைக் கொண்டு தண்ணீரில் உள்ள மீன்களைப் பிடித்து உண்கிறார்கள். வேற்று மனிதர்களைக் கண்டால் விஷம் தோய்ந்த அம்பினால் கொன்று விடுவார்கள். விலங்குளைப் போல் வேகமாக ஓடும் திறன் கொண்டவர்கள். இந்திய அரசு இவர்களைப் பாதுகாக்கப்பட்ட இனமாக அறிவித்து காத்து வருகின்றது. சுற்றுலாப் பயணிகள் இந்தக் தீவிற்குள் செல்ல அனுமதிப்பதில்லை.

நாகரிக உலகில் முன்னேறிய நாடுகளில் வாழும் விஞ்ஞானிகளில் சிலர் கொடிய நுண் கிருமிகளை உற்பத்தி செய்து அவற்றை உலகம் முழுவதும் பரப்ப மனிதர்கள் மரண பயத்துடன் வாழ்கின்றார்கள். இது போன்ற கொரோனா என்ற கொடிய கிருமியின் பரவலால் நமது கோவிலின் குடமுழுக்கும் மாற்றி அமைக்கப்பட்ட தேதியில் தற்போது செப்டம்பர் 8, 2024ல் நடத்தப்படுகின்றது.

இவற்றை எல்லாம் எண்ணிப் பார்க்கும்பொழுது மற்ற உயிரினங்களினால் நமக்கு எந்த கெடுதலும் இல்லை. ஆனால் ஆறு அறிவு படைத்த மனிதனால் தான், மனிதனுக்கும் மற்ற உயிரினங்கட்கும் தீங்கு விளைகின்றது.

எனவே உலகில் உயர்ந்த உயிரினங்கள் மனிதனா, மற்றவைகளா என்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பை உங்களிடமே விட்டு விடுகின்றேன். ■

## வலையபட்டி

# அருள்மிகு மலையாண்டி சுவாமி கோயில்



**V.KR. ராமலிங்கம்**
வலையபட்டி

**ஐந்து கரத்தனை யானை முகத்தனை**
**இந்தினிளம் பிறை போலும் எயிற்றனை**
**நந்திமகன்தனை ஞானக் கொழுந்தினைப்**
**புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே!**

மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது என்பது போல சிறிய மலையாக இருந்தாலும் மலையாண்டி விநாயகரின் கருணை மழை மிகப் பெரியது; மிக உயர்ந்தது; எல்லோரையும், எல்லா உயிர்களையும் வளமுடனும் நலமுடனும் காத்து அருள் புரிபவர் அருள்மிகு ஸ்ரீ மலையாண்டி சுவாமி விநாயகர். அந்தக்கோவில் புகழ், பெருமை பற்றி பார்ப்போம்.

பழைய மலையாண்டி விநாயகர், புதிய மலையாண்டி விநாயகர் என இரு கோவிலாக ஒரே மலையில் உள்ள இக்கோவில் தோன்றி 132 வருடங்களே ஆனாலும் மிகத் தொன்மை வாய்ந்த புகழ்மிக்க, அருட்சக்தி, தெய்வசக்தி மிக நிறைந்த கோவிலாகக் காட்சியளிக்கிறது. இது சிவன் கோவிலாகவும், தற்பொழுது ஐயப்பன் மற்றும் பெருமாள் தெய்வங்களும் இணைந்து மிளிர்கிறது.

மலைமேல் கட்டப்பட்டுள்ள எந்தத் திருக்கோவிலுக்கும் நான்கு புறமும் வழி அமைக்கப்பட்டிருப்பது மிகக் குறைவே. இல்லையென்றே கூறலாம். ஆனால் மலையாண்டி சுவாமி கோவில் நான்கு புறமும் நான்கு திசைகளிலும் வழி அமைக்கப்பட்டு கட்டப்பட்டுள்ளது. கோவிலின் கிழக்கே இமயமலையைப் போல் கம்பீரமாய் உயர்ந்து கழுகுமலை அதி அற்புதமாக காட்சியளிக்கிறது. தெற்கே அம்மன் சந்நதி மிக அழகு. தெற்கிலும் மேற்கிலும் வையாபுரி ஊருணி பரந்து விரிந்து கடல்போல் காட்சியளிக்கிறது. மக்களுக்கும், எல்லா உயிர்களுக்கும் தாகத்தைப் போக்கும் உயிர்நாடியாகத் திகழ்கிறது.

கோவிலின் கிரிவலப் பாதையில் கைலாசநாதர் கோவில் மற்றும் சிறிய அரசமர விநாயகர் கோவில்கள், அன்னதான மடங்கள் மற்றும் இளைப்பாறும் மண்டபம், பஞ்ச மூர்த்திகள் திரு உலா மண்டபம் யாவும் கோவிலுக்கு மேலும்

அழகு சேர்க்கின்றன. கோவிலின் ராஜகோபுரம் கண்கொள்ளாக் காட்சி; ராஜகோபுரத்தின் கிழக்கே கீழே நின்று பார்த்தால் ராஜகோபுரப் படிக்கட்டுகள், அதன் அழகு, அதன் உயர்வு, அதன் மேல் எழுந்து கம்பீரமாக நிற்கும் ராஜகோபுரம் அதை அடுத்துப் புதிதாகக் கட்டப்பட்டுள்ள முன் மண்டபம் எல்லாவற்றையும் பார்த்து ரசிக்க, தெய்வீக அழகை , உணரக்காணக் கண்கோடி வேண்டும்.

கோவிலின் இறைவனின் பெயர் ஸ்ரீ வலம்புரிநாத சுவாமி; இறைவியின் பெயர் அருள்மிகு வடுவகிர் விழி நாயகி அம்பாள். இறைவியின் அருள் தன்மை வார்த்தைகளால் விவரிக்க முடியாது. பெயருக்கேற்றவாறு, அந்த அம்பிகையின் புன் முறுவலுடன் கூடிய கருணைப் பார்வை நம்மைப் பரவசம் அடையச் செய்யும். இது அனுபவத்தில் கண்ட உண்மை. அந்த அன்னை சாந்த சொரூபியாக, ஆயிரம் கோடி நிலவின் ஒளிபோல, அன்பின் திருவுருவமாக, அருட்கருணையின் வடிவமாகக் காட்சி தருகிறாள். அவள் தெற்கு திசை நோக்கி இருப்பதால் மதுரையம்பதி அங்கையற்கண்ணியே இங்கும் வீற்றிருக்கிறாள். வடுவகிர் விழி அன்னையின் அருளை உணர, உணர அதன் மகிமை புரியும்; வாழ்வு மேலோங்கும்; இது உண்மை!

கோவிலின் மேலே சென்று கிழக்கே பார்த்தால் கழுகுமலை ரம்மியமாக காட்சியளிக்கும். அந்தக் காட்சி திருக்கழுக்குன்றத்தை நினைவுபடுத்துகிறது. தெற்கே பார்த்தால் அம்மன் சந்நிதி மதுரை மீனாட்சியை நினைவுபடுத்துகிறது. மேற்கே பார்த்தால் பிரான்மலை என்ற பிறம்புமலை அழகாக காட்சி தருகின்றது. அக்காட்சி பழநிமலை முருகனை நினைவூட்டுகிறது.

படிக்கட்டுகளில் ஏறி முதலில் மலையாண்டி விநாயகரை வணங்கும்போது, திருச்சிராப்பள்ளி, மலைக்கோட்டை உச்சிப்பிள்ளையார் நினைவுக்கு வருகிறது. சுவாமி சந்நிதி பிரகாரத்தில் வடமூலையில் மயில்மேல் அமர்ந்து, வள்ளி, தெய்வானை தேவியருடன், ஆறுமுகத்துடன் இனிய புன் முறுவலுடன் கருணையே வடிவாகத் தோன்றும் முருகப் பெருமானைக் காணக் கண்கோடி வேண்டும். அந்த கருணை மிக்க ஆறுமுகப் பெருமானைக் கண்ட மாத்திரத்தில் படியேறி வந்த களைப்பு ஓடிவிடும். உடம்பிலும், மனதிலும் நோய் அகன்றுவிடும். திருத்தணிகை தணிகாசலப் பெருமானை இங்கே கண்ட மன நிறைவு ஏற்படும். இது உண்மை.

கோவிலின் கிரிவலத்தில் உள்ள கைலாசநாதர் கோவில் அருகில் நின்று கவனித்தால் ஸ்ரீ மலையாண்டி சுவாமி கோவிலின் மொத்த அழகும் புலப்படும். எட்டு அல்லது ஒன்பது கோபுரங்கள் உயர்ந்து வானைத் தொட்டது போல்

காணப்படும். ராஜகோபுரம் ஓங்கி உயர்ந்து ஆகாயத்துடன் இணைந்து காணப்படுவதால், தில்லை சிதம்பரமும், திருவண்ணாமலை ஈசனையும் இங்கே தரிசிக்க முடியும். அருவியென வழிந்தோடும், வெள்ளம் போல் காட்சி தரும் தாழ்வான பாறை அழகு; கீழே காணப்படும் அழகிய ஊருணி; இரு யானைகள் தண்ணீர் எடுக்கும் அழகு; அழகிய ஊருணி படிக்கட்டுகள்; பல வருடங்களாக காணப்படும் தாளிப்பனை மரம்.

வானமும் கோபுரங்களும் ஒன்றாக இணைந்தது போலவும் தேவலோகம் போல் காட்சியளிக்கும். கோவிலின் மொத்த அழகும் கீழிருந்து பார்க்கும்போதே கிடைத்துவிடும். அத்தகைய சிறப்பு வாய்ந்த அருட்சக்தி நிறைந்த தெய்வீகக் கோவில் என்றால் அது மிகையாகாது.

எல்லாத் தெய்வங்களின் அருளும் ஒருங்கே இணையப் பெற்ற இத்திருத்தலத்தைப் பற்றி இன்னும் நிறைய அனுபவங்கள் சொல்லிக்கொண்டே போகலாம். அத்தனை அருட்சக்திகளும் பெற்ற இத்திருத்தலம் குடமுழுக்கு நன்னீராட்டுப் பெருவிழா நடைபெறும் இச் சமயத்தில் இன்னும் புகழ் பெற்று, சிறந்த ஆன்மீகத் தலமாக இனிவரும் காலங்களில் உருவாகும். இது எல்லா தெய்வங்களின் அருளாசியாகும்.

அவனன்றி ஓர் அணுவும் அசையாது; அவன் அருளாலே அவன் தாள் வணங்கி மகிழ்வோம். ஓம் நமசிவாய!



# வளர்ந்தோங்கி வளமாக நின்ற குலமே!



கவியரசு **கண்ணதாசன்**

சிந்துவெளிப் புகழ்காத்து
சீர்காத்து திறம்காத்து
தென்னாடு வந்த குலமே
திருவுடைய சோழனவன்
செம்மாண் புகார்நகரில்
திருக்கோவில் கொண்டகுலமே
வந்தவழி மறவாது
வாய்மைநெறி தவறாது
வாழ்வாங்கு வாழ்ந்த குலமே
எந்தமிழர் நாடெங்கும்
இறைப்பணியே பெரிதென்று
எந்நாளும் செய்த குலமே
என்னுடைய குலமென்பேன்
எல்லாமும் நீயறிவாய்
ஏற்றுக்கொள் தமிழர் நிலமே!

காவிரியின் பெருமாட்டி
கவின்மதுரை நகர்தன்னைக்
கனல் சூழ வைத்த கதையும்
கண்ணகி என்றால் இந்த
மண்ணெல்லாம் அடிபணிய
கற்போடு வாழ்ந்த நிலையும்
நாவசையும் போதெல்லாம்
நாடசையும் படிநின்ற
நல்வளையா பதியின் கதையும்
நாடியவர் பணியாது மணிமேகலை என்ற
நன்மங்கை வாழ்ந்த கதையும்
காவியங்கள் ஐந்தினிலும்

மூன்றினிலே தலைதூக்கிக்
காட்டுவதும் எங்கள் குலமே
கடுகளவுதான் சொன்னேன்
மலையளவு புகழுண்டு
காண்பாய் நீ தமிழர் நிலமே!

கடலோடி மலைநாடும்
பிறநாடும் சென்றார்கள்
கப்பல் வராத போதே
காற்றினிலே பாய்போட்டு
கடவுளையே துணைவைத்து
கலங்களெல்லாம் சென்ற போதே
நடமாடும் சிவமாக
திருநீறும் சந்தனமும்
நதிபோலப் பூசும் உடலே
'நமசிவாயம்' என்று
நாள்தோறும் சொல்லுமவர்
நயமான சிவந்த இதழே
தடம் பார்த்து நடைபோடும்
தனிப்பண்பு மாறாத
தகைமிக்க தெங்கள் குலமே
தந்த கரம் அவராகப்
பெற்றவளும் நீ தானே
சாட்சிசொல் தமிழர் நிலமே!

ஆறாயிரம் பேர்கள்
கற்கின்ற கழகத்தை
அண்ணா மலை நாட்டினான்

அவனோடு போட்டியிட
அத்தனையும் தான்தந்து
அழகப்பன் முடி சூட்டினான்
ஓராயிரம் தடவை
செட்டிமகன் நானென்று
உலகெங்கும் மார்தட்டினான்
உளநூறும் விஞ்ஞான
மருத்துவமும் கற்றவர்கள்
உண்டென்று பேர் காட்டினான்
சேராத செல்வத்தைச்
சேர்த்தாலும் நல்லவழி
செலவாக்கும் எங்கள் குலமே
செந்திருவை சரஸ்வதியைக்
கேட்டேனும் உண்மைநிலை
தெரிந்துகொள் தமிழர் நிலமே!
சாதிவெறி கொண்டேன்போல்
கவிதையிதை எழுதினேன்
தவறல்ல: உண்மை சொன்னேன்!
தர்மத்தைப் பாடுவது
சாதிவெறி யாகாது
தமிழுக்கே நன்மை என்பேன்
ஓதியொரு மொழிசொன்ன
ஒக்கவ்மா சாத்தியுமென்
உன்னதப் பாட்டியாவாள்
உயர்ந்தசீத் தலைச் சாத்தன்
ஒருவகையில் வணிகனென்
உத்தமப் பாட்டனாவான்
ஆதிமுதல் தமிழிலே
அவர் வந்த வழியிலே
அடியேனைப் பெற்ற குலமே
அளவிலே சிறிதேனும்
செயலிலே பெரியதாக
அறிவாய்நீ தமிழர் நிலமே!

## நகரத்தார்களின் சிறப்புப் பற்றி கவியரசு கண்ணதாசன்

**"பிள்ளையார் சுழி"** எழுதாமல் நகரத்தார்கள் கடிதம் எழுத மாட்டார்கள்.

**"சாமி வீடு"** இல்லாமல் வீடு கட்ட மாட்டார்கள்.

**"கோயில்"** கட்டாமல் அந்த ஊரில் குடியிருக்க மாட்டார்கள்.

**"குடநீராட்டு விழா"** நடத்தாமல் ஒரு மாமாங்கத்தைக் கழிக்க மாட்டார்கள்.

**"கோயிலுக்குப் பாக்கு வைக்காமல்"** திருமணம் செய்ய மாட்டார்கள்.

**"குலதெய்வத்துக்குப் பணம் எடுத்து முடியாமல்"** எந்தக் காரியத்திலும் ஈடுபட மாட்டார்கள்.

**"சிதறுகாய்"** அடிக்காமல் பயணம் செய்ய மாட்டார்கள்.

**"பிழைப்பு"** இல்லாமல் பரம்பரையை வளர்க்க மாட்டார்கள்

# அரங்கன் அனுபவிக்கும் தமிழ்



'குறள் இனிது' **சோம. வீரப்பன்**
தேவகோட்டை ( திருவரங்கம் )

ஸ்ரீரங்கத்துப் பெருமாள் ரசித்துக் கேட்கிற தமிழென்று எழுதாமல் அது என்ன அனுபவிக்கும் என்று எழுதி இருக்கிறேன் என நினைக்கிறீர்களா?

ஆமாங்க, பொதுவா சிவனை, அம்பாளை தரிசித்தோம் என்று சொல்வோம். ஆனால் பெருமாளை, தாயாரைச் 'சேவித்ததாக'ச் சொல்வதே வழக்கம்! ஆனால் ஸ்ரீரங்கத்துப் பெருமாளை அப்படிக் கூடச் சொல்ல மாட்டார்கள்! ரெங்கனை 'அனுபவித்த'தாகவே சொல்வார்கள்!

நாம் ரங்கனைச் சேவித்து அனுபவிக்கிறோம் என்றால், ரங்கனோ தமிழைக் கேட்டுக் கேட்டு அனுபவிக்கிறார்!

### தமிழ்த் திருவிழா

சரி, நாலாயிரத் திவ்யப்பிரபந்தம் என்றால் என்னவென்று தெரியுமோ? அது ஏதோ வடமொழி இலக்கியம் என்று நினைத்து விடாதீர்கள்! இது பெருமாளைக் குறித்து பன்னிரு ஆழ்வார்கள் பாடிய பாடல்களின் தொகுப்பு தான்!

'திவ்ய' என்பதற்கு 'மேலான' என்று பொருள். 'பிரபந்தம்' என்றால் பாடல்களின் தொகுப்பு என்று பொருள். சைவத்தில் எப்படி நான்கு சமயக் குரவர்கள் என்றும் 63 நாயன்மார்கள் என்றும் கூறுகிறோமோ, அதுபோல வைணவத்தில் பன்னிரு ஆழ்வார்கள்! இவர்கள் வெவ்வேறு காலத்தவர்கள். இதில் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான ஆண்டாள் நாச்சியாரும் ஒருவர்.

6ஆம் நூற்றாண்டு முதல் 9-ஆம் நூற்றாண்டுக்குள் இயற்றப்பட்ட இந்தப் பாடல்களை, 10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நாதமுனிகள், 'ஆழ்வார்கள் அருளிச் செயல்கள்' எனத் தொகுத்தார். பின்னர் வந்த மணவாளமாமுனிகள், நாதமுனிகள் தொகுத்த ஆழ்வார்களின் பிரபந்தத்தோடு, திருவரங்கத்தமுதனார் செய்த இராமானுச நூற்றந்தாதியையும் சேர்த்து, 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என அழைக்கும்படி அருளினார்.

இந்நூல், 'ஆன்ற தமிழ் மறை','ஐந்தாவது வேதம்', 'திராவிட வேதம்', 'திராவிடப் பிரபந்தம்' என்றெல்லாம் போற்றப்படுகிறது. மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசி விழா அனைத்து வைணவத் தலங்களிலும் விமர்சையாகக் கொண்டாடப்படும் அல்லவா? இது திருவரங்கத்தில் **பகல் பத்து, இராப்பத்து** என இருபது நாட்கள் கொண்டாடப்படும். இந்த 20 நாட்களும் திருவரங்கத்துப் பெருமாள் இந்த 4000 திவ்யபிரபந்த பாடல்களை கேட்டு மகிழ்கிறார். தினமும் எம்பெருமாள் முன்னர் அறையர்கள் அபிநயம் செய்து இந்தத் தமிழ் பாடல்களை பாடுவர். இனி நாம் அந்த 12 ஆழ்வார்களைப் பற்றியும் அவர்கள் பாடிய பாடல்கள் சிலவற்றையும் பார்ப்போம்.

### 1) பொய்கையாழ்வார்

இவர் ஆழ்வார்களில் மூத்தவர். உலகையே விளக்காகப் பாவித்து கடல் நீரையே எண்ணையாகவும் கடற்பரப்பின் விளிம்பிலே தோன்றும் சூரியனைத் திரியாகவும் பாவித்து விளக்கேற்றியவர். இதனால் அக இருளே நீங்குமல்லவா?

**வையம் தகளியா வார்கடலே நெய்யாக**<br>
**வெய்ய கதிரோன் விளக்காகச் – செய்ய**<br>
**சுடர்ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை**<br>
**இடர்ஆழி நீங்குகவே என்று**

### 2) பூதத்தாழ்வார்

அன்பு விளக்காகவும், ஆர்வமே நெய்யாகவும், சிந்தையே திரியாகவும் கொண்டு ஞான விளக்கை ஏற்றி நாராயணனைத் துதித்தவர் பூதத்தாழ்வார்.

**அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக**<br>
**இன்புருகு சிந்தை யிடுதிரியா – நன்புருகி**<br>
**ஞானச் சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு**<br>
**ஞானத் தமிழ்புரிந்த நான்**

### 3) பேயாழ்வார்

**திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் – திகழும்**<br>
**அருக்கன் அணிநிறமும் கண்டேன் – செருக்கிளரும்**<br>
**பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்**<br>
**என்னாழி வண்ணன்பால் இன்று**

என்று தொடங்கி மூன்றாம் திருவந்தாதி பாசுரங்களை ஸ்ரீ பேயாழ்வார் மங்களாசாசனம் பண்ணினார்.

### 4) திருமழிசை ஆழ்வார்

தமிழ் மொழியிலுள்ள பாவினங்களுள் ஒன்றான விருத்தத்தினால் ஆகியவை இவரது பாடல்கள். இனிய ஓசையையுடையவை அதனால் சந்த விருத்தம் எனப்பட்டது.

ஆறுமாறு மாறுமாய
ரைந்துமைந்து மைந்துமாய்,
ஏறுசீரி ரண்டுமூன்று
மேழுமாறு ஞானமாகி
வேறுவேறு ஞானமாகி
மெய்யினோடு பொய்யுமாய்,
ஊறொடோசை யாயவைந்து
மாயஆய மாயனே!

என்ன, ஓசை நயத்தில் நனைந்தீர்களா? பொருள் புரிந்ததா?

### 5) நம்மாழ்வார்

ஆழ்வார்களில் சிறப்பிடம் பெற்றவர் இவர். சடகோபன் என்ற பெயராலும் அறியப்படுபவர். 4000 திவ்ய பிரபந்தத்தில் மிக அதிகமாக 1296 பாடல்களைப் பாடியவர். பக்திச் சுவை நனி சொட்டும் திருவாய் மொழியைப் பாருங்கள்:

உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவன் அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன் அவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே

### 6) மதுரகவி ஆழ்வார்

இவர் 11 பாடல்களே பாடியுள்ளார். இவர் பெருமாளைப் பாடவில்லை. பெருமாளைப் பாடிய நம்மாழ்வரின் பெருமையைப் பாடியுள்ளார்.

நாவினால் நவற்று இன்பம் எய்தினேன்
மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே
கண்ணிநுண் சறுத்தாம்பு தேவு மற்றறேயன்
குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித் திரிவனே

### 7) குலசேகர ஆழ்வார்

இவர் சாதாரண மாந்தராய் மண்ணில் பிறக்கவில்லை. மூவேந்தர்களில் ஒருவரான சேரப் பேரரசின் செல்வக் குமரனாய் அவதரித்தார். ராமபிரானின் மீது

அபரிமிதப் பற்றுக் கொண்டிருந்தார். பெருமாளை மட்டுமே இவர் வணங்கியதால் குலசேகரப் பெருமாள் என்றும் அழைக்கப்பட்டார்.

பெருமாள் திருமொழியில் பத்து பாசுரங்கள் ராமபிரானுக்காகப் பாடப்படும் தாலாட்டுப் பாடல்களாக அமைந்துள்ளன. இதனிலுள்ள முதற்பாடல் தெய்வ பக்தி உள்ள அத்தனை தமிழ்த்தாய்மார்களும் தங்கள் சேய்களுக்காகப் பாடியிருக்கக் கூடிய பாடல்:

**மன்னு புகழ் கௌசலை தன் மணிவயிறு வாய்த்தவனே**
**தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தாய் செம்பொன்சேர்**
**கன்னி நன்மா மதில் புடைசூழ் கணபுரத் தென் கருமணியே!**
**என்னுடைய இன்னமுதே இராகவனே! தாலேலோ**

திருமலை ஆண்டவன் சன்னிதியில் ஆண்டவனின் பவளவாயை எக்காலும் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டுமென்றும், அதற்காகத் தன்னை அவர் கோயில் வாசற்படியாகவே வைத்துக்கொள்ள வேண்டுமென்றும் குலசேகரர் மனமுருக வேண்டிக்கொண்ட பாசுரம்:

**செடியாய வல்வினைகள் தீர்க்குந்திருமாலே**
**நெடியானே வேங்கடவா! நின் கோயிலின் வாசல்**
**அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்**
**படியாய்கிடந்துன் பவளவாய் காண்பேனே**

இதனால் இன்றும் வெங்கடேசப் பெருமாளின் வாசற்படிக்கு குலசேகரப்படி என்ற பெயர் வழங்குகிறது.

### 8) பெரியாழ்வார்

திருவில்லிப்புத்தூரில் கோயில் கொண்டுள்ள வடபத்திரசாயி பெருமாளுக்கு அன்றலர்ந்த மலர்களைப் பறித்துப் பூமாலையாகச் சாற்றுவதைக் கைங்கர்யமாகக் கொண்டிருந்தார். ஆழ்வார்களில் ஒரே பெண் ஆழ்வாரான ஆண்டாளின் வளர்ப்பு தந்தையானவர். ஆண்டாளைத் திருவரங்கம் உறையும் அரங்கனுக்கு மணம் முடித்துக் கொடுத்ததன் மூலம் அரங்கனுக்கே மாமனார் ஆனவர். இறைவனுக்கே கண்ணேறு கழிக்க முயன்றதால் இவரை ஆழ்வார்களில் பெரியவர் எனும் பொருள்பட "பெரியாழ்வார்" என அரங்கன் அழைக்க, பின்னர் இதுவே இவர் பெயராகிப்போனது.

இவர் அருளிச் செய்த திருப்பல்லாண்டு 12 பாடல்களால் ஆனது. கேட்டுக் கேட்டு இன்புறுத்தக்கது.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயி ரத்தாண்டு
பலகோடி நூறாயிரம் மல்லாண்ட திண்தோள்
மணிவண்ணா! உன்செவ்வடி செவ்விதிருக் காப்பு (1)

அடியோ மோடும்நின் னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறை யும்சுட ராழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும் அப் பாஞ்சசன்னியமும் பல்லாண்டே (2)

இன்றும் சாற்றுமறை எனும் வைணவ தினசரி வழிபாட்டின் தொடக்கத்திலும் முடிவிலும், வைணவக் கோயில்களின் திருவிழாக்களில் சுவாமி புறப்பாட்டின்போதும் புறப்பாடு முடிந்து திருக்கோயில் திரும்பும்போதும், பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு பாடப்பட்ட பின்னரே சுவாமியைத் திருக்கோயிலுக்குள் எழுந்தருளச் செய்கின்றனர்.

### 9) ஆண்டாள் நாச்சியார்

பெரியாழ்வாரால் ஒரு குழந்தையாகத் துளசிச் செடியின் கீழ் கிடந்தபோது, ஆண்டாள் கண்டெடுக்கப்பட்டு அவராலேயே வளர்க்கப்பட்டாள்.

இறைவனுக்கு அணிவிப்பதற்காகப் பெரியாழ்வார் தொடுத்து வைத்திருக்கும் மாலைகளை ஒவ்வொரு நாளும் அவருக்குத் தெரியாமல் தான் அணிந்து கண்ணனுக்கு ஏற்றவளாகத் தானிருக்கிறோமா என்று கண்ணாடியில் பார்த்து மகிழ்ந்து பின்னர் திரும்பவும் கொண்டுபோய் வைத்து வந்தார். இதனால் கோதை சூடிய மாலைகளே இறைவனுக்கும் சூட்டப்பட்டன.

ஒருநாள் இதனை அறிந்து கொண்ட பெரியாழ்வார் கோதையைக் கடிந்துகொண்டார். அவள் சூடிய மாலையை ஒதுக்கிவிட்டுப் புதிய மாலை தொடுத்து இறைவனுக்கு அணிவித்தார். அன்றிரவு இறைவன் அவரது கனவில் தோன்றிக் கோதை அணிந்த மாலைகளே தனக்கு உவப்பானவை எனவும் அவற்றையே தனக்குச் சூடவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். இதனாலேயே **"சூடிக்கொடுத்த சுடர்க்கொடி"** என்றும் **"இறைவனையே ஆண்டவள்"** என்ற பொருளில் ஆண்டாள் என்றும் போற்றப்படுகிறார்.

ஆண்டாள் தனது 15ஆம் வயதில் இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்கு முன் திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்னும் இரண்டு நூல்களை இயற்றியுள்ளார்.

சிற்றம் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள் கேளாய்;
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்திற் பிறந்து நீ

குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது;
இற்றைப் பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு

உற்றோமே ஆவோம்; உனக்கே நாமாட்செய்வோம்;
மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.

### 10) தொண்டரடிப் பொடியாழ்வார்

திருவரங்கத்திலேயே வாழ்ந்திருந்து அத்தல இறைவனாகிய அரங்கநாதனுக்கு பாமாலை மற்றும் பூமாலை சாற்றும் சேவையைத் தன் வாழ்நாள் முழுதும் சிரமேற்கொண்டு செய்து வந்தவர் இவர். 45 பாசுரங்களைஉள்ளடக்கிய திருமாலை மற்றும் 10 பாசுரங்களை உள்ளடக்கிய திருப்பள்ளி எழுச்சி போன்ற நூல்களை எழுதியுள்ளார். திருப்பள்ளி எழுச்சியின் பாசுரங்கள் ரங்கநாதரைத் துயில் எழுப்புவதற்காகப் பாடப்பட்டுள்ளன.

காலைப்பொழுது விடிவதை வெகு இயல்பாக நம் கண்முன் காட்சிப்படுத்தும் இப்பாடல்களில் முதல்பாடல் இதோ :

கதிரவன் குணதிசைச் சிகரம் வந்து அணைந்தான்!
கனஇருள் அகன்றது, காலை அம் பொழுதாய்
மது விரிந்து ஒழுகின மாமலர் எல்லாம்
வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இரும் களிற்றீட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்று உளது எங்கும்,
அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே!

### 11) திருப்பாணாழ்வார்

இசைக்குப் பெயர்பெற்ற பாணர் குலம் காலக்கிரமத்தில் தீண்டாக் குலமாகக் கருதப்பட்டது. அக்குலத்தில் பாண் பெருமாள் எனும் பெயரோடு ஆழ்வார்கள் வரிசைக் கிரமத்தில் பதினோராம் ஆழ்வாராகப் பிறந்த இவர் திருமால் மீது மிகுந்த பக்தி கொண்டிருந்தார். எனினும், தன் குலத்தின் பொருட்டு திருவரங்கத்தின் உள்ளே நுழைவதற்கும் அம்மண்ணை மிதிப்பதற்கும் அஞ்சி காவிரியின் மறுகரையில் இருந்தவாறே பண் இசைத்துத் திருவரங்கனைப் பாடிவந்தார்.

திருப்பாணாழ்வாரின் அமலனாதிபிரான் எனப்படும் பத்துப் பாடல்களிலிருந்து திருமாலின் மார்பைப் பற்றி ஒரு பாடல் :

பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி யென்னுள் புகுந்தான்
கோரமாதவம் செய்தனன் கொல்? அறியேன் அரங்கத்தம்மான் திரு
வாரமார்பதன் றோஅடியேனை யாட்கொண்டதே

## 12) திருமங்கை ஆழ்வார்

ஆதியில் இவர் சோழ மன்னனுக்குப் படைத்தலைவனாக இருந்தார். ஒருமுறை போர்க்களத்தில் இவருடைய வீரத்தைக் கண்ட அரசன் இவரைச் சோழதேசத்தின் 'திருமங்கை' நாட்டின் மன்னானாக்கினான். அன்று முதல் இவர் "திருமங்க மன்னன்" என அழைக்கப்பட்டார்.

திருமங்கையாழ்வார் வதரி, சாளக்கிராமம், நைமி சாரண்யம், சிங்கவேள் குன்றம் திருமலை என்று வடக்கு தொட்டு தெற்கு நோக்கி வரிசைக் கிரமமாக மங்களாசாசனம் செய்து வந்தவர்.

வாடினேன் வாடிவருந்தினேன் மனத்தால் பெருந்துயரிடும்பையில் பிறந்து,
கூடினேன் கூடியிளையவர்தம்மோடு அவர்தரும் கல்வியே கருதிஓடினேன்
ஓடியுய்வதோர் பொருளால் உணர்வெனும் பெரும் பதம் தெரிந்து,
நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னும் நாமம்.

குலம்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயராயினவெல்லாம்,
நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும்,
வலந்தரும்மற்றுந்தந்திடும்பெற்ற தாயினு மாயினசெய்யும்,
நலந்தருஞ்சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணா எனும் நாமம்

## அரங்கனையும் தமிழையும் கொண்டாடுவோம்

பன்னிரு ஆழ்வார்களின் தமிழ் திகட்டாத அமிழ்தம் போன்றது. பக்திச்சுவையும் தீந்தமிழ்ச் சுவையும் ததும்பி நிற்பது. அதை நாமும் அனுபவித்துக் கொண்டாடுவோமாக! நலந்தரும் சொல் நாராயணா எனும் நாமத்தைக் கூறுவோமாக பல்லாண்டு! பல்லாண்டு!!

# ஒப்பில்லா அருள்தரும் ஒன்பது நகரக் கோயில்கள்



உமா பாண்டியன்

மலையாண்டி விநாயகனே
கருணை வடிவானவனே
உன்னுடைய பிள்ளைகள் அனைவரையும்
எந்நாளும் காத்து அருள்புரிபவனே
உலகாளும் நாயகனே
எங்கள் குறைதீர்த்து வேண்டியதைத் தருபவனே
உன் பாதம் சரணடைந்தோம்
என்நாளும் துணையிருப்பாய்

ஒன்பது நகரக் கோயில்களைச் சார்ந்தே நகரத்தார் பெருமக்கள் தங்கள் வாழ்க்கையினை அமைத்து வாழ்ந்தார்கள். தங்களின் வருமானம் வளர்ந்து செழித்த பொழுதெல்லாம் நகரக் கோயில்களுக்கு என ஒரு தொகையை ஒதுக்கி, கோயில் மேம்பாட்டிற்குச் செலவு செய்து வந்தவர்கள் நகரத்தார்கள். தங்கள் குடும்பங்களில் சுப காரியங்கள் நடைபெறும் அனைத்திலும் தாம் சார்ந்த நகரக் கோயிலில் அருள்பாலிக்கும் ஆண்டவனின் சன்னிதானத்தில் வைத்து அவனது திருவருளைப் பெற்றவர்கள். அக்கோயில்களில் இருந்து வரும் மாலைகளைத் தாம் மணமக்களுக்கு முதன் முதலாகத் திருமணத்தன்று அணிவித்து மகிழும் பெருமக்கள். இக்கோயில்களை ஒட்டியே ஒன்பது பிரிவினர்களாகவும், கோத்திரத்தால் (உட்பிரிவு) இருபத்திரண்டு பிரிவினராகவும் பிரிந்து இணைபவர்கள், ஈடு இல்லா நகரத்தார் பெருமக்கள், ஒன்பது நகரக் கோயில்களைப் பற்றிய சில விவரங்கள் கீழே தந்துள்ளேன்.

**1. நேமம் கோயில்**

குன்றக்குடியில் இருந்து கீழச்சிவல்பட்டிக்கு செல்லும் வழியில் நேமம் என்னும் சிற்றூரில் அமைந்துள்ளது, இத்திருக்கோயில். நியமம் என்ற சொல்லுக்குக் கோயில் என்ற பொருள் உண்டு. நியமம் என்ற பெயரே மருவி நாளடைவில் நேமம் என்று வழங்கப்பட்டது. இக்கோயில் செயங்கொண்ட மன்னரால் கட்டப்பட்டதால் இறைவனுக்குச் செயங்கொண்ட சோழீசர் என்ற பெயர் ஏற்பட்டது.

நகரத்தார் பெருமகனார் பாடுவார் முத்தப்ப செட்டியார் இக்கோயிலைச் சார்ந்தவர். அவர் செயங்கொண்ட சோழீசர் மீது பிள்ளைத்தமிழ், பதிற்றுப்பத்தந்தாதி, ஊசல், சதகம் போன்ற நூல்களைப் பாடியுள்ளார்.

அண்மையில் இத்திருக்கோயிலுக்குக் குடமுழுக்குச் செய்து மகிழ்ந்துள்ளனர் நகரத்தார்கள்.

**இறைவன் பெயர் : செயங்கொண்ட சோழீசர்**

**இறைவி பெயர் : சவுந்தர நாயகி**

**2. வைரவன் கோயில்**

காரைக்குடியில் இருந்து திருப்பத்தூர் செல்லும் வழியில், பிள்ளையார்பட்டியை அடுத்துள்ளது இத்திருக்கோயில்.

இக்கோயில் சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய மிகப்பெரிய கோயிலாகும்.

இக்கோயிலைச் சேர்ந்த பிரிவினர் முறையே சிறுகுளத்தூருடையார், கழனிவாசலுடையார், மருதேந்திர புரமுடையார் ஆகிய மூவராவர். இவர்கள் முறையே பெரிய வகுப்பு, தெய்யனார் வகுப்பு, பிள்ளையார் வகுப்பு என்னும் மூன்று பிரிவினராக உள்ளனர்.

தருமபுரம் ஆதீன வித்துவான் சேந்தன்குடி வி. நடேச கவிராயர் "வயிரவன் கோயில் புராணம்" இயற்றியுள்ளார்.

**இறைவன் பெயர் : வளரொளிநாதர்**
**இறைவி பெயர் : வடிவுடையம்மை**

**3. மாத்தூர்க் கோயில்**

இத்திருக்கோயில் இலுப்பைக்குடிக்கு வடகிழக்கில் இரண்டு மைல்கள் தொலைவில் அமைந்துள்ளது. இது சித்தர்களால் வணங்கப்பட்ட சிறந்த சிவத்தலமாகும். சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தது இத்திருக்கோயில்.மாற்றூர் என்ற பெயரே நாளடைவில் மருவி மாத்தூர் என்று வழங்கப்படுகிறது.

இக்கோயிலைச் சார்ந்தவர்கள் ஏழு பிரிவினராக வாழ்கின்றனர். அவர்கள் முறையே உறையூருடையார், அரும்பாக்கூருடையார், மணலூருடையார், மண்ணூருடையார், கண்ணூருடையார், கருப்பூருடையார், குளத்தூருடையார் என்று வழங்கப்படுகின்றனர்.

**இறைவன் பெயர் : ஐநூற்றீசர்**
**இறைவி பெயர் : பெரிய நாயகி**

### 4. இளையாத்தங்குடிக் கோயில்

இத்திருக்கோயில் கீழச்சீவல்பட்டியில் இருந்து ஆவினிப்பட்டி செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இளையாற்றங்குடி என்ற பெயரே மருவி நாளடைவில் இளையாத்தங்குடி என்று வழங்கப்படுகிறது.

பூம்புகார் நகரில் இருந்து புதுவாழ்வு அமைத்துக்கொள்ளப் புறப்பட்ட தனவணிகர்கள் பாண்டிய நாட்டின் இளையாற்றங்குடியில்தான் முதலில் ஒன்றாக வந்து தங்கினார்கள். பின்புதான் பல கோயில் பிரிவினராகப் பிரித்து சென்றார்கள்.

இத்திருக்கோயிலும் சிற்பத்திறன் மிக்கது. நகரத்தார்கள் கோடிக்கணக்கில் பணத்தைச் செலவிட்டுக் குளங்களையும், நந்தவனங்களையும், பசுமடங்களையும், விடுதிகளையும் அமைத்தனர்.

**இறைவன் பெயர் :** கைலாச நாதர்
**இறைவி பெயர் :** நித்திய கல்யாணி

### 5. சூரைக்குடிக் கோயில்

இத்திருக்கோயில் பள்ளத்தூரில் இருந்து குன்றக்குடி செல்லும் சாலையில் இரண்டு மைல்கள் தொலைவில் அமைந்துள்ளது.

சூரைக்குடி என்ற பெயர் நாளடைவில் மருவி "சூரக்குடி" என்று அழைக்கப்படுகிறது. நகரத்தார் பெருமக்களால் இவ்வூரில் பசுமடம், நந்தவனம், தங்கும் விடுதி, ஊருணி ஆகியவை ஏற்படுத்தப்பட்டுள்ளன. 1898ஆம் ஆண்டு திருப்பணிகள் செய்து இத்திருக்கோயிலுக்குக் குடமுழுக்கு நடத்தியவர்கள் நகரத்தார்களே.

**இறைவன் பெயர் :** தேசிக நாதர்
**இறைவி பெயர் :** ஆவுடைநாயகி

### 6. இலுப்பைக்குடிக் கோயில்

இத்திருக்கோயில் காரைக்குடியில் இருந்து மாத்தூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. நகரத்தார்களால் திருப்பணி செய்யப்பட்டுக் குடமுழுக்கு நடத்தப்பட்டது. மேலும் நந்தவனம், பசுமடம், தங்கும்விடுதி, ஊருணி ஆகியவற்றையும் அமைத்த பெருமை நகரத்தாரையே சாரும்.

இத்திருக்கோயிலைச் சேர்ந்த நகரத்தார்கள் அனைவரும் இவ்வூரில் குடியிருந்த பிறகுதான் பிற ஊர்களுக்குப் பரவிச் சென்று வாழ்ந்து வருகிறார்கள் என்று தெரியவருகிறது.

**இறைவன் பெயர் :** தான்தோன்றியீசர்
**இறைவி பெயர் :** சவுந்தரநாயகி

## 7. வேலங்குடிக் கோயில்

இத்திருக்கோயில் கோட்டையூருக்கு அருகில் அமைந்துள்ளது. இது தொன்மை வாய்ந்த திருக்கோயிலாகும். 1937ஆம் ஆண்டு நகரத்தார்களால் சிறப்பாகக் குடமுழுக்கு விழா நடத்தப்பட்டது. இதே ஆண்டில் சிவன் கோயிலின் மேற்கே மகாலட்சுமி உடனாய தேசிக நாராயணப் பெருமாள் கோயிலும் திருப்பணி செய்யப்பட்டுக் குடமுழுக்கு விழா நடத்தப்பட்டது.

**இறைவன் பெயர் : கண்டீசுவரர்**
**இறைவி பெயர் : காமாட்சியம்மை**

## 8. இரணியூர் கோயில்

இத்திருக்கோயில் கீழைச்சிவல்பட்டிக்கு அருகில் அமைந்துள்ளது.

இது பழமை மிகுந்த பெருமையுடைய திருக்கோயில். இத்திருக்கோயிலின் கர்பக்கிருகத்தின் நாற்புறச் சுவர்களிலும், கோயிலின் வெளிப்புறத்திலும் எண்ணற்ற கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவற்றில் நகரத்தார்கள் செய்த அறச்செயல்கள் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளன.

1944ஆம் ஆண்டு 12 லட்ச ரூபாய் செலவில் திருப்பணி செய்யப்பட்டுக் குடமுழுக்கு விழா நடைபெற்றது.

**இறைவன் பெயர் : ஆட்கொண்டநாதர்**
**இறைவி பெயர் : சிவபுரந்தேவி**

## 9. பிள்ளையார்பட்டிக் கோயில்



இத்திருக்கோயில் காரைக்குடி – திருப்பத்தூர் நெடுஞ்சாலையில் குன்றக்குடிக்கும் வயிரவன்பட்டிக்கும் இடையில் அமைந்துள்ளது.

பல்லவ மன்னர்கள் காலத்தில் அவர்களால் திருப்பணி செய்யப்பட்ட குடைவரைக் கோயிலாகும். இது சுமார் 1300 ஆண்டுகளுக்கு முற்பட்டது என வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். பிள்ளையார்பட்டிக்கு மருதூர், இராச நாராயணபுரம் என்ற பெயர்களும் உண்டு என்பது பழங்கல்வெட்டுகள் மூலம் தெரிய வருகிறது.

இத்திருக்கோயிலில் ஆறடி உயரத்தில் அமைந்த வலம்புரி கற்பக விநாயகப் பெருமான், தம்மை வந்து கண்டு தரிசிப்பவர்கள் அனைவருக்கும் அருள்பாலித்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

சிவத்தலமான இத்திருக்கோயிலில் விநாயகர் சன்னிதியே முக்கியமாக விளங்குகிறது. ஆவணி மாதம் நடைபெறும் திருவிழாவான விநாயகர் சதுர்த்தி அன்று மிகப்பெரிய அளவில் பெண்களும், ஆண்களும் வந்து விநாயகரை வழிபட்டுச் செல்கிறார்கள்.

கற்பக விநாயகரைக் கண்டு வழிபட வருகிற மக்களின் எண்ணிக்கை அதிகரிக்கவே, தமிழக அரசு இத்தலத்தை சுற்றுலா மையமாக அறிவித்துள்ளது.

இறைவன் பெயர்கள் : திருவீசர், மருதீசர்
இறைவி பெயர்கள் : சிவகாமவல்லி, வாடா மலர் மங்கை
முக்கிய சன்னதி : கற்பக விநாயகர் சன்னதி

## நாட்டுக்கோட்டை நகரத்தார் ஒன்பது நகர கோயில்கள்



# தூரிகையில் செட்டிநாடு வீடுகள்





**L. செந்தில் குமரன்**

S/o L.PR. லெட்சுமணன்
க.சா. ஊரணி தெரு
வலையபட்டி





# ஆன்மீகம் ஓர் சிந்தனை

**எஸ் நாகப்பன்**
செயலாளர், குடமுழுக்கு விழாக்குழு

ஆதிமனிதன் இயற்கையோடு வாழும்போது இயற்கையின் சீற்றங்களைக் கண்டு அச்சமுற்றான். இடியைப் பார்த்து மின்னலைப் பார்த்து பேரழிவுகளைப் பார்த்து அச்சப்பட்டு அதன்மேல் இனம் புரியாத பக்தி கொண்டான். அதன் வாயிலாக மரம், கல் என்று அவனுக்குத் தோன்றியதை வைத்து வழிபட ஆரம்பித்தான். அதற்காக தான் உண்ணும் இறைச்சி வகைகளை வைத்துப் படையலிட்டான். இவைதான் பழங்கால பக்தி என்பது.

பரிணாம வளர்ச்சியில் வன்முறையில் பக்தி செலுத்திக் கொண்டு வரைமுறை இல்லாமல் இருந்த கால கட்டத்தில் ஆதிசங்கரர் போன்றோர் இவைகளை ஒழுங்குபடுத்த எண்ணினர். ஆகையால்தான் வேதங்கள், உபநிடதங்கள் உருவாக்கப்பட்டு அதன் மூலம் ஆலயங்கள் நிர்மாணிக்கப்பட்டு அங்கே மனித உருவங்களே கடவுளாக பிரதிஷ்டை செய்யப்பட்டு, ஒழுங்குபடுத்தப்பட்டன.

பக்தி என்பது வேறு ஆன்மீகம் என்பது வேறு. ஆன்மீகம் என்பது ஒருவரின் எண்ணங்கள், உணர்ச்சிகள் மற்றும் உள்ளார்ந்த போக்குகளை அறிவூட்டுவதை கையாள்கிறது. கடவுள் மீது நம்பிக்கை இல்லாதவன் ஆன்மீகத்தில் இருக்க முடியாது. கடவுள் மீது மட்டும் நம்பிக்கை உள்ளவர்களும் ஆன்மீகவாதி ஆகிவிட முடியாது. அண்ட சராசரங்களைத் தன்னகத்தே வைத்துச் செயல்படுகின்ற ஓர் சக்தி, மகா சக்தி உண்டு என்ற எண்ணம் தான் ஆன்மீகத்தின் சாராம்சம்.

நீங்கள் உங்களது உடல், மனம், உணர்வுகள் மற்றும் சக்தி நிலைகளை ஒரு குறிப்பிட்ட முதிர்ச்சி நிலைக்கு எடுத்து சென்றால் ஏதோவொன்று உங்களுக்குள் மலரும். இதுதான் ஆன்மீகம். படைப்பின் மூலத்தை அறிந்து கொண்டால் நீங்கள் ஆன்மீகத்தில் இருக்கிறீர்கள்.

அறுக்கப்படும் மரம் தான் அழகான ஜன்னலாகிறது
இடிக்கப்படும் நெல்தான் உமிநீங்கி அரிசியாகிறது
ஏற்றப்படும் விளக்குதான் இருள்நீக்கி ஒளிதருகிறது
செதுக்கப்படும் பளிங்குதான் செம்மை பெற்று சிலையாகிறது
புதைக்கப்படும் விதைதான் மண்ணைவிட்டு மரமாகிறது

தொடர்ந்து முயலும் வீரன்தான் சரித்திரம் படைத்து வாழ்கிறான். அதுபோல ஆன்மீகமும் தொடர் முயற்சி சம்பந்தமானது.

உணவு, உடை, உல்லாசம், கேளிக்கை, பாசம், அன்பு, காதல், கல்வி இவையெல்லாம் தரும் உச்சகட்ட இன்பத்தை விட நிலையான ஒரு நெகிழ்ச்சியைத் தருவது ஆன்மீகம். ■

# பருகும் நீரால் பரவும் நோய்களும் தடுப்புமுறைகளும்



**கரு. சுந்தரமகாலிங்கம்**
சுகாதார அலுவலர் (ஓய்வு)
துணைத்தலைவர், மலர்க்குழு

தூய தண்ணீர் (Portable Water) என்பது நிறமற்றது, வாசனையற்றது, சுவையற்றது, சுத்தரிக்கப்படாத நீரை குடிப்பதால் பரவும் நோய்கள் டைபாய்டு, மஞ்சள் காமாலை, வாந்தி பேதி மற்றும் குடற்புழு பாதிப்புகள்.

**பாதுகாத்திட பத்து கட்டளைகள் :**

1. குடிநீரை நன்றாகக் காய்ச்சி (Well Boiled) வடிகட்டி குடிப்பதுசாலச்சிறந்தது.
2. அரசு மக்களுக்கு வழங்கும் குடிநீரில் குளோரின் கலந்திருக்க வேண்டும். நுகர்வோருக்கு வழங்கும் போது 0.2 ppm குளோரின் இருக்க வேண்டும்.
3. Pure it, Aqua Guard போன்ற R.O மற்றும் UV வசதியுள்ள (Filters) முழுதும் தானியங்கி கருவிகள் பயன்படுத்தலாம்.
4. Bisleri, Team, Aquafina, Baily போன்ற தரமான நிறுவனங்களின் I.S.I தகுதியுள்ள தண்ணீர் பாட்டில்கள் மட்டும் உபயோகிக்கலாம்.
5. வேறு கேன் தண்ணீர் பயன்படுத்தவதும் நன்றன்று.
6. காலரா கிருமிகளைப் பரப்பும் ஏஜெண்ட், ஈக்கள். எனவே ஈக்களை ஒழிக்க வேண்டும். தெருவில் விற்கும் அழுக்கு, தூசி, ஈ மொய்த்துப் பாதித்த உணவுகளை வாங்கி உண்ணக்கூடாது.
7. டைபாய்டு, மஞ்சள் காமாலை தடுப்பு ஊசி போட்டுக் கொள்ளலாம்.
8. குழந்தைகளுக்கு 6 மாதத்திற்கு ஒருமுறை குடற்புழு நீக்க மருந்து கொடுக்க வேண்டும்.
9. ஒவ்வொருமுறை சாப்பிடும் முன்பும் கைகளை சோப்பு போட்டு நன்கு கழுவி சுத்தப்படுத்த வேண்டும்.
10. நிலத்தடி நீர் (Bore Water), ஊரணி, ஆற்று நீர், கேன் வாட்டர் முதலியவற்றை நன்கு காய்ச்சி வடிகட்டாமல் குடிக்கக்கூடாது

இயன்றவரை மேற்கூறியவற்றைக் கடைப்பிடித்தால் பெரும்பாலும் நீரால் பரவும் நோய்களைக் கட்டுப்படுத்தலாம்.

# கொசு பரப்பும் நோய்களைத் தடுப்போம்

**கரு. சுந்தரமகாலிங்கம்**
சுகாதார அலுவலர் (ஓய்வு)
துணைத்தலைவர், மலர்க்குழு

கருதிக்கருதி கவலைப்படுவோர் (நோய்பற்றி) கவலைக் கடலை களையும் வழி முறைகள் தடுப்பு மற்றும் கட்டுப்படுத்துதல்:

மலேரியா அனாபலிஷ் பெயருடைய பெண் கொசு கடிப்பதால் ஏற்படும். ஆண் கொசு ரொம்ப நல்ல கொசு. அது கடித்தாலும் மலேரியா வராது. பெரும்பாலும் மாலை முதல் இரவு முழுவதும் மட்டுமே இந்தக் கொசு கடிக்கும். இவைகள் தேங்கும் மழைநீர் அல்லது நாம் சேகரித்து வைத்திருக்கும் நல்ல தண்ணீர், காற்றுப்புகாமல் மூடப்படாத, இடைவெளி உள்ள மேல்நிலை, கீழ்நிலைத் தொட்டியில் உள்ள நல்ல தண்ணீரில் கொசுப்புழு உற்பத்தியாகி முழுக் கொசுவாக வளர்ச்சியடையும்.

எனவே,

1. வீட்டிலும், வீட்டைச் சுற்றிலும், திறந்தவெளி மாடியிலும், தண்ணீர் தேங்கி இருக்காமல் பார்த்துக் கொள்ளவும். 48 மணி நேரத்திற்கு மேல் தண்ணீர் தேங்கினால் கொசுப்புழு உற்பத்தியாகலாம். தொட்டியில் தண்ணீர் சேகரித்து வைத்திருந்தால் 2 நாளுக்கொரு முறை மாற்ற வேண்டும்.

2. மொட்டை மாடியில் டயர், பூந்தொட்டி, தேங்காய் மூடி, ஆட்டுஉரல் மற்றும் எந்தப் பொருளிலும் தண்ணீர் தேங்கக் கூடாது. உடனே கவிழ்த்து விடவும்.

3. கிணறுகள், மேல்நிலைத்தொட்டி, D.H.T, கீழ்நிலை் தொட்டி Pump முதலியவற்றை இடைவெளியின்றி காற்றுப் புகாத அளவுக்கு நன்றாக மூடி வைக்க வேண்டும். (Hermaticaly sealed) Airvent பைப்பை நைலான் வலை துணியால் மூடி கட்டி வைக்கவும்.

4. மாலை சுமார் 5.00 மணி முதல் இவ்வகைக் கொசு வீட்டிற்குள் புகும். எனவே மாலை 5.00 மணிக்கு மேல் வீட்டிலுள்ள எல்லா ஜன்னல்கள், கதவுகளை மூடிவிட்டு Allout போன்ற தரமான திரவ நிலை கொசு விரட்டிக் கருவியை ஆன் செய்து விட்டு இருட்டிய பிறகு சுமார் 7.00 மணிக்கு மீண்டும் ஜன்னல் கதவுகளைத் திறந்து விடவும்.

5. இரவு தரமான கொசு வலை பயன்படுத்தலாம்.

6. மின்விசிறியை (Fan) நன்கு உபயோகப்படுத்தவும். நல்ல காற்றோட்டம் இருந்தால் கொசுக்கள் குறையும்.

7. தூங்கும் போது, கால், கைகளைப் போர்த்திக் கொண்டு படுக்கலாம். அந்தப் பகுதியில்தான் கொசு அதிகம் கடிக்கும்.

8. தூங்கும் போது கை, கால் பகுதியில் ஓடோமாஸ் போன்ற இயற்கை மூலிகையால் தயாரிக்கப்பட்ட களிம்பு (Paste) தடவிக் கொள்ளலாம்.

9. A/C கருவிகளில், பூந்தொட்டிகளில் கூட தண்ணீர் தேங்காமல் பார்க்க வேண்டும்.

டெங்கு (Dengu) ஏடிஸ் என்ற பெண் கொசு கடித்தால் ஏற்படும். இது பகல் நேரம் முழுவதும் கடிக்கும். பெரும்பாலும் இரவில் கடிப்பதில்லை. கடுமையான ஜுரம் (காய்ச்சல்), தலைவலி அறிகுறி. உடனே டாக்டரிடம் மருத்துவம் செய்து கொள்ள வேண்டும். நோய் எதிர்ப்பு சக்தி தரும் இரத்த அணுக்கள் (Platelets) எண்ணிக்கை குறையாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இதற்கும் மேற்குறிப்பிட்டுள்ள தடுப்பு முறைகள் வரிசை எண் 1 முதல் 3 மற்றும் 6 முதல் 8 பின்பற்றலாம்.

சிக்கன்குனியா, இதுவும் கொசு கடிப்பதால் ஏற்படும் கடுமையான காய்ச்சல், தலைவலி, அதிக அளவில் மூட்டுகளில் வலி ஏற்படும். உடனே டாக்டரிடம் காட்டி மருத்துவம் செய்ய வேண்டும். பெரும்பாலும் பகல் நேரத்தில் கடிக்கும் கொசுவால் பரவும். மேற்கண்ட தடுப்பு முறைகள் கடைபிடிக்க வேண்டும்.

பைலேரியா (யானைக்கால் நோய்) இது கியூலெக்ஸ் (Culex) என்ற வகை கொசு கடிப்பதால் உண்டாகும். இந்த கொசு கழிவு நீரில் (அசுத்தமான Drainage Water) மட்டுமே முட்டையிட்டு புழுவாகி உற்பத்தியாகும்.

1. எனவே வீட்டிலும், வீட்டைச் சுற்றிலும் கழிவுநீர் தேங்காமல் பார்த்துக்கொள்ளவும்.

2. தரமான கொசு அடிக்கும் மட்டை (Mosquito Bat) தினமும் உபயோகப்படுத்தவும். இச்செயல் முக்கியமாக (Hidden Mosquitoes) வீட்டினுள் கட்டில், மேஜை அடியில், ஜன்னல், திரைச்சீலை, துணிகள் போன்றவற்றில் மறைந்திருக்கும் கொசுக்களை அழிக்கும்.

3. செப்டிக் டேங்கை காற்றுப் புகாத அளவில் நன்கு மூடி வைக்கவும்.

**அரசு, நகராட்சிகள், ஊராட்சிகள் செய்ய வேண்டிய கொசு ஒழிப்பு முறைகளாவன :**

1. "அபேட்" எனும் திரவ மருந்தை 7 நாட்களுக்கு ஒருமுறை மலேரியா தொழிலாளி மூலம் கிணறுகள் சரியாக மூடப்படாத மேல்நிலை கீழ்

நிலைத் தொட்டிகள், நீர் சேகரித்துள்ள பாத்திரம், தொட்டிகளில் சிறிதளவு ஊற்றவேண்டும். இதனால் தண்ணீர் பாதிக்காது.

2. MLO என்ற கெட்டியான திரவ ஆயில் (அல்லது அதற்கீடான திரவ ஆயில்) 7 நாட்களுக்கு ஒரு முறை கழிவுநீர் கால்வாய், தேங்கியுள்ள நீர் நிலைகள், கழிவுநீர் தொட்டி, சரியாக மூடப்படாத செப்டிக் டேங்க் போன்ற பலவற்றில் மருந்து தெளிப்பான் மூலம் "ஸ்ப்ரே" செய்ய வேண்டும் (Mosquito Spray).

3. Adult Mosquito பெரிய கொசுக்களுக்கு Baygon அல்லது அதற்கு ஈடான மருந்தை மறைந்திருக்கும் கொசுக்களை அழிக்க Spray செய்ய வேண்டும்.

4. Fogging புகை அடித்தல், கைக்கருவி மூலமோ (Van Fogging) வேனில் பொருத்தப்பட்ட கருவிமூலமோ 15 நாட்களுக்கு ஒருமுறை தெருக்களில், சந்துப் பாதைகளில், மழைநீர் வடிகால் கால்வாய்களில் புகை அடிக்க வேண்டும்.

இவ்வாறு அரசும், மக்களும் இணைந்து செயல்பட்டால் கொசுவை ஒழிக்கலாம். கொசுவினால் பரவும் மேற்கண்ட நோய்களைத் தவிர்க்கலாம்.

## நோய் பரவும் வழிகள் மூன்றே!

1. Ingestion : (உட்கொள்ளுதல்) – கிருமிகள், அழுக்கு, தூசி, ஈக்கள் போன்ற பலவற்றால் மாசுபடுத்தப்பட்ட, சுத்தமற்ற, பாதிக்கப்பட்ட உணவு மற்றும் குடிநீர் உட்கொள்வதன் மூலமாக.
2. Inhalation : (சுவாசித்தல்) – துர்நாற்றம், புகை, அழுக்கு, வைரஸ், பாக்டீரியா கிருமிகள், நோயால் பாதிக்கப்பட்டவர்களின் சுவாசக்காற்று (மூச்சு) போன்ற பலவற்றால் மாசுபடுத்தப்பட்ட தீங்குதரும் காற்றை சுவாசிப்பதன் மூலமாக.
3. Inaculation : (உடலில் உட்புகுதல்) – கொசு, பலவகையான கிருமிகள், தேங்கியுள்ள தண்ணீரில் உள்ள லெப்டோஸ்போரேசிஸ் நரம்பு சிலந்தியைபரப்பும் (குளம், குட்டையில் உள்ள நீரில்) கிருமிகள் கடித்து, குத்துவது போன்று உடலின் உள்ளே செல்வதன் மூலமாக நோய் பரவும்.

இம்மூன்று வழிகளில் நாம் முன்னெச்சரிக்கையாக விழிப்புடன் இருந்தால் நோய் தாக்காது. தடுக்கலாம்! தவிர்க்கலாம்!!

# பட்டுக்கோட்டை ஒரு பாட்டுக்கோட்டை



**கரு.சு. செந்தில் குமரன்**

திரை உலகில் தன் பாட்டுத் திறத்தால் கொடிகட்டிப் பறந்தவர். பலர் மனங்களைக் கவர்ந்தவர். நம் நெஞ்சில் நிறைந்தவர்; தான் பிறந்த ஊரான பட்டுக்கோட்டையைத் தன் பெயருடன் சேர்த்துக்கொண்டார் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம். பொதுவுடைமைக் கருத்துக்களை, சமுதாயத்திற்குப் பயன்படும் அறிய கருத்துக்களை எளிய நடையில் நாமெல்லாம் நன்கு புரிந்து கொள்ளும் வகையில் திரைப்படபாடல்களாக்கித் தந்த பெருமை அவருக்கே உரியது. “தூங்காதே தம்பி தூங்காதே நீ சோம்பேறி என்ற பெயர் வாங்காதே” என சோம்பல் கூடாது எனவும் “ஆளும் வளரணும் அறிவும் வளரணும் அதுதாண்டா வளர்ச்சி”, “வேப்ப மர உச்சியில் நின்னு பேய் ஒண்ணு ஆடுதுன்னு விளையாடப் போகும்போது சொல்லி வைப்பாங்க. உன் வீரத்தைக் கொழுந்திலேயே கிள்ளி வைப்பாங்க, வேலையற்ற மனிதர்களின் மூளையற்ற வார்த்தைகளை வேடிக்கையாகக் கூட நம்பிவிடாதே ” என மூட நம்பிக்கை கூடாது எனவும், “திருடாதே பாப்பா திருடாதே, வறுமையை நினைத்து பயந்து விடாதே திறமை இருக்கு மறந்து விடாதே”, என தன்னம்பிக்கை ஊட்டியும் “சட்டம்போட்டு தடுக்கிற கூட்டம் தடுத்துக் கொண்டே இருக்குது, அதைத் திட்டம் போட்டு திருடற கூட்டம் திருடிக் கொண்டே இருக்குது, திருடனாய்ப் பார்த்து திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது ”, என மனசாட்சியின் மாண்பினையும் “சித்திரப் பூப் போல மத்தாப்பு தீயேதுமில்லாமல் வெடித்திடும் கோப்பு” என குழந்தைகளுக்கு பட்டாசு அழகு பற்றியும் “அன்பு மயில் ஆடலுக்கு மேடை அமைத்தான் அதில் துன்பமெனும் நாடகத்தை கண்டு ரசித்தான்” என காதல் தோல்வி பற்றியும், “புகையும் நெருப்பும் இல்லாமல் எரிவது எது?” எனக்கேட்டு “பசித்து வாடும் மக்கள் வயிறு தான் அது” என அற்புதமான பதிலையும், எத்தனை தானம் தந்தாலும் எந்த லோகம் புகழ்ந்தாலும் தானத்தில் சிறந்தது “நிதானம்” தான் என பொறுமையின் பெருமையையும், “இரைபோடும் மனிதனுக்கே இரையாகும் வெள்ளாடே”, என எதார்த்த நிலையினையும், நமது வாழ்க்கைக்குத் தேவையான நல்ல பல கருத்துக்களை, அன்றாடம் நாம் பயன்படுத்திப் பேசும் சாதாரண எளிய சொற்களைக் கொண்டு திரைப்படப் பாடல்களில் புகுத்தியவர்களில் இவரே முதன்மையானவர்.

நாம் சாதாரணமாக உரையாடும்போது என்னப்பா, என்ன சொல்கிறாய், எதுக்கு போனாய் என்று கேட்டால் சிலர் சும்மா தானப்பா என்று சொல்வது வழக்கம். இதற்கு இதுவரை யாருமே சொல்லாத அறிவுரையை பட்டுக்கோட்டை இவ்வாறு சொல்கிறார். சும்மா இருந்தா சோத்துக்கு நஷ்டம் இவ்வாறு பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் பெருமையைச் சொல்லிக்கொண்டே போகலாம். ஆனால் சொல்லில் அடங்காது? சொல்லி முடியுமா? அத்தகைய பெருமகனார் தம் 38வது வயதில் ஏழையாகவே இறந்தார்.

# திருக்குடமுழுக்கு விழாக்கள்



திருமதி **தர்மாம்பாள் சிவனடியார்,**
கண்டியூர்

அண்டம் முழுதும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருளை அவன் அருளிய மந்திரங்களால் ஓரிடத்தே நிலை நிறுத்தி அதன் வழியாக அனைத்து உயிர்களும் நலம்பெற வேண்டிக் கொள்வதற்காக உருவங்களையும் லிங்கத்திருமேனியையும் ஆவாகனம் செய்து நிகழ்த்தப் பெறுவதே குடமுழுக்கு ஆகும். அவை நான்கு வகைகளில் அமையப்பெறுவதுண்டு.

**1) ஆவர்த்தனம்**
**2) புனராவர்த்தனம்**
**3) அனாவர்த்தனம்**
**4) அந்தரிதம்**

## 1) ஆவர்த்தனம்

திருக்கோயில்களைப் புதியதாக எழுந்தருளச் செய்வது.

திருக்கோவில் புதிதாக அமைக்க வேண்டும் என்றால் வாஸ்து முறையான இடம் அமைத்து கருவறையில் புதிய லிங்கத் திருமேனியைப் பிரதிஷ்டை செய்து, மற்ற திருமேனிகளையும் முறைப்படி அமைத்து மரபுப் படி நாள்வழிபாடு சிறப்பு வழிபாடுகளையும் இடையூறு இன்றி நடைபெறுமாறு செய்ய வேண்டும்.

## 2) புனராவர்த்தனம்

திருக்கோயில் வழிபாட்டில் இருந்துவரும் நிலையில், திரும்பவும் புதுப்பித்து மீண்டும் எழுந்தருளச் செய்வது.

இதனை ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் என்பர். நடைமுறையில் இருக்கும் ஆலயத்தில் காலப்போக்கால் எவையேனும் சில பாகங்கள் சிதைந்து போனால் அவற்றைப் பூர்த்தி செய்து விக்கிரகங்கள் அசையாது இருக்கும்படி மருந்துகள் சார்த்தி, கோவில்களின் கோபுரம், விமானம் உட்புற மதில்சுவர்கள் இவற்றிற்கு வர்ணம் தீட்டி, எல்லாக்



கிரியைகளையும் இனிது நடத்தி, யாக சாலைகளில் கும்பங்களில் எழுந்தருளப் பண்ணியிருந்த மூர்த்திகளைத் திரும்பவும் கோவில் விக்கிரகங்களில் ஆவாஹனம் பண்ணுதலாம். எட்டு சக்திகளோடு இறைவனை இணைப்பதால் அஷ்டபந்தனம் என இதனைக் கூறுவர்.

### 3) அனாவர்த்தனம்

திருக்கோயில் முழுமையாகச் சிதலமடைந்து வழிபாடுகள் நின்றுவிட்ட ஆலயங்களுக்கு நடத்தப்பெறும் குடமுழுக்கு.

ஆற்றுநீர்ப் பெருக்காலோ, விடாமழை பொழிந்ததாலோ, பூமி அதிர்ச்சிகளாலோ, மண் மூடியதாலோ, ஆலயங்கள் அழிந்துபோனால் திரும்பவும் அதைக் கட்டிமுடித்து விக்கிரகங்கள் முதலியவற்றைப் புதுப்பித்துச் சீர்திருத்தம் செய்வதாகும்.

### 4) அந்தரிதம்

வழிபாட்டில் இடையூறுகள் ஏற்பட்டால் மீளச் செய்வது. இடையில் ஏற்படும் இடையூறுகள் காரணத்தால் (இடிந்து போதல், திருட்டுப்போதல், இடி விழுதல்) தடைப்படின் அதனால் ஏற்படும் குறையை நீக்க குடமுழுக்குச் செய்வித்தல் அந்தரிதம் ஆகும்.

# வருடாந்திர விழாக்களும் வழிபாடும்

M. சிட்டாள் ஆச்சி
L. நீலாவதி

நம் நகரத்தார்கள் பழக்க வழக்கம், பண்பாடு, கலாச்சாரங்களில் மிகவும் உயர்ந்தோங்கிய குணம் படைத்தவர்கள். தமிழ் மாதங்கள் பன்னிரண்டிற்கும், அவரவர் இல்லங்களில் பக்தி சார்ந்தும் அந்தந்த பருவ நிலை சார்ந்தும், விழாக்களும் வழிபாடும் நிகழ்த்தி இறைவனைத் தொழுவார்கள்.

தமிழ் மாதங்கள் ஒவ்வொன்றிற்கும் என்னென்ன வழிபாடுகளைச் செய்து மகிழ்கிறோம் என்பதை எண்ணிப் பார்க்கும்போது மனம் பூரிப்பதை உணரலாம்.

### சித்திரை மாதம்

தமிழ் வருடப்பிறப்பைக் கொண்டாடுவோம். மலையாண்டி கோயிலில் பஞ்சாங்கம் படிக்கப்படும். பொங்கல் வைப்பதும் உண்டு.

சித்ரா பௌர்ணமிக்கு நுங்கு, வெள்ளரிக்காய், இளநீர், பலாச்சுளை, வெண்பொங்கல், கொளக்கட்டை வைத்து சித்ரகுப்தர் வழிபாடு செய்வது வழக்கம். பிள்ளையார், ஏடு, எழுத்தாணி வைத்து, தட்டப்பயறு, பாசிப்பயறு, உளுந்து, மஞ்சள், மிளகாய், உப்பு, புளி, துவரம்பருப்பு, கொண்டைக்கடலை, வெற்றிலை பாக்கு வைத்து கும்பத்தில் தண்ணீர் வைத்து மாவிலை தேங்காய் வைத்து வழிபாடு செய்வர். மாவிளக்கு, பழவகைகளும் வைக்கப்படும்.

வருடப்பிறப்புக்கு பசுவுக்கும், கன்றுக்கும் அரிசி வெல்லம் கொடுத்து வணங்குவது உண்டு. மலையாண்டி கோயிலில் மலை மேல் பஞ்சாங்கம் படிப்பதுண்டு. நகர விடுதியில் கணக்குப்பார்த்து அடுத்த வருட காரியக்காரர்களிடம் கணக்கு ஒப்படைப்பர். புளிசாதம், கடலை, நீர்மோர், பானகம் விநியோகிக்கப்படும்.

### வைகாசி மாதம்

முருகனுக்கு வைகாசி விசாகம் நடைபெறும். நமது ஊரில் நடைபெறவில்லை. பக்கத்து ஊர்களான வேந்தன்பட்டி, நெற்குப்பையில் நடைபெறுகின்றது.

### ஆனி மாதம்

உத்திர தரிசனம். நடராஜருக்கு அபிஷேகம் நடைபெறும்.

### ஆடி மாதம்

பெண்கள் செவ்வாய்ப் பிள்ளையார் வழிபாடு செய்வர். ஆடிக் கிருத்திகை, ஆடி அமாவாசை, ஆடி 18ஆம் பெருக்கு நீர் நிலைகளில் தீர்த்தமாடுதல் காவேரிக்

கரையோரங்களில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படும். நம் பகுதிகளில் ஆறு இல்லாததால் குளக்கரைகளில் கொண்டாடுவதுண்டு.

### ஆவணி மாதம்

ஞாயிற்றுக்கிழமை வீட்டில் வெண் பொங்கல் வைத்து சூரியனை வழிபடுவது வழக்கம். கண் பார்வை ஆரோக்கியமாக இருக்க இந்த வழிபாடு.

பிள்ளையார் சதுர்த்தி அரசமரத்தடி பிள்ளையார் முதல் ஆலயத்தில் இருக்கும் பிள்ளையார் வரை ஆவணி மாதம் கொண்டாடப்படும். பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் கோயிலில் 10 தினத் திருவிழாவாக மிகவும் சிறப்பாக நடைபெறும்.

பிள்ளையார் சதுர்த்திக்கு முதல்நாள் கற்பக விநாயகர் சந்தனக்காப்பு அலங்காரத்தில் அழகுற காட்சியளிப்பார். சந்தனக் காப்பு அலங்காரம் பிள்ளையார்பட்டியில் ஆண்டுக்கு ஒருமுறை தான் நடைபெறும்.

### புரட்டாசி மாதம்

புரட்டாசி சனிக்கிழமைகளில் நகரத்தார் வீடுகளில் **'வடித்துப்போடுதல்'** என்ற அன்னதான நிகழ்வு நடைபெறும். மதிய உணவு, பண்டாரத்தை அழைத்து வந்து அரோகரா பண்ணி சாப்பிடுவது வழக்கம். ஏழை எளியோரைச் சாப்பிடச் சொல்வதும் உண்டு; அவர்கள் வீட்டிற்கு எடுத்துபோக உணவுகளை வழங்குவதுமுண்டு.



ஏடுபடித்தல் என்ற நிகழ்வு நகரத்தார் வீடுகளில் நடைபெறும். ஏடு படித்தல் என்பது ராமாயணம் படித்தல். ஒரு சனிக்கிழமை படிக்க ஆரம்பித்து அடுத்து வரும் சனிக்கிழமை அன்று பட்டாபிஷேகம் வரை படித்து ராமாயணக் கதையை நிறைவு செய்வது. எட்டு நாட்களும் மாலை வேலைகளில் படிக்க ஆரம்பித்து ராமருக்குப் பலகாரங்கள் நெய்வேத்தியம் செய்து உறவினர், அக்கம் பக்கம் நண்பர்கள் என அழைத்து பிரசாதம் விநியோகம் செய்வர். படிக்க ஆரம்பிக்கும் முதல் நாளும், பட்டாபிஷேகத்தன்றும் தடபுடலாக இரவு விருந்து நடைபெறும். முன்பு 15 நாட்கள், முதல் சனிக்கிழமை முதல் கடைசி சனிக்கிழமை வரை புரட்டாசி மாதம் முழுவதும் படித்ததெல்லாம் உண்டு. இப்போது செலவு நடைகள், கால நேரங்களைக் கருத்தில் கொண்டு 1 வாரகாலமாகச் சுருக்கிக்கொண்டு விட்டனர். ஊரில் பொதுவாக சில இடங்களிலும் படிக்கும் வழக்கம் உண்டு. வலையபட்டியில் சங்கரன் குண்டுக்கரை, கச்சேரிக் கூடம் போன்ற இடங்களில் இன்றும் படிக்கும் வழக்கம் உள்ளது.

சுமார் 40 ஆண்டுகளுக்கு முன் வையாபுரிக்கரையில் வடமேற்குப் பகுதியில் அமைந்துள்ள இராமாயண மடத்தில் நடைபெற்றது.

புரட்டாசி மாதம் அமாவாசை தொடங்கி 10 நாட்கள் கொலு வைத்து திருவிழா நடக்கும். சைவர் பள்ளிக்கூடம், தர்மப் பள்ளிக் கூடங்களில் படிக்கும் மாணவ, மாணவியரை ஆசிரியர்கள் 'ஊர் சுற்றி' அழைத்து வருவர். அழைப்பு விடுத்த வீட்டுக்காரர்கள் மாணவ, மாணவிகளுக்குத் தின்பண்டம், சிலேட்டு, பேனா, பென்சில், நோட்டு கொடுத்து மகிழ்வர். மலையாண்டி கோயிலில் நவராத்திரி ஒன்பது நாட்களும் கொலு வைத்திருப்பர். ஒவ்வொரு நாளும், அம்மன் ஒவ்வொரு அலங்காரத்தில் அருள்பாலிப்பார். பல விதமான பொம்மைகள் கொண்டு கொலு வைக்கப்பட்டிருக்கும். பத்தாம் நாள் மகர்நோன்பு, சாமி அம்பு போடுதல்.

நகரத்தார் வீடுகளில் மகர் நோன்பு அன்று குழந்தைகள் அம்பு போடுவதற்கென்றே வெள்ளியில் அம்பு செய்து வைத்திருப்பர். இந்த வெள்ளி அம்பு திருமணத்தின் போது பெண்வீட்டார் சீர் வரிசையில் கட்டாயம் வழங்கப்பட்டிருக்கும்.

பிள்ளைகள் அம்பு போட்டுவிட்டு வீட்டிற்கு வரும்போது, வீட்டிலிருக்கும் பெரியவர்களும், அப்பத்தாவும் ஆரத்தி எடுப்பது வழக்கம். அப்பத்தாவிற்கு பிள்ளைகளின் பெற்றோர் பாக்குப்பணம் கொடுப்பதுண்டு.



மகர் நோன்புத் திடலில் அம்புபோடும் நிகழ்வு முடிந்ததும் இரவு சுமார் 9 மணிக்கு சாமி வீதி உலா வர ஆரம்பிக்கும். வலையபட்டி ஊருக்குள் ஒவ்வொரு வீதியாக வரும். நகரத்தார் பெருமக்கள் விளக்கேற்றி வைத்து சாமியை வரவேற்று தேங்காய் உடைத்து அர்ச்சனை செய்வர். முன்பெல்லாம் எல்லா வீடுகளிலும் ஆட்கள் இருப்பர். வீதி உலா முடித்து சாமி கோயிலுக்கு வந்து சேர 5 அல்லது 6 மணியாகவிடும். இப்போது நிறையப் பேர் வெளியூர்களில் இருப்பதால் இரவு இரண்டு மணிக்கே சாமி வீதி உலா முடித்து கோயிலை வந்தடைகிறது.

### ஐப்பசி மாதம்

மாதப் பிறப்பன்று தீர்த்தமாடுதல் (தீர்த்தமாடுதல் என்பது ஆறு, குளங்களில் குளிப்பது. குறைந்தபட்சம் வீட்டில் குளித்து இஷ்ட தெய்வத்தை வணங்குவது)

சூரன் திருவிழா நம் ஊரில் 3 நாட்கள் காப்புக்கட்டி வெகு விமரிசையாக நடைபெறும். பிள்ளையார்பட்டி கோயில் நகரத்தார்கள் நடத்தும் திருவிழா. இப்படி ஒவ்வொரு நகரக் கோயில் நகரத்தார்களுக்கும் ஒரு திருவிழா மண்டகப்படி நம் ஊரில் நடைபெறும்.

வலையபட்டி அடைக்கன் குளம் கிழக்குக் கரையில் உள்ள சித்தி விநாயகர் கோவிலில் வருடாவருடம் ஐப்பசி மாதம் முதல் தேதி முதல் முப்பதாம் தேதி வரை பஞ்சாங்க ஐயர் வந்திருந்து காவேரி புராணம் படிப்பார். ஆச்சிமார்கள் காலை 7.00 மணியிலிருந்து 9.00 மணி வரை இருந்து புராணம் படிப்பதைக் கேட்பார்கள். அடைக்கன் குளத்தில் காவேரி கட்டி வழிபட்டுவிட்டு ஐயருக்குத் தங்களால் இயன்ற காய்கறிகள், மளிகைப் பொருட்களைக் கொடுப்பர். அந்த மாதத்தில் ஒரு முகூர்த்த நாளில் காவேரிக்குக் கல்யாணம் செய்து வைப்பது வழக்கம். முற்காலத்தில் வலையபட்டியில் 3 இடங்களில் நிகழ்ந்ததாகக் கூறுவர்.

தீபாவளி கொண்டாடப்படும்.

### கார்த்திகை மாதம்

ஐப்பசி முப்பது நாளும் தீர்த்தமாடிய பிறகு கார்த்திகை ஒன்றாம் தேதி நுடவன் தீர்த்தமாடுவது சிறப்பு.

திருக்கார்த்திகை அன்று வீடுகளில் அகல் விளக்கேற்றி வழிபட்டு, மலையிலிருந்து சாமி இறங்கிவந்து வையாபுரிக் கரையில் அம்மன் சன்னதிக்கு நேரேயும், மலையடிவாரத்தில் ராஜகோபுரத்துக்கு எதிரிலும் சொக்கப்பனை கொளுத்தப்படும். இப்போது சில ஆண்டுகளாக திருவண்ணாமலை போன்று மலை மீது உள்ள கோயில் மேல் தளத்தில் கோபுர விமானங்கள் இருக்கும் பகுதியில் தீபம் ஏற்றப்படுகிறது.

கார்த்திகை சோமவாரம் கடைப்பிடிக்கப்படும். ஒவ்வொரு திங்கட்கிழமை மாலை நேரத்தில் சாமிக்கும், அம்மனுக்கும் 108 சங்காபிஷேகம் நடைபெறும். கார்த்திகை மாதம் 4 திங்கட்கிழமை என்றால் 4 வாரமும், 5 திங்கட் கிழமை என்றால் 5 வாரமும் உபயதாரர்கள் சங்காபிஷேகம் செய்வர்.

கார்த்திகை முதல் தேதி சபரிமலை செல்லும் பக்தர்கள் மாலைபோட்டு விரதமிருக்க ஆரம்பிப்பர். ஒரு மண்டலம் விரதமிருந்து கமுசு வீட்டு காம்பவுண்டில் பெரிய அளவில் அன்னதானமும், விமரிசையான பூஜைகளும் நடைபெற்று இருமுடி கட்டி நாலைந்து பேருந்துகளில் சபரிமலைக்குப் புறப்படுவர். (தற்பொழுது எந்த அளவிற்கு நடைபெறுகிறதெனத் தெரியவில்லை)

### மார்கழி மாதம்

திருப்பள்ளியெழுச்சி நடைபெறும்.

நகரத்தார் இல்லங்களில் பிள்ளையார்நோன்பு விரதம் கடைப்பிடிக்கப்பட்டு இழை எடுத்தல் நிகழ்வு நடைபெறும். இக்காலத்தில் பொது நிகழ்வாக நகரத்தார் சங்கங்கள், விடுதிகளில் நடைபெற்று வருகிறது. நம் மலையாண்டி கோயில் நகரவிடுதியிலும் ஆரம்பித்து நடைபெற்று வருகிறது.

மார்கழியில் திருவாதிரை தரிசனம் அதிகாலையில் நடைபெறும். பகலில் சாமி வலையபட்டி நகருக்குள் வீதி உலா வரும். கோயிலில் இருந்து 9.00 மணிக்குப் புறப்பட்டு வீதி உலா முடித்து 11, 12 அல்லது 2.00 மணிக்கு கோயிலை வந்தடையும். நகரத்தார் இல்லங்களில் ஆட்கள் இருந்த அந்தக் காலத்தில் மாலை 4.00 மணி கூட ஆகிவிடும்.

### தை மாதம்

தைப்பொங்கல், தை அமாவாசை மிகவும் விசேஷம். தைக்கார்த்திகையும் முருகனுக்கு உகந்தது. பெண்கள் செவ்வாய்ப் பிள்ளையார் வழிபாடு செய்வர். மாட்டுப்பொங்கல் அன்று பெண்கள் கொப்பி கொட்டுதல் என்று ஊரில் வலம் வருவர். அன்று வீட்டில் வைத்து வணங்கிய பொங்கல் சிறிதும் தேங்காய், கரும்பு, வெற்றிலை, பாக்கு, பழம் ஆகியவற்றை ஒரு கடகத்தில் வைத்து தலைச் சுமையாக எடுத்து வந்து முச்சந்திகளில் வைத்துக் கொப்பி கொட்டி வட்டமாகச் சுற்றி வருவர். பின் மாடுகளுக்கு அவற்றை உண்ணக் கொடுப்பவர்.

தைப்பூசத் திருவிழா நடைபெறும். நம் ஊரில் உள்ள வைரவன் கோயில் நகரத்தார்கள் இத்திருவிழாவிற்கான மண்டகப்படிதாரர்கள். சாமி எழுந்தருளி வையாபுரி ஊரணியில் தைப்பூசத்திற்கு தீர்த்தம் கொடுக்கும். குடிநீர் ஊரணி என்பதால் சூலபாணியுடன் ஐயர் ஊரணியில் முங்கி எழுவார். மற்றவர்கள் அதில் குளிப்பதில்லை.

### மாசி மாதம்

சிவன் ராத்திரி. குலதெய்வக் கோயிலுக்குச் செல்வது நம் மரபு.

### பங்குனி மாதம்



பங்குனிப் பொங்கல் வைப்பது மற்றும் கொன்னையூர் முத்துமாரியம்மனுக்குக் காப்புக்கட்டி பூச்சொரிதல், பொங்கல், திருவிழா நடைபெறும். காப்புக்கட்டி 22வது நாள் பொங்கல் வைப்பது. வீட்டில் ஓர் ஞாயிற்றுக்கிழமையன்று, கரகச்சட்டி, கரகச்சொம்பு வைத்து மாரியம்மனை வழிபடுவோம்.

கரகச் சட்டியில் வையாபுரி ஊரணி மண்ணும், கரகச் செம்பில் வையாபுரி குடிநீரும் அதனுடன் வேப்பிலைக் கொப்பும், வேப்பம் பூவும் வைத்து நகரத்தார் வீடுகளில் கொளக்கட்டை, பொங்கல் வைத்து வணங்குவோம். கோழி நறுக்கும் பழக்கமுள்ளவர்கள், கோழி நறுக்கி பொங்கல் வைப்பர். பொங்கல் வைக்கும்போது பால் பொங்கி வரும். அப்போது மஞ்சள் தடவிய தேங்காய் உடைத்து வழிபடுவது வழக்கம்.

பங்குனி உத்திரம் திருவிழாவிற்கு முதல்நாள் அடைக்கன் குளம் கச்சேரிக் கூடத்தில் மயில்தோகை காவடிகட்டி, ஆடிப்பாடி மலையாண்டி கோயில் அடிவாரம் வந்து காவடிகளை இறக்கி வைத்து, அடுத்த நாள் உத்திரத்தன்று மாலை கிரிவலம் வந்து மலையேறி காவடி செலுத்துவர்.

உத்திரத் திருநாளன்று மதியம் அக்கினிக் காவடி, அலகு குத்திய காவடிகள் எல்லாம் வலையபட்டி க.சா. ஊரணி பிள்ளையார் கோயிலில் இருந்து புறப்பட்டு ஊர்வலம் வந்து, மலையாண்டி கோயில் ராஜகோபுரம் உள்ள பக்கம் அடிவாரத்தில் பரப்பப்பட்டு இருக்கும் அக்கினியில் காவடிகளும், அலகு குத்தியோரும், பால்குடம் எடுப்போரும் இறங்கி மலையேறி சாமி தரிசனம் செய்வர்.

### பொதுவானவை

திங்கட்கிழமையன்று அமாவாசை வந்தால், அது எந்த மாதமாக இருந்தாலும் அரசமரத்து விநாயகரை 108 முறை சுற்றி வழிபடும் வழக்கம் இருந்தது. சங்கரன் குண்டு மேல், கீழ்ப்பகுதிகளில் உள்ள பிள்ளையார் கோயில்களிலும், மலையாண்டி கோயில் கிரிவலத்தில், வையாபுரி ஊரணி வடமேற்கு மூலையில் உள்ள சபாபதி செட்டியார் வைத்த பிள்ளையார் கோயிலிலும் மேற்படி நூற்றிஎட்டு முறை சுற்றி வழிபட்டு வந்த பழக்கம் இருந்தது.

பௌர்ணமிக்குப் பௌர்ணமி சாமிக்கு அன்ன அபிஷேகம் செய்து புடலங்காய் வைத்து தீபாராதனை நடைபெறும். தற்போது பௌர்ணமி நாட்களில் கிரிவலம் நடைபெறுகிறது.

சித்திரை மாதம் (மே மாதம்) புதுப்பட்டி பிடாரி அம்மன் கோயில் தேரோட்டம் நடைபெறும். மாம்பழத் தேரோட்டம் என்று கூறுவர். பிடாரி அம்மன், புதுப்பட்டி நான்கு சாலைகளிலும் தேரில் பவனி வர வீட்டின் மாடிகளில் இருந்து மாம்பழங்களை வீசுவர்.

ஆடி மாதத்தில் அழகிய நாச்சியம்மன் கோயில் தேரோட்டம் நிகழும்.

குறிப்பு : ஊரில் இருந்த காலங்களில் நடைபெற்றவைகளை நினைவில் கொண்டு எழுதப்பட்டவை இவை. காலமாற்றங்களில் சில நிகழ்வுகள் கூடியிருக்கக் கூடும். குறைந்திருக்கவும் வாய்ப்புண்டு.

இவைகளை வலையபட்டி திருமதி சிட்டாள் மகாலிங்கம் அவர்கள் சொல்லக் கேட்டு எழுதியவர் திருமதி நீலாவதி லெட்சுமணன் ■



**M. சிட்டாள் ஆச்சி**



**L. நீலாவதி**

# மலையாண்டிக்கு அணிசெய்யும் மலர்கள்

**வலம்புரி லேனா**




கோயில் கும்பாபிஷேக மலர்கள் சிறப்பு மிக்கவை. நம் மலையாண்டி கோயில் கும்பாபிஷேக மலர், நான் அறிந்த வகையில் தங்கள் கைகளில் தவழும் இந்த மலர் நான்காவது மலர்.

மலையாண்டி கோயிலுக்கு 1978ஆம் வருடம் நடைபெற்ற கும்பாபிஷேகத்திற்கு வெளியிடப்பட்ட மலர் என் பார்வைக்குக் கிடைத்த மலர்களில் முதல் மலராகக் கொள்ளலாம்.

வலம்புரி எழிலன் என்ற லெ. திருப்பதி செட்டியார் அவர்களும் அவருடைய உற்ற நண்பரான திரு.வ. முத்துநடேசன் செட்டியார் அவர்களுடைய கும்பகோணம் மற்றும் விருத்தாசலம் கதிரேசன் பிரஸ்ஸில் அச்சடித்துத் தயாரித்தார். அந்தக் காலத்தில் அச்சுக்கோர்த்து Tradil Printing மிஷினில் அச்சடிக்க வேண்டும். போட்டோக்களை எல்லாம் மரக்கட்டையில் ப்ளாக் செய்து பிரிண்ட் செய்ய வேண்டும். வலம்புரி எழிலன் அவர்களும் வீட்டை விட்டு தொழிலை விட்டு மாதக் கணக்கில் கும்பகோணம், விருத்தாசலம் என்று மாறி மாறி தங்கியிருந்து அந்த மலரைத் தயாரித்துக் கொண்டுவந்தார்கள். (200 பக்கங்கள் செய்தி, 500 பக்கங்கள் விளம்பரம்)




ஐந்தாவது கும்பாபிஷேக மலர் 1993ஆம் ஆண்டு நடைபெற்ற கும்பாபிஷேகத்திற்கு வெளியிடப்பட்டது. அப்போது கம்ப்யூட்டர் பிரிண்டிங் முறை வந்துவிட்ட காலம். திரு.வ. ரெத்தின சபாபதி அவர்களின் சென்னை டேவிட் பிரிண்டிங் பிரஸ் மற்றும் பொன்னி கிராபிக்ஸ் நிறுவனத்தால் வடிவமைக்கப்பட்டு அச்சடிக்கப்பட்டது. (216 பக்கங்கள் செய்தி 500 பக்கங்கள் விளம்பரம்) வலம்புரி எழிலன் சென்னையில் தங்கியிருந்து பணிகளை முடித்துக் கொண்டு வந்தார்கள்.




2008ல் நடைபெற்ற ஆறாவது குடமுழுக்கு விழா மலர் மதுரை ஸ்ரீவிநாயகா ஸ்கிரீன் பிரிண்டர்ஸில் அச்சடிக்கப்பட்டது. சுமார் 300 பக்கங்கள் செய்திகளும், 200 பக்கங்கள் விளம்பரங்களும் இடம்பெற்றன. வலம்புரி எழிலன் மதுரையில் திரு. அக்ரி சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் வீட்டில் தங்கியிருந்து மலர்ப் பணிகளை முடித்து வந்தார்கள்.




தற்போது தங்கள் கைகளில் உள்ள இந்த மலர்.



மலையாண்டிக்கு அணிசெய்யும் மலர்களில் நான்காவது, ஐந்தாவது மற்றும் ஆறாவது குடமுழுக்கு விழா மலர்கள் தயாரித்தவர் திரு. எழிலன் **L. திருப்பதி செட்டியார்** அவர்கள்.

## தருமக் கேணி



வலம்புரி 1 நம்பர் சாலையில் இருக்கும் எப்போதும் வற்றாத இந்த 'தருமக்கேணி' என்ற பொதுக்கிணறு ஏழாவது குடமுழுக்குக் குழுவின் செயலாளர் **எஸ். நாகப்பன்** அவர்களின் முன்னோர் **சா.பெரி.நா. மூக்கப்ப செட்டியார்** என்ற **முத்தையா செட்டியார்** குடும்பத்தாரால் அமைக்கப்பட்டது.

**K. KAMARAJ**
Chief Minister of Madras

**FORT ST. GEORGE**
**MADRAS**

**31.5.1963**



ஆலயத் திருப்பணிகள் செய்வதை சிறந்த கடமையாக நம் முன்னோர் கருதி வந்துள்ளனர். ஆண்டவனை அன்போடு நினைந்து வழிபட்டு அனைவரும் பயனடையும் வகையில் தெய்வக் கைங்கரியங்களைப் பெரியவர்கள் செய்து வந்திருக்கிறார்கள். அந்த வகையில் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் காசியில் கடந்து நூற்று ஐம்பத்திரண்டு ஆண்டுகளாகச் செய்து வரும் திருப்பணிகளைப் போற்றாமல் இருக்க முடியாது. நகரச் சத்திரத்தை ஏற்படுத்தி பூஜா கைங்கரியங்களை முறைப்படி ஆற்றத் தொடங்கி, நூறு ஆண்டுகள் முடிந்துவிட்டன. கோடிக்கணக்கான பக்தர்களின் ஆத்ம திருப்தியைப் பெற்றிருக்கும் நகரச் சத்திர அறநிலையத்தார் நூற்றாண்டு விழா கொண்டாடுவதை அறிய மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

அவர்களின் தொண்டு மேலும் சிறக்க என் இதயங்கனிந்த நல்வாழ்த்துகள்.

காமராஜ்

# வலம்புரிநாதர் பேரவை முற்றோதல் குழு

"தொல்லை இரும்பிறவிச் சூழும் தளை நீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே - எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவாசகம் என்னும் தேன்"

என்பது திருவாசகப் பெருமை கூறும் பழம்பாடல். 'வாதவூரண்ணல் மலர் வாய்ப் பிறந்த வாசகத் தேன்' என்பார் சிவப்பிரகாசர். திருவாசகம் தேனாய் இனிப்பதற்குக் காரணம் யாது? திருவாசகம் முழுவதும் தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கும் சிவபெருமானைப் பாடியது என்பது மட்டுமன்று. கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போலச் சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நிற்கும் பெருமான் தந்த பேரானந்தப் பயனைச் சொல்லியிருப்பதனாலேயே திருவாசகம் தேனைப் போன்று இனிமை தரவல்லதாகின்றது.

இனிமையும் பேரானந்தப் பெருவாழ்வும் தரக் கூடிய திருவாசகத்தின் மீது ஈடுபாடு கொண்ட வலையபட்டி நகரத்தார் பெருமக்கள் 21.10.2012 ஐப்பசி 5ஆம் தேதி வலையபட்டி வலம்புரிநாதர் பேரவை முற்றோதல் குழுவினைத் தொடங்கினர். இக்குழுவிற்கு நடப்பாண்டுத் தலைவியாக திருமதி K. நாச்சம்மை அவர்களும், செயலாளராக திருமதி C. லெட்சுமி அவர்களும், பொருளாளராக திருமதி RM. விசாலாட்சி அவர்களும் இருந்து முற்றோதல் நிகழ்வை சிறப்புற நடத்தி வருகின்றனர்.



ஒவ்வொரு தமிழ் மாதம் முதல் ஞாயிற்றுக்கிழமை அன்று வலையபட்டி மலையாண்டி கோவில் நகர விடுதியில் முற்றோதல் நடைபெறுகிறது. அனைத்து மெய்யன்பர்களுக்கும் மதிய உணவு உபயதாரர்களால் வழங்கப்படுகிறது.

திருவாசக முற்றோதலின் போது கற்பக விநாயகர், உமையம்மை உடனாகிய சிவபெருமான், நால்வர் திருவுருவப் படங்கள் ஆகியன பூக்களால் அலங்கரிக்கப்பெற்றும், ஐம்பொன்னாலான சிறிய மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஊஞ்சலில் அருள்பாலித்தும் சிறிய வடிவிலான ஐம்பொன் சிவலிங்கங்கள் (108) சிவபெருமான் வடிவில் அலங்கரித்தும் வழிபாடு செய்யப்பெறும். அச்சமயம் சிறிய அளவிலான காசி விஸ்வநாதர், விசாலாட்சி, நந்தி ஆகிய கற்சிற்பங்களுக்கு அபிஷேக ஆராதனைகள் நடைபெறும்.

திருமணம், சாந்திக் கல்யாணம், புதுமனை புகுவிழா போன்ற நிகழ்வுகளுக்கு உள்ளூர் மற்றும் வெளியூர் நகரத்தார்களின் அழைப்பை ஏற்று அங்கு சென்று திருவாசக முற்றோதலை நடத்திக் கொடுக்கின்றோம். இம்முற்றோதல் குழுவில் உள்ள மெய்யன்பர்கள் சேர்ந்து உள்ளூர் மற்றும் வெளியூர் கோயில்களுக்குச் சென்று உழவாரப் பணிகளும் செய்து வருகின்றோம்.

இக்குழுவில் உள்ள பெண்கள் அனைவரும் திருவாசக முற்றோதலின்போது ஒரே மாதிரியான யூனிபாரம் சேலை அணிந்து கொள்வோம். விடுதியில் படிப்பது மட்டுமன்றி தமிழ் மாதத்தின் கடைசி செவ்வாய்க்கிழமையில் பொன்னமராவதி பாலமுருகன் கோவிலில் நடைபெறும் முற்றோதலில் கலந்து கொண்டு திருவாசக முற்றோதல் படிக்கின்றோம். கடந்த ஒரு வருடமாக வலையப்பட்டி க.சா. குடும்பத்தாரின் விருப்பத்தை ஏற்று லெட்சுமி விநாயகர் கோவிலில் தமிழ் மாதத்தின் 2வது ஞாயிற்றுக்கிழமை திருவாசக முற்றோதல் படிக்கின்றோம். மதிய உணவு உபயதாரர்களால் வழங்கப்பெறுகிறது.

ஊர்நலன், நகரத்தார் நலன், உலக நலன் கருதியும், மழை வேண்டியும், அருள்மிகு வடுவகிர் விழியாள் உடனாகிய வலம்புரி நாதரையும் மாணிக்கவாசகரையும் வேண்டி திருவாசக முற்றோதல் நிகழ்த்தப் பெறுகிறது. ■



K. நாச்சம்மை
தலைவி



C. லெட்சுமி
செயலாளர்



RM. விசாலாட்சி
பொருளாளர்

# பாடல்களில் பவனி வரும் மலையாண்டி புகழ்

நமது மலையாண்டியின் புகழ் பரப்பும் விதமாக வலையபட்டியைச் சேர்ந்த நகரத்தார் **திரு.சிவ. செல்வராஜன்** (இரட்டைப்பிள்ளைகார ஆச்சி வீடு) பாடல் எழுதி இசையமைப்பாளர், பாடகர் பாடி பதிவு செய்து மலையாண்டி கோயில் கும்பாபிஷேகத்திற்கு வெளியிட்டுள்ளார்



பாடல்வரி : **சிவசக்தி பாலகா**
**சீர்தரும் விநாயகா**
பாடியவர் : **சியாமளா**
இசையமைப்பாளர் : **எஸ்.பி. பூபதி**
தயாரிப்பாளர் : **ஏ. செந்தில்நாதன், எஸ். சிவலிங்கம்**

மலையாண்டி கோயில் கும்பாபிஷேக நிகழ்வுகள் பாடல் ஒலியுடன் காட்டப்படுகின்றன. சிவ. செல்வராஜன் பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் மீதும் சபரிமலை ஐயப்பன் மீதும் பாடல்கள் எழுதி பாடகர்களைக் கொண்டு பாடி பதிவு செய்து வெளியிட்டுள்ளார்.

# "மலைமேல் வீற்றிருக்கும் மலையாண்டியே"

வலையபட்டி சோம. இராமநாதன் அவர்கள் நமது மலையாண்டியின் சிறப்பையும் புகழையும் மென்மேலும் பரப்பும் விதமாக பாடல் எழுதி MM கனவுக் களம் மூலம் தயாரித்து வெளியிட்டுள்ளார்



பாடல் வரி : **மலைமேல் வீற்றிருக்கும்**
**மலையாண்டியே! கணபதியே!**
**உனை வேண்டினோம்**
இசையமைப்பாளர் : **கண்மணி ராஜா**
பாடகர் : **வேலு**
வரிகள் : **எஸ்.எம். இராமநாதன்**



பாடல் ஒலிக்கும்போது மலையாண்டி கோயிலின் அழகும், வலைய மாநகரின் அழகும் காட்டப்பெறுகின்றது. இவர் நகரத்தார் குல தெய்வங்களில் ஒன்றான உளிவீரன் புகழைத் தனது முதல் பாடலாய் எழுதிப் பதிவு செய்து வெளியிட்டுள்ளார். அதன் தொடர்ச்சியாக மலையாண்டிக்கும், முருகனுக்கும், சிவனுக்கும், கற்பக விநாயகருக்கும், தனது தந்தைக்கும், மறைந்த அன்னைக்கும் பாடல் எழுதித் தயாரித்து வெளியிட்டுள்ளார். இவர் வலையபட்டி நாரக்கரையான் வீட்டைச் சேர்ந்தவர்.

# சொக்கர் மீனாள் தாலாட்டு!

செட்டிநாட்டு ஆச்சிமார்களின் தாலாட்டு பொருள் பொதிந்ததாக இருக்கும். குடும்ப நிகழ்வுகளையும், வரலாற்று நிகழ்வுகளையும், புராண நிகழ்வுகளையும் தாலாட்டு வடிவில் கொண்டு வருவதில் திறமையானவர்கள். மதுரை மீனாட்சி சொக்கநாதர் திருமணத்தை தாலாட்டு வடிவில் ஆச்சிமார்கள் பாடியுள்ளது மிக அருமை. அந்தத் தாலாட்டு கீழே பதிவு செய்யப்பட்டுள்ளது.

மதுரைக்கும் நேர்கிழக்கே
மழைபெய்யாக் கானலிலே
வெள்ளிக்கலப்பை கொண்டு சொக்கர்
விடிகாலம் ஏர்பூட்டி
தங்கக்கலப்பை கொண்டு சொக்கர்
தரிசுழுகப் போனாராம்

வாரி விதைபாவி
வைகை நதி தீர்த்தம் வந்து
அள்ளி விதைபாவி
அழகர்மலை தீர்த்தம் வந்து
பிடித்து விதைபாவி
பெருங்கடலில் தீர்த்தம் வந்து
பிடித்து விதைபாவி
பெருங்கடலில் தீர்த்தம் வந்து
எங்கும் விதைபாவி
ஏழுகடல் தீர்த்தம் வந்து
முத்து விதைபாவி
மிளகுச்சம்பா நாத்துநட்டு

பவளக்குடை பிடித்து சொக்கர்
பயிர்பாக்க போகையிலே
வங்காளஞ் சிட்டு
வயலிறங்கி மேய்ந்ததுன்னு
சிங்கார வில்லெடுத்து
தெறித்தாராம் அம்பினாலே



ஊசிபோல் நெல் விளையும்
ஒரு புறமாய்ப்போரேரும்
பாசிபோல் நெல் விளையும்

பட்டணம் போல் போரேறும்
சரஞ்சரமாய் நெல் விளையும்
சன்னிதி போல் போரேறும்
கொத்துக்கொத்தாய் நெல் விளையும்
கோபுரம்போல் போரேறும்

கட்டுக் கலங்காணும்
கதிர் உழக்கு நெல் காணும்
அடித்துபொலி தீர்த்த
அதுவும் கலங்காணும்
மூன்று கலங்காணுமின்னு சொக்கர்
முத்திரிக்கையடிச்சாரோ
அடுப்புமொழுகி
ஐவிரலால் கோலமிட்டு
பானை கழுவி
பன்னீரால் உலை வைத்து
தங்க நெருப்பெடுத்து
தனி நெருப்பு உண்டு பண்ணி
பொன் போல் நெருப்பெடுத்து மீனாள்
பொறி பறக்க ஊதிவிட்டா

சம்பாக் கதிரடிச்சுச் சொக்கர்
தவிச்சு நிற்கும் வேளையிலே
வேரில்லாக் கொடிபிடுங்கி மீனாள்
தூரில்லாக் கூடைசெய்து
கூடையிலே சோறெடுத்து
குடலையில காயெடுத்து
சோலைக்கிளி போல மீனாள்
சோறுகொண்டு போனாளாம்

நேரமாச்சுதுன்னு சொக்கர்
நெல்லால் எறிந்தாராம்
கலத்திலிட்ட சோறுதன்னில்
கல்லோ கிடந்ததென்று சொக்கர்
கடுங்கோபம் கொண்டாராம்
வாரி எறிந்தாராம் சொக்கர்
வயிரமணிக் கையாலே

சோர்ந்து படுத்தாளாம் மீனாள்
சொக்கட்டங்காய் மெத்தையிலே

மயங்கி விழுந்தாளாம் மீனாள்
மல்லிகைப்பு மெத்தையிலே
வாரியெடுத்தாராம் சொக்கர்
வலதுபுறத் தோளணைய
ஏந்தி எடுத்தாராம் சொக்கர்
இடதுபுறத் தோளணைய

அழுத குரல்கேட்டு
அழகர் எழுந்திருந்து
வரிசை கொடுத்தாராம்
வையகத்தில் உள்ள மட்டும்
சீரு கொடுத்தாராம்
சீமையில உள்ள மட்டும்
மானாமதுரைவிட்டார்
மதுரையில பாதிவிட்டார்
தல்லாகுளமும் விட்டார்
தங்கச்சி மீனாளுக்கு
தளிகையிலே பாதிவிட்டார்

தங்கம் நறுக்கி
தமருவெட்டத் தூண் நிறுத்தி
வெள்ளி வளை பூட்டி
மேக வண்ணத் தொட்டி கட்டி
தொட்டி வரிஞ்சு கட்டி
துரை மகனை போட்டாட்டி
ஆட்டினார் சொக்கலிங்கம்
அயர்வு வரும்வரையில்
ஊட்டினார் பால் அமுதம்
உறக்கம் வரும்வரையில்
கட்டிலுக்குங்கீழே
காத்திருப்பாள் மீனாளும்
தொட்டிலுக்குங்கீழே
துணையிருப்பார் சொக்கலிங்கம். ■




முதல் கும்பாபிஷேகம் நந்தன ஆண்டு தைத்திங்கள் 19ம் நாள் 1892 திங்கட்கிழமை

**24 ஆண்டுகளுக்குப் பிறகு :** இரண்டாவது கும்பாபிஷேகம் நள ஆண்டு ஆவணித்திங்கள் 15ம் நாள் 30.08.1916 புதன்கிழமை

**25 ஆண்டுகளுக்குப் பிறகு :** மூன்றாவது கும்பாபிஷேகம் விக்கிரம ஆண்டு தைத்திங்கள் 27ம் நாள் 09.02.1941 ஞாயிற்றுக்கிழமை

**37 ஆண்டுகளுக்குப் பிறகு :** நான்காவது கும்பாபிஷேகம் காளயுக்தி ஆண்டு சித்திரைத் திங்கள் 8ம் நாள் 21.04.1978 வெள்ளிக்கிழமை

**15 ஆண்டுகளுக்குப் பிறகு :** ஐந்தாவது கும்பாபிஷேகம் ஆங்கிரச ஆண்டு தைத்திங்கள் 12ம் நாள் 25.01.1998 திங்கட்கிழமை

**15 ஆண்டுகளுக்குப் பிறகு :** ஆறாவது கும்பாபிஷேகம் சர்வசித்து ஆண்டு தைத்திங்கள் 27ம் நாள் 10.02.2008 ஞாயிற்றுக்கிழமை

**16 ஆண்டுகளுக்குப் பிறகு :** ஏழாவது கும்பாபிஷேகம் குரோதி ஆண்டு ஆவணித்திங்கள் 23ம் நாள் 08.09.2024 ஞாயிற்றுக்கிழமை ■

# வாழிய நகரத்தார் வாழிய சிகரத்தார்



**நா. மோகனசுந்தரம்**
வேந்தன்பட்டி

காவிரிப்பூம் பட்டினத்தில் கட்டிவைத்தான் கோட்டை
கண்ணெதுவும் பட்டதுவோ கடந்துவந்தான் நாட்டை!
பூவிரியும் பாண்டிநகர் நகர்ந்தவர்கள் சிறக்க
பொலிவோடு மன்னபின்னர் கொடியதுவும் பறக்க!
மாவிலையும் தோரணமும் மங்கலமும் திளைக்க
மாச்சிறப்பாய் நகரத்தார் எனும்பெயரும் நிலைக்க!
ஓவியமாய் அப்பெயரும் உலகமெலாம் ஒலிக்க
உயர்ந்தோங்கி உன்னதமாய் வாழ்ந்த கதை தெரியும்!

மன்னருக்கு நிகராக மாளிகைகள் கட்டி
மதிற்சுவரை வான்மீது முட்டவைத்தான் செட்டி!
வன்மையுடன் காடுவெட்டி முள்பொறுக்கித் திருத்தி
வனப்புடனே கழனிவாசல் வண்ணமுற இருத்தி!
மின்னலிடும் பொன்பொருளும் மீண்டுமவன் தேடி
மேலைநாடு கொண்டுவிற்று கொண்டுவந்தான் கோடி!
கன்னல்மொழி பிள்ளைகுட்டி குடும்பமதை விட்டு
கடல்தாண்டிப் போனதற்குக் காரணமோ துட்டு!

போர்மேகம் சூழ்ந்ததினால் வெளிநாட்டை விட்டு
புகலிடமாய் நகர்ந்துவந்து பிறந்தமண்ணைத் தொட்டான்!
ஊர்வந்து நங்கூரம் பாய்ச்சியவன் இல்லை
உற்றதொழில் தேடியவன் ஊரூராய் நகர்ந்தான்!
பேர்பெற்ற புண்ணியமும் ஒன்றதிலே உண்டு
பிள்ளைகுட்டி தன்னோடு வாழுகின்றார் நன்று!
யார்வைத்தார் பெயர்நமக்கு நகரத்தார் என்று
யார்வைத்தால் என்னநாம் சிகரத்தார் தானே!

கட்டிவைத்த கோயில்கள் கணக்கிலேதும் உண்டா
கரையோடு நிறைவான ஊருணிகள் கண்டார்!
மட்டில்லா மகிழ்வோடு அன்னதானம் செய்வார்
மகராசன் மக்களிவர் தருமமழை பெய்வார்!
பெட்டியடிப் பையன்கூடப் பின்னொருநாள் வளர்ந்து
பள்ளிக்கூடம் கட்டுதற்குப் பரிசளிப்பான் அளந்து!
செட்டிமகன் அனைவருக்கும் சிந்தையிலே ஊறும்
சீர்மிகுந்த கருணையது வாழவைக்கும் நாளும்!

ஊருவிட்டு ஊருசென்று பிழைத்துநின்ற போதும்
ஊர்தனையே நினைத்துமனம் சுற்றிவந்து மோதும்!
காருகன்னி காசுபணம் சேர்த்துவைத்த போதும்
கண்களுமே கனவினிலும் சொந்தஊரை நாடும்!
பேருபுகழ் பெருமையெலாம் கூடிவந்த போதும்
பிறந்தமண்ணை எண்ணியெண்ணிப் பேதைநெஞ்சம் வாடும்!
தேருபோல அசைந்துவரும் திரளான கவிதை
தித்திப்பாய் ஆக்கிவைக்கும் நாம்பிறந்த புவியை!

## வலையபட்டியில் வாழும் ஏழுகோயில் நகரத்தார் புள்ளி விவரங்கள்

| | | புள்ளி |
|---|---|---|
| 1) | மாத்தூர்கோயில் நகரத்தார்கள் | 509 |
| 2) | வயிரவன் கோயில் நகரத்தார்கள் | 505 |
| 3) | பிள்ளையார்பட்டிக்கு கோயில் நகரத்தார்கள் | 440 |
| 4) | நேமங்கோயில் நகரத்தார்கள் | 231 |
| 5) | இளையாத்தங்குடி கோயில் நகரத்தார்கள் | 146 |
| 6) | இலுப்பைக்குடிக் கோயில் நகரத்தார்கள் | 46 |
| 7) | இரணிக்கோயில் நகரத்தார்கள் | 28 |
| | மொத்தப் புள்ளிகள் (குரோதி வருடம், 2024 வரை) | 1905 |



# வலையபட்டியில் அண்ணாமலை தீபம்

கார்த்திகைக்கு திருவண்ணாமலையில் ஏற்றப்படுவதைப் போன்று பெரிய தீபம் (கொப்பறையில் ஏற்றப்படுவது) வலையபட்டி மலையாண்டி கோயில் மேல்விதானத்தில் ஏற்றப்படுகிறது.

திருவண்ணாமலையில் ஒவ்வொரு ஆண்டும் மலையின் மீதுள்ள கோயில்களைத் தேர்ந்தெடுத்து கார்த்திகைக்குக் கொப்பறை நெய்தீபம் ஏற்றும் வழக்கத்தை ஆரம்பித்து வைத்துள்ளதாகவும் அதன்படி 5 ஆண்டுகளுக்கு முன் நம் மலையாண்டி கோயிலைத் தேர்ந்தெடுத்து தீபம் ஏற்ற ஆரம்பித்தனர் எனவும் கூறப்படுகிறது.

ஐந்து ஆண்டுகளுக்கு முன் க.மு.சு.சி. தியாகராஜன் செட்டியார், எல்.சி.எம். தியாகராஜன் செட்டியார், அண்ணாமலை செட்டியார் (சிவகாசி), புள்ளாஞ்செட்டி மாணிக்கம் செட்டியார் ஆகியோரது காரியத்தனத்தின் போது துவங்கப்பட்டது.



28 டின் இலுப்பை எண்ணெய்யும், 3 டின் நெய்யும் கொண்டு கொப்பறையில் தீபம் ஏற்றப்படுகிறது. திருவண்ணாமலையிலிருந்து வரும் சிவனடியார்களின் வழிகாட்டுதலின் படி கார்த்திகை (கொப்பறை) நெய் தீபம் ஏற்றப்படுகிறது. ■

## வலையபட்டி நகரத்தார்

# மகளிர் சங்கம்

நகரத்தார் பெருமக்கள் அனைவருக்கும் வணக்கம். வலையபட்டியில் மிகச் சிறப்பாக நடைபெற்ற வலம்புரியில் ஒரு வேடந்தாங்கல் என்ற நிகழ்வின் மூலம் விழுந்த விதையே வலையபட்டி நகரத்தார் மகளிர் சங்கம் தோன்றுவதற்கு காரணமாக அமைந்தது. இச்சங்கம் 04.09.2022ஆம் தேதி அன்று வலையபட்டியில் உயர்திரு PL.M. முத்தையா செட்டியார் அவர்கள் முன்னிலையில் PL.A. ரெசிடென்சியில் துவக்கி வைக்கப்பட்டு சிறப்பாக நடைபெற்று வருகிறது. இந்த சங்கத்தின் தலைவியாக திருமதி மல்லிகா தியாகராஜன் அவர்களும், துணைத் தலைவியாக திருமதி விசாலாட்சி திருப்பதி அவர்களும், செயலாளராக திருமதி அலமேலு சிதம்பரம் அவர்களும், துணைச் செயலாளராக திருமதி மாலா அருணாச்சலம் அவர்களும், பொருளாளராக திருமதி ரமா பசுபதி அவர்களும் பொறுப்பேற்றுக் கொண்டனர். மேலும் 17 பேர் செயற்குழு உறுப்பினர்களாகப் பொறுப்பேற்றுக் கொண்டனர்.

### எங்களது மகளிர் சங்கத்தின் செயல்திட்டங்கள்

1. மாதம் தோறும் ரூபாய் ஒன்பதாயிரம் செலவில் அருள்மிகு மலையாண்டி சுவாமி கோவிலுக்கு மாலைகளும் மலர்களும் அளிக்கப்பட்டு வருகின்றன.

2. ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று மலையாண்டி கோவிலில் கிரிவலம் வந்து அம்மனுக்கு சந்தன காப்பிட்டு அர்ச்சனை செய்து சுமார் 300 பேருக்கு இரவு உணவு வழங்கப்பட்டு வருகிறது.

3. அனைத்து மாதங்களிலும் முதல் தேதி அன்று மகளிர் சங்கம் மூலம் அபிஷேக ஆராதனைகள் செய்யப்பட்டு வருகின்றன.



4. மிகவும் பிரமாண்டமான அளவில் வலையபட்டியில் இரண்டு சந்தைகள் நிகழ்ச்சி சிறப்பாக நடத்தப்பட்டது.

5. நமது ஊர் பெண்களுக்கு சேலை மற்றும் இனிப்புகள் வழங்கி போட்டிகள் வைத்துப் பரிசுகள் அளித்து தீபாவளி கொண்டாட்டம் நடைபெற்று வருகிறது. ஒரு வருடம் பழனியப்பா கல்லூரி குழந்தைகளுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டது.

6. தீபாவளி சிறப்புத் திட்டமாகப் பரிசுக் கூப்பன் வழங்கிக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்து சேலைகள் பரிசாக அளிக்கப்பட்டன.

7. ஒரு நாள் சுற்றுலா நான்கு முறையும், குளுகுளு குற்றாலம், அறுபடை வீடு என நம் வலையபட்டி நகரத்தார் பெண்களுடன் மிகவும் மகிழ்ச்சியாகச் சுற்றுலா

சென்று வந்தோம்.

8. நம் மலையாண்டி கோயில் கும்பாபிஷேகத்தின் பொழுது பள்ளி அறைக்கு வெள்ளி ஊஞ்சல் மகளிர் சங்க நிர்வாகக் குழு மற்றும் செயற்குழு உறுப்பினர்களால் வழங்கப்பட்டது.

9. நம் கோவிலிலும் வலையபட்டி நகரத்தார்கள் இல்லங்களிலும் பயன்படுத்தும் வகையில் மூன்று ஹோம குண்டங்கள் செய்து வழங்கப்பட்டது.

10. கும்பாபிஷேகத்தின் பொழுது மலையாண்டி கோயில் நிலை வாயில் முகப்பு மற்றும் கோவிலின் உட்புறங்களில் மலர் அலங்காரம் செய்யப்பட்டது. மேலும் ஆயிரம் பெண்களுக்கு மஞ்சள் குங்குமம் வழங்கி சிறப்பிக்கப்பட்டது.

11. மலையாண்டி கோயில் கும்பாபிஷேகத்தின் போது நமது நகர மடத்தில் 63 நாயன்மார்களின் அபிஷேக ஆராதனைகள் மற்றும் திருவாசக முற்றோதல் நிகழ்ச்சி மிகவும் சிறப்பாக நடத்தப்பட்டது.

12. எங்களால் சேமிக்கப்பட்ட நிதியிலிருந்து நகரத்தார் பெண்களில் ஒருவருக்கு அனைத்து செலவுகளையும் செய்து திருமணம் மகளிர் சங்கத்தின் மூலம் சிறப்பாக நடத்தி வைக்க முடிவு செய்துள்ளோம் என்பதை இந்த இடத்தில் தெரிவித்துக்கொள்கின்றோம்.

13. எங்களது அனைத்து செயல் திட்டங்களுக்கும் மிகவும் உறுதுணையாக இருந்து நிதி வழங்கிச் சிறப்பித்த எங்கள் உறுப்பினர்களுக்கும் நகரத்தார் பெருமக்களுக்கும் எங்களது உளம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.



# மலையாண்டி விநாயகர் துதி



வித்துவான் **வே. அண்ணாமலை** B.Lit.,
(வலம்புரி அண்ணாமலை)

1. சீர்ஆர் வலையபட்டி செல்வம்செழித்தோங்கி
ஊர் மக்கள் வாழ்வு உயர்வுபெற – ஏர்ஆர்
குணமதிகம் கொண்ட குருமலை யாண்டிக்
கணபதியே! உன்பாதம் காப்பு.

2. வையா புரியின் வடகரையின் குன்றதனில்
மெய்யன்பர் போற்றும் விநாயகனே – துய்யவனே
எண்ணி உனைத்துதிப்போம் இன்பமலை யாண்டியே
கண்ணின் கடைப்பார்வை காட்டு.

3. ஓங்காரத் தத்துவனே உள்ளச் சுடர்விளக்கே
ஆங்காரம் நீக்கி அருள்புரிவாய் – பாங்காகச்
சித்திபுத்தி சேர்ந்திலங்கும் செல்வ மலையாண்டி
நித்தம் தொழுவோம் நினைந்து

4. அப்பா மலையாண்டி அன்புடனே எல்லாரும்
தப்பாமல் உன்னிரண்டு தாள்பணிவோம் – எப்போதும்
நல்லறிவு நற்செல்வம் நன்மக்கள் நல்வாழ்வை
நல்கி அருள்வாய் நயந்து

5. கற்கண்டைப்போலினிக்கும் கன்னித் தமிழினிலே
சொற்கண்டு போற்றித் துதிசெய்வோம் – நிற்கண்டே
ஐயா மலையாண்டி அத்தி முகத்தோனே
செய்ய திருவருளைச் செய்

(நிற்கண்டு – உன்னைக் கண்டு)

# மறக்க முடியாத நினைவுகள்



**சீத்தலைச் சாத்தனார் (எ)**
**வெங்கடாசலம் செட்டியார்**

புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள இரண்டு கிராமங்களில் மலையாண்டி ஆட்சி செய்யும் வலையபட்டி ஒன்று. தன்வந்திரி பெருமாள் ஆட்சி செய்ய உள்ள கூழிபிறை ஒன்று. வலையபட்டியில் இருந்து கூழிபிறைக்கு வலசை வந்தது சங்கரன் செட்டியார் குடும்பம். வலசை என்றால் ஏதோ ஒரு காரணத்திற்காக ஊர் விட்டு ஊர் குடும்பத்துடன் பெயர்ந்து செல்வது ஆகும். வலசை வந்த குடும்பத்திற்குப் பட்டப் பெயர் சங்கரன் செட்டியார் வீடு.

ச.பெரி.ச.கரு.ச.சுப.ச ஏழாவது தலைமுறையில் எனது அண்ணன் பெயர் சங்கரன் செட்டியார். கி.பி 1850 வாகில் குடிபெயர்ந்து இருக்கக்கூடும். குடிபெயரும் காலத்திற்கு முன்பே வலையபட்டியில் இன்று மிகவும் பிரசித்தி பெற்ற சங்கரன்குண்டு குளமும் அதன் கரையில் சங்கர அப்பச்சி பிள்ளையார் கோவில் தோற்றமும் செய்து வணங்கி வந்திருக்கிறார்கள். தண்ணீர் தர்மமும் விக்கின விநாயகன் கருணையும் ஊருக்கு கிடைக்க அவர்கள் பிள்ளையார் சுழி இட்டு இருக்கிறார்கள்.

குண்டு என்று முதலில் சொல்லப்பட்டது குளமாக ஆனதும் ஒரு நம்பிக்கை ஜெயித்த காரணம் தான். மூன்று சட்டி மண் எடுத்து கரையில் போட்டால் குலம் தழைக்க குழந்தைச் செல்வம் கிடைக்கும் என்பது நம்பிக்கை. இதை அனுபவத்தில் சொன்னவர் எனது செம்பூதி நண்பர். பெருவாரியாக அந்த நம்பிக்கை ஜெயிக்க ஜெயிக்க குண்டு என்று இருந்தது இன்று குளமாக மாறியது இதுவும் சங்கர அப்பச்சியின் கருணை தான்.

குழிபிறையில் உள்ள வைரவன் கோயில் 7 புள்ளிகள் மட்டும் இன்று சுண்டக்காடு உடையம்மையும், வேலங்குடி கருப்பரும் தங்கள் குலதெய்வமாக வணங்கி வருகிறார்கள். காரணம் இந்த ஏழு புள்ளிகளும் தான் வலையபட்டியில் இருந்து வலசை வந்தவர்களின் இன்றைய வாரிசுகள். அதேசமயம் பரம்பரையாக மூத்தோர் வணங்கிய சங்கர அப்பச்சி விநாயகரை எப்பொழுதும் துதித்து வருகிறார்கள்.

சில தலைமுறைகளாக சங்கராப்பச்சி பிள்ளையார் கோயிலையும் குளத்தையும் முன்னோர் வழித் தோன்றல்களான வடுகன் செட்டி லட்சுமணன் செட்டியார் வகையறா குடும்பத்தார் மிகச் சிறப்பாகப் பராமரிக்கிறார்கள் என்று கேள்விப்படும் பொழுது இறை அருளை மறக்க முடியாத நினைப்புக்களாக பின்வரும் பரம்பரைக்குச் சமர்ப்பிக்கின்றேன். அதனால் தான் நம்மவர்கள் படைப்பு என்று ஒரு பாரம்பரிய வழித்தொடரை நிறுவியுள்ளனர் என்பது போற்றுதலுக்கு உரியது.

# ஆனந்தம் ஆரம்பம்



மகிழ் முத்தையா

நினைத்தது நிகழ்ந்தது...
நெஞ்சமும் மகிழ்ந்தது...
நிழலுக்கும் உயிர் தரும்
உறவுகள் ஆனந்தம்...

உருகிடும் உள்ளமும்...
உதவிடும் கரங்களும்...
இவை தானே பிறருக்கு
நாம் தரும் பேரின்பம்...

இங்கும் அங்கும் எங்கும் ஆனந்தம்...
போதும் எனும் மனம் போதும்...
எல்லாம் நன்மை என்றே கொண்டாலே...
வரும் நாளும் நலமாகும்...

பிறர் நெஞ்சம் கொண்டு நாமும் யோசிப்போம்...
காயப்பட்ட போதும் நேசிப்போம்...
மழலை போலே மனதை கொள்வோமே...
துன்பம் அதனை யார் தந்தாலும்
இன்பம் அள்ளி நாம் தருவோமே...

குறைகளைக் களைந்திடு...
கவலைகள் மறந்திடு...
இன்பங்கள் துளிர்விட
இது தானே ஆரம்பம்...

காயங்கள் பொறுத்திடு...
கனிவுடன் பேசிடு...
தனிமையும் இனியில்லை
உலகமே நம் சொந்தம்...

வாருங்கள் ஒன்றாய் அமர்ந்து...
வருத்தங்களை வாய்விட்டுப் பகிர்ந்து...
அருகில் வந்து அன்புடன் அணைத்திட
நிமிடங்கள் அழகாகும்...

நிகழ்ந்தவை நாம் மறப்போமே...
நன்மை பல நாம் நினைப்போமே...
பிறர் சூழல் அதனை உணர்ந்திட
வாழ்வின் சுவை கூடும்...

விழிகள் மெல்லக் கலங்குவதும் ஏனோ...
விரல்கள் வந்து துடைத்திடும் என்றே தானோ...

வாழ்வுக்கு அர்த்தம் என்ன...
வான் புகழும் செல்வமும் அல்ல...
இவர் போல இனி யாரென உரைக்கும்
உதடுகள் தான் வேண்டும்...

நன்மைக்குத் துணை நிற்போமே...
நன்றியுடன் தினம் இருப்போமே...
நாம் பார்க்கும் பார்வையில் தானே
நன்மைகள் கூடிடும்...

நாம் சேர்ந்து வாழ்ந்திடும் நொடிகள் வரமே...
நல்வாழ்வுக்கு அது கூட்டிடும் நிறமே...

குறைகளை களைந்திடு...
கவலைகள் மறந்திடு...
இன்பங்கள் துளிர்விட
இது தானே ஆரம்பம்...

காயங்கள் பொறுத்திடு...
கனிவுடன் பேசிடு...
தனிமையும் இனியில்லை
உலகமே நம் சொந்தம்...

## நகரவிடுதிக் கட்டடம்

நகர விடுதிக் கட்டடத்தின் அடித்தளம் (Basement) வரை தனது சொந்தச் செலவில் கட்டியதுடன் இரண்டு செங்கற்காளவாய்க் கற்கள் மற்றும் 40 தேக்கு உருட்டு மரங்களும் கொடுத்துவர் **ஆ.ராம. வெங்கடாசலம் செட்டியார்** அவர்கள்.

## யாகசாலை



ஆறு கால யாகசாலை பூஜைகளையும் நல்ல முறையில் மேற்பார்வையிட்டு சிறப்பாக நடத்திக் கொடுத்த **அரிமளம் சுப்பு.**

# அழகுமிகு மலையாண்டி

ஆக்கம்
**வெ.ராம.சிவ. முருகப்பன்**
THE HINDU (Rtd.,)

அழகுமிகு மலையாண்டி அருமைமிகு மலைமீதில்
அருள்தரவே வீற்றிருக்கும் பெருமை சொல
எந்நாவில் எப்போதும் அமர்ந் தென்னைக்
கலைவாணி காத்திடுவாள்! அவருடனே
உடனுறையும் வலம்புரி நாதர் (வடு வகிர்விழியாள்
குமரனையும் கூட வைத்தார்!

நால்சமயக் குரவருடன் தென்திசை பார்த்த
மர்ந்த தட்சிணா மூர்த்தி யுடனும்
கன்னிமூல கணபதி கஜலெஷ்மி துர்க்கையுடன்
சரஸ்வதியும் வீற்றிருக்க சிவகாமி அம்மையுடன்
தில்லைக் கூத்தனும் தெவிட்டாத நடம் புரியவும்
காலபைரவர் சனீஸ்வரர் சூரியனும் தனித்திருந்து
அருள்புரியவும், நவகோள்கள் ஒன்பதுடன்
நந்தியும் மூஷிகமும் முன்னின்று வழிகாட்டவும்

தென்மேற்கு மூலையின் நிழல்பரப்பும் தலவிருட்ச
வில்வ மரமும் வடமேற்கில் வீற்றிருந்து
அருள்புரியும் பெருமாளுடன் தாயாரும் கருடாழ்வாரும்
வடபுறத்து மத்தியில் வற்றாத பெரும்
சுனையும் ஏறிவரும் தென்புறத்தில் ஏற்றமிகு
ஐயப்பன் ஆலயமும் திகழ மலையின்

வடமேற்கில் தனித்திருந்து அருள்புரியும்
பழைய மலை யாண்டி யுடனே
அடிவாரம் தனிலமைந்து ஊர்மக்கள் துயர்தீர்க்கும்
வையாபுரி ஊருணியும் மேற்புரத்தில் குதிரை
மீதமர்ந்து சிறப்புடனே ஊர்காக்கும் கைலாச
நாத ரவரும் பெரும்சுற்றுப் பாதைதனில்
பாங்குடன் அமைந்துள்ள பிள்ளையார் கோவிலும்
கார்த்திகை மடமும் சூரன் விழாக் கொட்டகையும்

பங்குனி உத்திரத்தில் பக்தர்கள் இறங்குகின்ற
அக்கினியைத் தாங்கும் பாங்கான மணல் வெளியும்
மாநோன்புக் கொட்டகையும் பசுமடமும் ஆச்சி மடம்
என்றழைக்கும் ஞானியர் வாழ்விடமும் உனைச்சுற்றி!

மலையாண்டி என்றதும் குன்றுதோறாடும் குமரனோ
என்றெண்ண வேண்டாம்! குமர னவன்
அண்ணனாம் சிராப்பள்ளி மீது றையும்
கணநாதன் இங்குமே சீர்மிகவே ஆட்சிபுரிவார்!

வலையமா நகரத்தார் வலிமையுடன் கல்சுமந்து
பாங்குடனே தோற்றுவித்து ஒருநூறும் முப்பத்து
ஈராண்டு ஆகியும் திடமாக வீற்றிருக்கும்
மலையாண்டி கோவிலின் புகழ்பாட வந்த
உன் மைந்தனுக்கு அருள் செய்குவாய்
வலையமா நகர்வாழும் உயிர்கள் அனைத்தையும்
நலமுடன் வாழவைப்பாய்! ■

## கும்பாபிஷேகத்திற்கு

முன் | பின்




அம்பாள் கோபுரம்




கன்னி மூல கணபதி கோபுரம்

## கும்பாபிஷேகத்திற்கு

முன் | பின்





சுப்ரமணியர் கோபுரம்





ராஜ கோபுரம்



# கருங்கல்லில் தெய்வச் சிலைகள் வடிப்பது ஏன்?

**கருங்கல்லில் சிலை வடிப்பதன் இரகசியம்**

ஆகம விதிகளின்படி கருங்கல்லால் கட்டப்பட்ட பழங்காலக் கோவில்களிலும் வேத, ஆகம, சிற்ப சாஸ்திர முறைப்படி யந்திர ஸ்தாபனம் செய்து, தெய்வ உருவங்களைக் கருங்கல் சிலையாகப் பிரதிஷ்டித்து தினமும் முறையாகப் பூஜை செய்து வரும் கோவில்களுக்கு நாம் சென்று தரிசனம் செய்யும் வேளையில், நம் உடலில் ஓர் சக்தி ஊடுருவிச் செல்வதை அனுபவ பூர்வமாக பலர் உணரலாம்.

ஆகவே தான், பெரும்பாலும் சிலைகளைக் கருங்கல்லில் வடிவமைக்கிறார்கள். தமிழ்நாட்டில் உள்ள அனைத்துக் கோவில்களிலும் விக்கிரகங்களை உலோகத்தால் செய்யாமல், கருங்கல்லால் சிலை செய்கிறார்கள். இதற்கு முக்கியமான ஒரு காரணம் உண்டு.

உலோகத்தின் ஆற்றலை விடக் கருங்கல்லின் ஆற்றல் பல மடங்கு அதிகமானது. எந்தச் சக்தியையும் தன் வசம் இழுத்துக்கொள்ளும் தன்மையுடையது கருங்கல். இதில் நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் எனும் பஞ்ச பூத தன்மைகள் அடங்கியுள்ளன. இது வேறு எந்த உலோகத்திலும் வெளிப்படுவது இல்லை.

**நீர்:** கல்லில் நீர் உள்ளது. எனவே தான் தனது இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறாமலிருக்கிறது. கல்லில் நீரூற்று இருப்பதைக் காணலாம். கர்நாடக மாநிலத்தில், சில கோவில்களில் கல்லில் நீரூற்று வருவதைக் காணலாம்.

**நிலம்:** பஞ்ச பூதங்களின் தத்துவங்களில் ஒன்றான நிலம் கல்லில் உள்ளது. எனவே தான், கல்லில் செடி கொடிகள் வளர்கின்றன.

**நெருப்பு:** கல்லில் நெருப்பின் அம்சமும் உண்டு. கற்களை உரசினால் தீப்பொறி பறப்பதே சான்று.

**காற்று:** கல்லில் காற்று உண்டு. எனவே தான் கல்லில் தேரை கூட உயிர் வாழ்கிறது.

**ஆகாயம்:** ஆகாயத்தைப் போல், வெளியிலிருக்கும் சப்தத்தை தன்னகத்தே ஒடுக்கி பின் வெளியிடும் சக்தி கல்லுக்கு உண்டு. எனவே தான், கருங்கல்லில் கட்டப்பட்ட கோவில்களில் நாம் கூறுவதை எதிரொலிக்கும் அதிசயம் நடக்கிறது. திருவையாறு ஐயாரப்பன் கோவிலில் நாம் பேசுவது அப்படியே எதிரொலிப்பதை நாம் ஆனந்தமாகக் கேட்டு மகிழலாம்.

இக்காரணங்களினால், இறை வடிவங்களைப் பஞ்ச பூதங்களின் (ஐம்பூதங்களின்) வடிவில் இருக்கும் கருங்கல்லில் வடிவமைத்து வழிபாடு செய்கிறோம். அபிஷேகம், அர்ச்சனை, ஆராதனைகள் முறைப்படி செய்யும் போது, ஒரு கோவிலில் பஞ்ச பூதங்களின் தன்மை அதிகரிக்கின்றது. அக்கோவிலில் நாம் வணங்கும் போது, நம் உடலில் நல்ல அதிர்வுகள் உண்டாகி, அதன் மூலம் நம் வாழ்வில் நல்ல பலன்கள் ஏற்படுகின்றன.

இதுவே, கருங்கல்லில் சிலை வடிப்பதன் இரகசியம். ■

## வாரணத்து நாயகா வலம்புரி விநாயகா

வாரணத்து நாயகா வலம்புரி விநாயகா
ஆதி சக்தி சிவன் அணைக்கும் வல்லபி விநாயகா
கருணை செய் கிருபாகரா கார்த்திகேயன் சோதரா
ஓம் எழுத்து மந்திரபிரணவ ரூபனே விநாயகா
வல்லபை விநாயகா வல்லமைகள் தருகவே
வாழ்வில் வெற்றி காணவே வாழ்த்தினோம் வருகவே
ஏற்றுக் கொண்ட பணிகள் எல்லாம் ஏற்றம் காண வருகவே
போற்றினோம் பூஜித்தோம் வெற்றி காண வருகவே
ஏற்றம் காண வருகவே, வெற்றி காண வருகவே ■

# கடவுள் படையலை சாப்பிடுவாரா?

ரொம்ப நாளா நமக்கு விடை தெரியாத ஒரு கேள்வியிது. சரியான விளக்கத்தைப் படித்துத் தெளிந்தேன் நீங்களும் படித்து அறிவீர்களாக.....

சிஷ்யன் ஒருவன் தன் குருவிடம் ஒரு கேள்வி கேட்டான்.

"குருவே, நாம் படைக்கும் நைவேத்யத்தை இறைவன் அருந்துகிறார் என்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

இறைவன் சாப்பிட்டால் நாம் பிறருக்கு எப்படிப் பிரசாதமாக வழங்க முடியும்? கடவுள் படையலைச் சாப்பிடுவாரா?" என்று கேட்டான்.

குரு எதுவும் சொல்லாமல், அவனை ஊடுருவி பார்த்துவிட்டு நமது வேதாந்த வகுப்புக்கு நேரமாகி விட்டது. வகுப்பறையைத் தயார் செய். சிறிது நேரத்தில் நானும் வருகிறேன் என்றார்.

அனைத்தும் பூர்ணமான வஸ்துவிலிருந்தே தோன்றியது எனப் பொருள் கொண்ட "பூர்ணமிதம்" எனும் ஈஷாவாசிய உபநிஷத்தில் வரும் மந்திரத்தை விளக்கினார் குரு. அனைத்து மாணவர்களும் மந்திரத்தை மனதில் உருப் போடத் துவங்கினர்.

சிறிது நேரத்திற்கு பிறகு கேள்வி கேட்ட சிஷ்யனை சைகையால் அழைத்தார் குரு. குருவின் முன் பணிவுடன் வந்து வணங்கி நின்றான்.

"எனதருமை சிஷ்யனே, மந்திரத்தை மனதில் ஏற்றி கொண்டாயா?", என்றார்.

"முழுமையாக உள்வாங்கிக் கொண்டேன் குருவே".

"எங்கே ஒரு முறை சொல் பார்ப்போம்" கண்கள் மூடி மனதை ஒருநிலைப்படுத்தி கணீர் குரலில் கூறத் துவங்கினான்...

"பூர்ண மித பூர்ண மிதம்...." எனக் கூறி முடித்தான்.

மெல்ல புன்சிரிப்புடன் குரு தொடர்ந்தார். "நீ சரியாக மனதில் உள் நிறுத்தியதாகத் தெரியவில்லையே... எங்கே உனது புத்தகத்தைக் காட்டு" பதட்டம் அடைந்த சிஷ்யன், புத்தகத்தைக் காண்பித்துக் கூறினான், "குருவே தவறு இருந்தால் மன்னியுங்கள். ஆனால் நான் கூறியது அனைத்தும் இதில் இருப்பதைப் போலவே கூறினேன்...."

"இந்த புத்தகத்திலிருந்து படித்துதான் மனதில் உள்வாங்கினாயா?".

இதிலிருந்து உள்வாங்கினாய் என்றால் மந்திரம் இதில் இருக்கிறதே?

நீ உன் மூளையில் மந்திரத்தை ஏற்றி கொண்டால் புத்தகத்தில் இருக்கக் கூடாதல்லவா ?"

சிஷ்யன் குழப்பமாகப் பார்த்தான்.

குரு தொடர்ந்தார், "உனது நினைவில் நின்ற மந்திரம் சூட்சம நிலையில் இருக்கிறது.

புத்தகத்தில் இருக்கும் மந்திரம் ஸ்தூல வடிவம். இறைவன் சூட்சம நிலையில் இருப்பவன்.

இறைவனுக்குப் படைக்கப்படுவது ஸ்தூல வடிவில் இருந்தாலும் அவன் சூட்சமமாகவே உட்கொள்கிறான். நீ உள்வாங்கிய பின் புத்தகத்தில் மந்திரம் அளவில் குறைந்துவிட்டதா ?

அதுபோலத் தான் இறைவன் உட்கொண்ட பிரசாதம் அளவில் குறையாமல் நாம் எல்லோரும் உண்கிறோம்.

ஸ்தூலமாக இருக்கும் நாம் ஸ்தூலமாகவும், சூட்சுமமாக இருக்கும் இறைவன் சூட்சுமமாகவும் நைவேத்யத்தை உட்கொள்கிறோம்."

தனது பக்தியற்ற தர்க்கம் செய்த அறியாமையைக் குருவிற்கு நைவேத்யம் செய்து முழுமையடைந்தான் சிஷ்யன். ஆன்மீக வாழ்வுக்குப் பாரம்பரிய பூஜைமுறை அவசியம் என்பதை அனைவருக்கும் தெரியப்படுத்தி ஆன்மீக வாழ்க்கை வாழ்வோம் !



சிருங்கேரி நூலகத்தில் உள்ள மிக மிக அரிதான படம்.

1967 ஆம் ஆண்டு வரையப்பட்ட இந்தப் படத்தில் கருடன் மீது மஹாலக்ஷ்மி, மஹாவிஷ்ணு இருவரும் கனகவர்ஷினியாக, காட்சி தருகின்றார்கள்.

விஷ்ணு புராணத்தில் உள்ள ஸ்லோகத்தின் அடிப்படையில் வரையப்பட்டது.

இந்தப் படத்தில் மகாவிஷ்ணு மற்றும் மகாலட்சுமி இருவரும் சேர்ந்து கையிலிருந்து தங்கத்தை வெளியிடுகிறார்கள். விஷ்ணு வலது கையில் சூரியனையும், இடது கையில் சந்திரனையும் பிடித்திருக்கிறார்.



# விநாயகர் அகவல்

விநாயகர் அகவல் என்பது ஒரு யோக நூலின் மாபெரும் பொக்கிஷம். 72 வாக்கியங்களுள்ள அது, உடலின் ஒன்பது வாயில்களைக் (7+2=9) குறிப்பிடுவதாக யோக மரபினர் சொல்கிறார்கள்.

மயில் அகவும்; குயில் கூவும். ஆனால், யோகியருக்கோ "வானத்தின் மீது மயிலாடக் கண்டேன், மயில் குயிலாச்சுதடி" எனும் அனுபவம் வாய்க்கிறது. மயில் அகவுவது போல் சந்தம் அமைந்திருப்பதால் இந்த விநாயகர் துதி, விநாயகர் அகவல் எனப்படுகிறது. அவரை விட மேலான தலைவர் இல்லையென்பதைக் குறிக்கவே "வி" நாயகர் என வணங்குகிறோம்.

"சீதக் களபச் செந்தாமரைப் பூம் பாதச் சிலம்பு பலவிசை பாட" எனத் தொடங்குகிறார் ஔவை. இதில் பாதச் சிலம்பு பாடும் பல்லிசை என்பது அதிர்வலைகளால் தோன்றிய உலகத்தைக் குறிக்கிறது. நம்முடைய வேதங்களை சப்தப் ப்ரமாணம் என்றே சொல்கிறோம். சப்தத்திலிருந்து தூய மாயை, இயல்பு மாயை, இரண்டும் கலந்த மாயை என்ற மூன்றும் தோன்றித்தான் புவி அமைந்தது, புவனமும் அமைந்தது, "பெரு வெடிப்பு" என அறிவியலாளர்கள் ஓசை அதிர்வலைகளைக் கொண்டு உலகின் தோற்றத்தைக் கணக்கிடுகிறார்கள். குளிர்ந்த சந்தனப் பூம்பாதங்கள் – தீ குளிர்ந்து இவ்வுலகம் நுண்ணிய அலைகளால் உண்டானதை மட்டும் குறிக்கவில்லை; நம் உடலின் நரம்புகள் சென்றடையும் முடிவையும் அவைகள் பூமியிலிருந்து எதிர்மின்ணணு ஆற்றலைப் பெற்றுக்கொள்ளும் தன்மையையும் சொல்கின்றன. கால்களில் திறன் மையங்கள் இருப்பதை அறிவியல் ஒத்துக் கொள்கிறது. பாதங்கள் நேரே பூமியில் படும் பொழுது ஆற்றல் மையங்கள் சார்ஜ் ஆகின்றன.

**"பேழை வயிறும் பெரும் பாரக் கோடும்"** உடல் பருமனாக இருப்பவர்களைப் பார்த்து சிரிக்காதவர்கள் குறைவே; அவ்வடிவினரான கணபதியை வணங்கும் தெய்வமெனச் செய்து பல வடிவங்களை ஏற்கச் செய்த நம் வழிபாட்டு முறை உளவியல் சார்ந்தது. பானை வடிவம் உலகத்தின் உருவத்தை, அதாவது

உருண்டை என்பதையும், பேரண்டங்கள் கொண்ட பெரும் வயிறெனவும் சுட்டுகிறது. அறிவியல் போராடி நிறுவிய உண்மை இது.

"பெரும் பாரக் கோடு" உறுதி மிக்க ஒற்றைத் தந்தம். வலது பக்கம் தந்தம் குறைந்தும், இடதில் எழும் பிறை நிலவெனவும் அவன் ஆண் – பெண்ணென ஒன்றேயாகத் தோற்றம் தருகிறான் என்கிறது யோக நூல். "இருபத்தி மூன்று க்ரோமோசோம்களில் இருபத்தியிரண்டில் ஆணிற்கும், பெண்ணிற்கும் எக்ஸ்–எக்ஸ் என்றுதான் அமைகிறது. ஒன்று மட்டும் எக்ஸ்–வொய் என ஆனால் கரு ஆண் சிசுவாகிறது என்கிறது" அறிவியல்.

"வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்" இந்த முகம் காட்டும் குறியீடுகள் பல– கம்பீரம், ஞானம் அதில் சித்தம் கனிந்து செந்தூரமாய்த் திகழ்கிறது. மனிதன் கையால் எடுத்து பின்னர் வாய்க்குள் இட்டு உண்பதைப் போல், யானையும் தும்பிக்கையால் எடுத்து பின்னர் வாய்க்குள் செலுத்தும். இப்படி உணவு உண்ணும் முறையை ஏனைய உயிர்களிடத்தில் காண இயலாது.

அதைப் போலவே முத்து, கடலில் சிப்பியில் விளையும் என்றே அறிந்திருக்கிறோம். அது மூவிடங்களில் விளையும் – சிப்பி, மூங்கில் மற்றும் யானையின் மத்தகத்தில், அதாவது கும்பத்தில். ஒன்பது இரத்தினங்களில் முத்து ஒன்றே குளிர்ச்சி தரும். "Pineal Glands" இந்த நாளமில்லாச் சுரப்பி உடலின் குருதிக்கொதிப்பைச் சமன் படுத்துகிறது. அதை யோகம் மூன்றாம் கண் எனக் கூறுகிறது.

"அஞ்சு கரமும் அங்குச பாசமும் நெஞ்சிற்குடி கொண்ட நீல மேனியும்" எழுத்தாணி (சிருஷ்டி), மோதகம் (காத்தல்), அங்குசம் (அழித்தல்), பாசம் (மறைத்தல்), அமுதகலசம் (அருளல்) இவை அவரது ஐந்து கரங்கள். யோகம் சொல்கிறது – 36 கருவிகளுடன் இன்பங்கள் அனுபவிக்கப் படுகின்றன. (படைப்பு) கனவில் இதைக் காண்பது ஸ்வப்னம் (கனவு), கனவும் நினைவுமென நிழலெனத் தோன்றி மறைவது (சம்ஹாரம்) உயிர்வாயுவைக் கட்டுக்குள் நிறுத்துவது துரியம், ஒரு கருவியும் இல்லாமல் அறிவின்மை நீங்கி அருளில் அமிழ்வது ஆனந்தம். உடலின் செயல்பாடுகள், மனம் மற்றும் மூளையின் செயல்பாடுகள், மூச்சுப் பைகளைத் தூய காற்றால் நிரப்பி நிறுத்துவது என்பவை அறிவியலும் காட்டும் உண்மைகள்.

## நான்ற வாயும் நாலிரு புயமும்

யானைக்கு மட்டும்தான் வாயை மூடிக்கொண்டு தும்பிக்கை இருக்கிறது; மனிதர்களுக்கு உதடுகள் வெளிப்புறத்தில் அமைந்து வாயை மூட உதவுகிறது. கீழ் நோக்கித் தொங்கும் வாயால் மௌனமே பெரும் பேறு எனக் காட்டுகிறது. அறிவியல் இதன் அதிசயத்தை இன்றுவரை உணரவில்லை. மௌனம் சொல்லும்

வேதமென யோகம் இதை வகைப்படுத்துகிறது. "Pituitary Body" மூளையில் அமைந்துள்ளதை, அதன் கட்டுப்பாட்டுத் திறத்தை ஔவை மும்மதச் சுவடாகச் சொல்கிறார். விழைவு, ஆற்றல், செயல் இதற்கு "Pituitary Body" யின் தயவு தேவை என அறிவியலும் சொல்கிறது.

மனிதர்கள் தங்கள் காதுகளைத் தன்னிச்சையாக அசைக்க முடியுமா, யானைகளுக்கும், மாடுகளுக்கும் மட்டுமே முடியும். அதிலும் மாடுகள் காதுகளை எப்போதும் அசைத்துக் கொண்டே இருக்காது. முறம் போன்ற காதுகள், கொள்வன கொண்டு தள்ளுவன தள்ளுகின்றன. இது சாருபத்தை அளிப்பதாக யோக நூல் சொல்கிறது. அசையாத காதுகள் ஆயுள் முழுதும் வளர்ந்து கொண்டே இருக்கும் என்றும் பிற உறுப்புகளில் தேய்மானம்தான் நிகழ்கிறது என்றும் அறிவியல் சொல்கிறது.

**"சொற்பதம் கடந்த துரிய மெய்ஞான அற்புதம் நின்ற கற்பகக் களிறே"**

யோகம் ஐந்து நிலைகளை இவ்வாறு குறிப்பிடுகிறது. விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ் நிலை, உள் ஆழ் நிலை மற்றும் அருள் நிலை. மன நிலைகளையும், துயில் மற்றும் மூளைச் செயல்பாட்டு நிலைகளையும் அறிவியலும் இவ்வாறே அணுகுகிறது. மனதை மூச்சின் மூலம் அறியவும், அதை ஆவணப்படுத்தவும், ஆழ்ந்த உறக்கத்தை ஏற்படுத்தவும் அறிவியல் இதன் மூலமாகவே செல்கிறது. எடுத்துக்காட்டு சோதனை முயற்சிகளில் மூச்சுப் பயிற்சியும், தியான முறையும் ஒரு குழுவிற்கு பயிற்றுவிக்கப் பட்டு அதன் முடிவுகள் பதியப்பட்டன. அந்த குழுவில் இருந்தோரின் உயர் இரத்த அழுத்தம் சமநிலையை அடைந்தது. மற்றொரு குழுவில் வழக்கிலுள்ள மருந்துகள் பயன் படுத்தப்பட்டன. வியத்தகு மாற்றம் ஏதுமில்லை. மனதானது மூச்சில் நின்று நிரைந்து சித்தம் அருள் உணர்வில் ஒன்றி நிற்கும் துரியமும், மெய்யறிவும் தான் ஔவையும் சொல்வது.

அப்பர் திருத்தாண்டகத்தில்....

**"நற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி
நலஞ்சுடரே நால் வேதத்தப்பால்
நின்ற சொற்பதத்தார் சொற்பதமும்
கடந்து நின்ற சொலற்கரிய
சூழலாய் இது உன் தன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சம் தன்னுள்
நிலவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே! யானுன்னை விடுவேனல்லேன்!
கனக மாமணி நிறத்தென் கடவுளானே"**

அவ்வளவு பெரிய உருவத்திற்கு சின்னஞ்சிறு மூஞ்சூறு எப்படி வாகனமாக இருக்கிறது? இதுவும் ஒரு குறியீடே! குண்டலினிக் கனல் குறுகுறுவென்று மேலேறிப் படர்வதை இது குறிக்கிறது. யோக நெறியின் படி ஓங்கார ஐந்தெழுத்து மூலாதாரத்தில் தோன்றி, ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் (நாபி), அனாஹதம் (இதயம்), விஷூத்தி (கழுத்து), புருவ மத்தி (ஆக்ஞா) என்ற சக்கர நிலைகளிலே சுஷூம்ணா நாடி வழியே செயல்படுகிறது. இவை நம்முடைய முக்கியமான ஏழு சக்கரங்களையும் நாளமில்லாச் சுரப்பிகளையும், அதன் செயல் பாடுகளையும் சுட்டுகின்றன. இந்த ஆறு ஆதாரங்களும் (சகஸ்ராதாரம் மிக மேம்பட்ட நிலை என்பதால் கணக்கில் எடுத்துக் கொள்ளப் படுவதில்லை) வீணைத்தண்டின் அடியிலிருந்து செங்குத்தாக நட்டு வைத்த அங்குசம் போல் புருவங்களின் மத்திவரை ஆங்காங்கே இருக்கின்றன. இந்த ஆறையும் சுஷூம்ணா இணைத்துக் கொண்டிருக்கிறது. உயிர்ச் சுருளும் அதனுள் பொதிந்திருக்கும் கருச் செய்திகளும், உயிரை உயிரினங்கள் உண்டாக்குவதையும், அதன் வெளிப்படையான செயல் கருவிகளும், உள்ளே அவற்றை இயக்கும் செயல் ஊக்கிகளும், அவற்றைச் சீராக்க செலுத்தப்பட வேண்டிய உயிர்வாயு போன்றவற்றைப் பற்றியும் அறிவியல் பேசுகிறது; அதற்கும் அப்பால் ஆன்மீகம் சொல்கிறது.

**ஔவை சொல்கிறார் .....**

"இடை பிங்கலையின் எழுத்தறிவித்துக் கடையிற்சுழுமுனை கபாலமும் காட்டி, மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின் நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்தி, குண்டலி கூடிய அசபை விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து மூலாதாரத்தின் மூண்டெழு கனலை காலால் (காற்று) எழுப்பும் கருத்தறிவித்தே..."

மூன்று நாடிகள் – ஆதவன், சந்திரன், அக்னி. ஆறு சக்கரங்கள் மூன்று மண்டலங்களாகப் பிரிந்திருக்கின்றன. மூலாதாரமும், ஸ்வாதிஷ்டானமும் அக்னி மண்டலத்தில் வருகின்றன; மணிபூரகமும், அனாஹதமும் சூர்ய மண்டலத்திலும், விஷூத்தியும், ஆக்ஞாவும் சந்திர மண்டலத்திலும் வருகின்றன. மூலாதாரத்தில் உள்ள குண்டலினி, இதயத்தில் உள்ள சூரிய மண்டலத்தில் ஊடுருவிச் சென்று, அதற்கு மேல் உள்ள சந்திர மண்டலத்தை அடைந்து அங்கு இருந்து கொண்டு உடலிலுள்ள 72000 நாடிகளிலும் உயிர்ப்பைச் செலுத்தி தன்னுடைய இடமான மூலாதாரச் சக்கரத்திற்கு வந்து பாம்பு போல் சுருட்டிப் படுத்து தொங்கிக்கொண்டிருக்கிறது. Supra Renal Glands to Pituitary என்று இதைத்தான் அறிவியலும் சொல்கிறது. உயிர் மூலக் கூறு, அதில் பதியப்பட்டுள்ள செய்தி, வயிற்றில் சுரக்கும் அமிலம், உணவைப் பெற்று பல்வேறு சுரப்பிகளின் துணையோடு உடல் முழுவதும் அது அளிக்கும் ஆற்றல், சுவாசப் பைகள் விரிந்து

நிறைந்து அவை பெற்றுத்தரும் உயிர் வாயு, அதனால் மாசகற்றப்படும் குருதி, உள்ளத்தின் சமன் நிலை உயிரை ஓம்புதலும், உயிரின் சமச் சீர் உள்ளத்தை ஓம்புவதும் நடக்கிறது.

**"அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்**
**குமுத சகாயன் குணத்தையும் கூறி"**

மூலாதாரத்திலிருந்து இரண்டு விரல் அளவிற்கு மேல் நான்கு கோணம் (சதுரம்) அதன் நடுவே ஒரு முக்கோணம். நாலிதழ் தாமரை அங்குள்ளதென யோகம் சொல்கிறது. அதையே அக்னி மண்டலம் என்கிறோம். நாபிக்கு நான்கு விரல் அளவிற்கு மேல் இதயம் அமைந்துள்ள இருப்பிடத்தில் ஒரு அறு கோணம். அதனுள் எட்டு இதழ் கொண்ட தாமரை – இது சூர்ய மண்டலம். தலையின் நடுவே அமுதம் பொழியும் சந்திர மண்டலம்.

இங்கே அறிவியல் சொல்லும் ஒரு செய்தியை ஆங்கிலத்தில் பார்ப்போம்...

Suprarenal glands-Two small flattened bodies of yellowish colour, situated at the back part of abdomen behind the peritoneum and immediately above and in front of the upper end of each kidney. The right one is somewhat triangular and the left is more semi lunar. That triangular one's base is directed downwards.

**"இடைச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்**
**உடல் சக்கரத்தின் உறுப்பையும் காட்டி**
**சண்முக தூலமும் சதர்முக சூக்கமும்**
**எண்முகமாக இனிதெனக் கருளி**
**புரியட்ட காயம் புலப்பட எனக்குத்**
**தெரியெட்டு நிலையும் தெரிசனப்படுத்தி**
**கருத்தினில் கபால வாயில் காட்டி"**

ஆறு ஆதாரங்களில் நடுவிலிருந்து செயல்படும் சக்கரம்; உடற்கூறு இதை உறுதி செய்கிறது. 16 கலைகளுடன் அது இருக்கும் நிலையினையும், வெவ்வெறு உறுப்புகளின் ஒருங்கிணைந்த செயல் முறைகளையும், அவை வெளிப்பாடான செயல்களாகவும் (பேசுதல் முதலானவை) உள்ளே நடப்பவைகளாகவும் (எண்ணம்) திகழ்கின்றன.

**"சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டி, சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி...."**

ஒலியின் அதிர்வலைகளால் உண்டான அகிலம் சித்தத்தின் உள்ளே காட்சி அளிப்பதை எத்தனை நுண்மையாகச் சொல்கிறார்!

யோக நூல் மட்டுமன்றி உடல் மற்றும் உளவியல் நூலாக இதைப் பயில வேண்டும். இதனுள் பொதிந்து கிடக்கும் பொருளை அறிவது அத்தனை சுலபமல்ல. ஆனாலும், உடல் நலத்தையும், உள நலத்தையும் பேணுவதற்கு அகவல் ஒரு அருமருந்து. வாய்விட்டுப் படித்து மனத்தினில் நினைக்க ஆயிரம் தாமரை மலரும்.

**"தத்துவ நிலையைத் தந்தென்னை ஆண்ட வித்தக வினாயகா விரை கழல் சரணே!"**

சித்தர்கள் யோக நெறி உடல் மற்றும் உயிர் ஓம்புவதைப் பேணுகிறது. "உடம்பார் அழியின் உயிரார் அழிவர்" என்று சொல்கிறது. வெளித் தோன்றும் உடலையும், அக உடலையும் அவதானித்து அது சொல்லும் செய்திகள் இன்னமும் தெளிவான ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டால் அழிவின்றி ஆக்கம் கூடலாம். ■



## மகான்களுக்கு வியாதிகள்.... ஒரு வரம்... தான் !

பகவானையும், பக்தியையும் நேசிப்பவருக்கு வியாதி ஒரு ஆசீர்வாதமே!

- ஸ்ரீ நாராயண பட்டத்திரிக்கு பக்கவாதம் என்னும் வியாதியே அவரை நாராயணீயம் எழுத வைத்தது!
- வாசுதேவ கோஷீக்கு அவரின் தொழு நோயே அவருக்கு ஸ்ரீ க்ருஷ்ண சைத்ன்யரின் தரிசனத்தை பெற்றுத் தந்தது!
- ஸ்ரீ நாராயண தீர்த்தருக்கு அவரின் வயிற்று வலியே வராஹ தரிசனத்தையும், க்ருஷ்ண லீலா தரங்கிணியையும் தந்தது!
- ஸ்ரீ சனாதன கோஸ்வாமிக்கு அவரின் உடல் புண்களே அவருக்கு ஸ்ரீ சைதன்யரின் பரிபூரண ப்ரேமையைக் கொடுத்தது!
- பூஷ்ம பிதாமகருக்கு அவரின் உடலில் தைத்த அம்புகளின் வலியே அவரை சஹஸ்ர நாமத்தை சொல்ல வைத்தது!
- மாரனேரி நம்பிக்கு ராஜ பிளவை நோயே அவருக்கு ஆளவந்தாரின் அனுக்ரஹத்தையும் மோக்ஷத்தையும் சாபல்யமாக்கியது!

இப்படி பல மஹாத்மாக்களின் வாழ்வில் வியாதிகளே மிகப்பெரிய மாற்றத்தையும், பக்குவத்தையும் கொண்டவந்திருந்திருக்கிறது...

மஹாத்மாக்களும் கூட வியாதிகளால் தங்களை புனிதப் படுத்திக் கொண்டிருக்கலாம்.

வியாதிகள் உங்கள் வாழ்வை தீர்மானிப்பதில்லை !
பக்தியே உங்கள் வாழ்கை நிர்ணயிக்கிறது ! ■

# இரட்டைப்பிள்ளையார் வழிபாட்டின் சிறப்பு.....!

பிள்ளையார் மிகவும் எளிமையான கடவுள். விநாயகரே முழுமுதல் கடவுளாகக் கருதப்படுகிறார். எந்தக் காரியத்தைத் தொடங்கினாலும் பிள்ளையாரது அருள் இல்லாமல் அந்தக் காரியம் வெற்றி அடைவது இல்லை.

சிவபெருமான் கூட, பிள்ளையாரை வணங்கி விட்டுத்தான் காரியத்தை செய்யத் தொடங்குவார் என்று புராணங்கள் கூறுகின்றன.

ஒரு பிள்ளையாரை வணங்கினாலே நமக்குப் பலன் கிடைக்கிறது என்றால் இரட்டைப் பிள்ளையாரை வணங்கினால் இருமடங்கு பலன்கள் கிடைக்கும்.

**இரட்டை பிள்ளையார் உருவான கதை :**

விக்கினன் என்ற அசுரன் ஒருவன் இருந்தான். பொதுவாக, அசுரர்கள் அரக்க குணம் உடையவர்கள். அவர்கள் தான் எல்லாவற்றிலும் முதலில் இருக்க வேண்டும் என்ற எண்ணம் உடையவர்கள். ஆதலால் அவர்கள் தேவர்களையும், முனிவர்களையும் தொல்லைப்படுத்தி வந்தனர்.

அசுரர் குலத்தில் பிறந்த விக்கினன் மட்டும் மாறுபட்டவனா? அவனும் தேவர்களைத் துன்புறுத்தி வந்தான். அவன் தொல்லையைப் பொறுக்க முடியாத முனிவர்களும், தேவர்களும் விநாயகப் பெருமானிடம் சென்று அவனிடமிருந்து தங்களைக் காக்கவேண்டி சரணடைந்தனர்.

விநாயகரும் அவனை அழிக்கப் புறப்பட்டார். முதலில் விநாயகர் சிறு பிள்ளைதானே! அவரால் என்ன செய்து விடமுடியும்? என ஏளனமாக இருந்த விக்கினன் பிறகு விநாயகரிடம் மன வலிமையிலும், உடல் வலிமையிலும் தோற்றுப் போய், கடைசியில் தன்னை மன்னித்து அருள்புரியுமாறு சரணடைந்தான். விநாயகர் அவனை மன்னித்தார். அவன் விநாயகரிடம், 'நீங்கள் என் பெயரை முதலில் சூட்டிக் கொள்ள வேண்டும். அதுதான் என் ஆசை' என்று வேண்டுகோள் விடுத்தான். விக்கினன் கேட்டுக் கொண்டபடி, அன்று முதல் விநாயகர் 'விக்னேஸ்வரன்' என்று அழைக்கப்பட்டார்.

விக்கினன் தடைகளைச் செய்பவன். ஆனால் விநாயகர் வரவிருக்கும் தடைகளை நீக்குபவர். அதன்படி விநாயகரை வணங்காமல் எந்தச் செயலை யார் செய்தாலும் என்ன யாகம், பூஜை நடத்தினாலும் விக்கினன் தடையாக இருப்பான்.

விநாயகரே விக்கினனிடம், என்னை முதலில் வணங்குபவருக்கு நீ எந்தத் தடையும் செய்யக்கூடாது என்று கூறியுள்ளார்.

முருகன் சூரபத்மனை அழித்து, அவன் வேண்டுகோளின் பொருட்டு, உடலின் ஒரு பகுதியை சேவலாகவும், மற்றொரு பகுதியை மயிலாகவும் தன்னிடம் வைத்து கொண்டார். விநாயகரும் விக்கினனைத் தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டார். பக்தர்கள் விநாயகரை வழிபடும் போது எல்லாம் விக்கினனையும் வழிபட வேண்டும் என்று விநாயகர் கூறுகிறார். விநாயகரும், விக்கினனுமே இரட்டைப் பிள்ளையாராக உருவானார்கள்.

இதுவே இரட்டைப் பிள்ளையார் உருவான கதையாயிற்று. இரட்டைப் பிள்ளையார் வழிபாட்டின் பயன்கள் :

சில திருத்தலங்களில் ஒரே சன்னிதியில் இரண்டு பிள்யைார்கள் எழுந்தருளியிருப்பதைத் தரிசிக்கலாம். இந்த இரட்டைப் பிள்ளையார் பிரதிஷ்டைக்கு ஒரு ஐதீகம் உள்ளது.

விநாயகர் மட்டுமே இரட்டையாக இருப்பார். ஒருவர் விக்னராஜர். மற்றொருவர் விநாயகர். விநாயக ஷோடச நாமங்களில் விக்னராஜோ விநாயக என்று இப்பெயர்கள் உள்ளன.

விக்னராஜா தடைகளை உண்டாக்குவதில் கெட்டிக்காரர். விநாயகர் தடைகளைப் போக்குவதில் வல்லவர். இந்த இருவரின் நோக்கமும் பக்தர்களுக்கு அருள்புரிய வேண்டும் என்பதற்காக, அதாவது தடையும் நானே, அதைப் போக்குவதும் நானே என்கிறார்கள் இரட்டை பிள்ளையார்கள். இதுவே இரட்டைப் பிள்ளையார் வழிபாட்டின் தத்துவம்.

ஒரே சன்னிதியில் இரட்டைப் பிள்ளையார் அருள்புரியும் திருத்தலங்கள் தமிழகத்தில் பல இடங்களில் உள்ளன. இரட்டைப் பிள்ளையார் திருவண்ணாமலையில் மிகப் பழமையான கோவில்களில் உள்ளது. மதுரை மீனாட்சி அம்மன் கோவிலிலும் இரட்டைப் பிள்ளையாரைக் காணலாம்.

சங்கட ஹர சதுர்த்தியன்று, விரதமிருந்து இரட்டைப் பிள்ளையாரை வழிபடுவதால் லக்ஷ்மியின் அருளும் கிடைக்கும். பஞ்சமி திதியில் பஞ்சாமிர்த அபிஷேகம் செய்து வழிபட்டால் கடன் பிரச்சினை தீரும் என்பது ஐதீகம். ■

# காசியும் நகரத்தாரும்



"தமிழ்க்கடல்" தேவகோட்டை R. இராமநாதன் BA.BL.D.LITT. (USA).

காசியை நினைக்க முத்தி; காசியென்றுரைக்க முத்தி
காசியைக் காண முத்தி; காசியைச் சூழ முத்தி
காசியில் வசிக்க முத்தி; காசியைக் கேட்க முத்தி
காசியில் வசிப்போர் தம்மைக் கண்டுதாழ்ந் திடுதின் முத்தி...

என்று காசி நகரத்தின் சிறப்புகளை விவரிக்கிறது 'காசி ரகசியம்' என்னும் நூல்.

முக்தி தரும் நகரங்களில் ஏழில் காசி நகரமும் ஒன்று. ஒவ்வோர் இந்துவும் அவசியம் சென்று தரிசிக்க வேண்டும் என்று விரும்பும் தலம் காசி. இந்தியாவில் அமைந்திருக்கும் பன்னிரண்டு ஜோதிர்லிங்கத் தலங்களில் காசியும் ஒன்று. வருணை மற்றும் அசி ஆகிய நதிகள் கங்கையில் சங்கமிக்கும் இடம் என்பதால், வாரணாசி என்ற பெயரும் காசிக்கு உண்டு. சிவபெருமான் இங்கு மகிழ்ச்சிப் பெருக்குடன் அருள்புரிவதால், 'ஆனந்த பவனம்' என்றும் இந்த ஊரைக் குறிப்பிடுகிறார்கள். இந்த ஊர், 'மகா மயானம் என்றும் அழைக்கப்படுகிறது. காசியில் உயிர்விடும் அனைவருக்கும் முக்தி கிடைக்கும் என்பது பரவலான நம்பிக்கை. இந்த நகரில் ஆடு, மாடு போன்ற கால்நடைகள் உயிர்விட்டாலும் சிவபெருமான் முக்திப் பேறு அளிப்பார் என்பதும் ஐதீகம்.

**ஸ்ரீ காசியின் பெருமை :** கங்கையை மிஞ்சிய நதியும் இல்லை! காசியை மிஞ்சிய பதியும் இல்லை! என்பது ஆன்றோர் வாக்கு!. திருவாரூரில் பிறப்பதும், சிதம்பரத்தைத் தரிசிப்பதும், திருவண்ணாமலையை நினைப்பதும், காசியில் இறப்பதுவும் முக்தி தரும் என்பது சைவர்களின் பெரு நம்பிக்கை. இதனையே

'முனிப்புலி தொழுசிதம் பரங்கண் ணுற்றவர்
முழைப்புலி முழங்குமவ் வருணை யங்கிரி
நினைப்பவர் அமலவா ரூர்ப்பி றப்பவர்
நிகழ்த்துறு காசியிற் சென்றி றப்பவர்
தனிப்பெரு முத்தியை யடைவர்'

– என்று சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகம் பாடுகிறது.

காசி என்ற வடசொல், "கா" எனவும் "சி" எனவுமாகப் பிரியும். 'கா' என்பதன் பொருள் 'ஒளி' எனவும் 'சி' என்றால் 'முத்தித்திருமகள்' எனவும் பொருள்படும். "காச்யதே பிரகாசதே இதி காசி" "எது சுயமாகப் பிரகாசிக்கிறதோ அது காசி". இதனையே 'தேசொடும் பொலிந்து முத்தித்திருமகள் உறைதல் தன்னால் காசி யென்றுரைப்பர் ' என்பதாகக் காசிக்கண்டம் குறிப்பிடுகிறது. நோயுற்றுத் தளர்ந்தும், மூப்பினால் இளைத்தும் இருக்கும் போதும், ஒருவர் இன்ப வாழ்வு எய்தவல்ல இடம் ஒன்று இருக்கிறது. காசியை **'ஆனந்தக் கானகம்'** என்று குமரகுருபரர் காசிக் கலம்பகம் எனும் நூலில் வர்ணிக்கிறார்.

ஆனந்த வல்லியுட னானந்தக் கானத்தே
ஆனந்தக் கூத்தா டருட்கலை–ஆனந்தம்
கொள்ளத் திளைத்தாடும் கூடாதேல் இப்பிறவி
வெள்ளத் திளைத்தாடு வீர் (86)

காசியைக் குறித்துச் செல்லும் கால்களே கால்களாகும்!
காசியை வழுத்தும் நாவே நாவெனக் கழறலாமால்!
காசியின் கதைகள் கேட்கும் செவிகளே செவிகளாகும்!
காசியை இனிது காணும் கண்களே கண்களாமால்!

காசி காண்டம் எனும் வடமொழி நூலைத் தமிழில் மொழிபெயர்த்த அதிவீர ராம பாண்டியர் (கி.பி.1552-1564) பாடுகிறார்.இவ்வாறு பல வகையாலும் காசியின் பெருமையை நாம் உணர முடிகிறது.

**காசியும் நகரத்தாரும்! :** "செல்வன் கழல் ஏத்தும் செல்வமே செல்வம்!" என்னும் அருள் மொழியின் பொருளை உணர்ந்தவர்கள் நகரத்தார்கள்!. "இடை நடுவில் குறிக்கும் இச்செல்வம் சிவன் தந்தது என்று கொடுக்க அறிந்தவர்கள்' நகரத்தார் பெருமக்கள்!நானிலம் போற்றும் நகரத்தார் சமூகம் 'காசி முதல் இராமேஸ்வரம்' வரை இருக்கிற பல்லாலயங்களுக்குப் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து தர்மத்தைச் செய்து வருகின்ற இனமாகும். இதனாலேயே 'சாதிகள் இல்லையடி பாப்பா!' என்று பாடிய பாரதி உத்தமராம் தனவணிகர் குலத்துதித்த இளைஞர்பலர் ஊக்கம் மிக்கார்! உண்மையே தாரகம் என்று உணர்ந்திட்டார்! அன்பொன்றேஉறுதி என்பார்! வன்மையே குலதர்மம் எனக் கொண்டார்! என்று பாடுகிறார்.

**ஆயிரம் ஆண்டுகாலத் தொடர்பு :** நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் அறச் செயல்களில் உச்சம் பெற்று விளங்குவது காசியம்பதியில் தினம் தோறும் நடைபெறும் மூவேளைச் சம்போ பூஜை!

சம்போ என்பது சிவபெருமானையே குறிக்கும் சொல் ஆயினும் விஸ்வநாதருக்கான பூஜை பொருட்களை காசி நகர சத்திரலிருந்து விசுவேசர் ஆலயத்திற்குச் சுமந்து செல்லக்கூடிய வழிபாட்டுப் பொருளாகும். 'திருவருணாசலம் சிதம்பரம் காசி இருநிலம் புகழ் ராமேசுரம் கூடல் அருள் தருபழனி யங்கிரி செந்தூர் குருபரன் விளங்கு குன்றக்குடியினில் அன்னதானம் மடாலயம் செய்து இந்நிலம் புகழும் ஏழ்நகர் வணிகர்' என்று 'நகரக் குழுவ நாடகம் என்ற ஓலைச்சுவடியில் இருந்து பதிப்பிக்கப் பெற்ற பழம் நூலிலும்'

'காசியிலும்சேதுபரியந்தமு மன்னதான கனகீர்த்தியால் விளங்கி
கனதை பெறவே மடம் கோயில் பிரதிஷ்டை பூங்காவும் அக்கிரகாரமும்
வாசமுயர் கோகனக மலரொளியும் வாவியோடுவளர் செந்நெல்விளை கழனியும்
வற்றாத ஊருணிகள் சத்திரம் சாலைகளும் வரிசை பெற உண்டாக்கினோர் !
நேசமதி ஆகம புராணக் கலை ஞான முயர் நீதர் மறைவேதர் ஞானி !
ரிஷி திருப்புனவை ஆசான் தனதடி தொழுது நித்ய சிவ பூஜை புரிவோர் !
ஈச மகவான முருகேசர் இரு சரணம் மலர் எந்நாளுமே பணிகுவோர் !
ஏழு மரபுயர்நீதர் வாழும் நவமணி மார்பர் ஏழு நகர் வணிகேசரே !"

என்று 'ஏழு நகரத்தார் பேரில் பதிகம்' எனும் ஓலைச்சுவடியில் இருந்து பதிப்பிக்கப் பெற்ற பழம் நூலில் மூன்றாவது பாடலிலும்

கிபி 12ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஒட்டக்கூத்தர், பொய்யாமொழிப்புலவர் காலத்திய 'கானநாட்டுப் புலவர்' என்று அழைக்கப்படக்கூடிய 'கடிகை புலவரால்' இயற்றப்பட்ட இவ்விரு நூல்களிலும் இவ்வாறு நகரத்தார் செய்த அறம் 800 ஆண்டுகளுக்கு முன்பு காசியில் நகரத்தார் தர்மம் இடம்பெற்று இருப்பதை இப்பாடல் வரிகளால் அறிய முடிகிறது. காசிக்கும் நகரத்தாருக்குமான தொடர்பு 1000 ஆண்டு காலத்துக்கும் முந்தியது என்பதை இவ்விலக்கியங்களால் உணர முடிகிறது.1750-ல்

தோன்றி 1823 வரை வாழ்ந்த பாடுவார் முத்தப்பர் என்னும் கவிஞரால் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் பாடப்பெற்ற 'நகர வாழ்த்து' என்னும் நூலிலும் நகரத்தாரை 'காசியிலும் சேதுவிலும் கனகத் தருமமிட்டு வாசமுள்ள ஈசர்பதம் மனம்பதித்து வாழும்அந்நாள் என்று குறிப்பிட்டு இருப்பதைப் பார்க்கும் பொழுது நகரத்தார் சமூகத்தினர் பன்னூறு ஆண்டுகளாக காசி விஸ்வநாதரைத் தொழுதும் அங்கேயே அறமியற்றியும் வந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. 'கங்கைக்கு மிஞ்சிய நதியும் இல்லை! காசிக்கு மிஞ்சிய பதியும் இல்லை!' என்பதையும், புகழ்மிக்க ஏழு முக்தித் தலங்களில் முதன்மையானது காசி என்பதையும் முழுதும் உணர்ந்தவர்கள் நகரத்தார்கள்.

**ஞானத்தைத் தேடிய நகரத்தார்கள் :** 'ஞானத்தால் பிரகாசிக்கும் நகரமே காசி' என்பதாகும். பொருளைத் தேடி ஓடிய நகரத்தார்கள் உண்மையான பொருள் என்பது ஞானப்பொருளே என்பது உணர்ந்து காசியை நோக்கி அறம் செய்ய வந்தார்கள். காசிக்குச் செல்வோர் தங்குவதற்குச் சத்திரமும், அங்கு அன்னதானமும், பசு மடமும் அங்கிருந்து விசுவேசருக்கு அபிடேகத்திற்குப் பாலும், விஸ்வநாதருக்கு மலர் மாலைகள் தொடுப்பதற்காக நந்தவனமும் பல்லாண்டுகளுக்கு முன்பு ஏற்படுத்தியவர்கள் நகரத்தார்கள். 1853-ஆம் ஆண்டில் தான் ஆங்கிலேய அரசு மும்பைக்கும் தானேவிற்கும் இடையில் முதன் முதலில் இருப்புப்பாதை ஏற்படுத்தியது. ஆனால் அதற்கு முன்பே 1813 இல் காசி விஸ்வநாதருக்கான அபிஷேகத்தைத் துவக்கினார்கள் நகரத்தார்கள்.மாட்டு வண்டியிலும், யாத்திரையாகவும் நகரத்தார்கள் காசிக்குச் சென்றுள்ளார்கள்.நாகப்பட்டினத்திலும் தொண்டியிலும் இருந்து கப்பல் வழியாக கல்கத்தாவிற்கு வந்தவர்கள் கல்கத்தாவில் இருந்து காசிக்குச் சென்றுள்ளார்கள்.கிபி 1813 இல் கல்கத்தாவில் வணிகம் செய்து கொண்டிருந்த நகரத்தார் பெருமக்களால் துவங்கப்பட்ட தருமமே இதுவாகும். தலயாத்திரை செய்வதில் நகரத்தார் ஆடவர்க்கும், பெண்டிர்க்கும் உள்ள ஈடுபாடு உலகறிந்தது. ராமேஸ்வரத்திலிருந்து மிருத்திகை எடுத்து கோடி தீர்த்தம் கொண்டு வந்து கால்நடையாக காசிக்குச் சென்று விஸ்வநாதரரை வழிபடும் பழக்கம் நகரத்தாரிடம் காலங்காலமாக இருந்து வந்துள்ளது. 1800 களில் போக்குவரத்து வசதிகள் மிக குறைவாக இருந்த காலகட்டத்தில் நடந்து தனியாக யாத்திரை செய்தவர்கள் பல இன்னல்களுக்கு ஆளாகினார்கள்.

இதன் காரணத்தால் பலர் ஒன்று சேர்ந்து காசி யாத்திரை மேற்கொள்வதும், அதே நேரத்தில் அனைவரும் மகா சிவராத்திரி அன்று காசியில் இருக்குமாறு தன் பயணத்தை அமைத்துக் கொள்வது நகரத்தார் பெருமக்களுக்கு வழக்கமாக இருந்து வந்துள்ளது. 1801 முதல் கல்கத்தாவில் அரிசி முதலிய பொருளை ஏற்றுமதி செய்து வியாபாரம் செய்து வந்த நகரத்தார்கள் செல்வத்தில் திளைத்தார்கள். கப்பல் கம்பெனிகள் ஆண்டு இறுதியில் தரும் கப்பல் கேள்வுத் தொகையில் (Rebate Amount) ஒரு பகுதியை தர்மநிதிக்குக் கொடுத்தார்கள். இவ்வாறு கிடைத்த ரிபேட் தொகையைத் தான் பொது நிதியாக வைத்திருந்து தருமத்திற்கு செலவிடுவதாக முடிவு செய்து கல்கத்தா நகரத்தார்கள் ஒவ்வொரு ஆண்டும் கிடைத்த ரூ25000 வரையிலான இந்த ரிபேட் தொகையைத் தர்ம நிதிக்காக ஒதுக்கி வைத்தார்கள்.அதையே இத்தர்மத்திற்குச் செலவிட்டார்கள்.

முத்தி தரும் தலங்களில் முதன்மையானதாகத் திகழும் காசியில் தர்மம் செய்வதாக முடிவெடுத்து குமரகுருபரர் உருவாக்கிய குமாரசாமி மடத்தில் முதலில் தங்கி, அதன் பிறகு சில இடங்களில் தற்காலிகமாகத் தங்கி, கல்கத்தா வாழ் தமிழக நகரத்தார்கள் சிவராத்திரி போன்ற திருவிழாக்களில் விஸ்வேஸ்வரருக்கு அபிஷேகப் பொருள் கொடுத்து பூசை நடத்தி,ஏழைகளுக்கு அமுது படைத்து காசியில் விஸ்வநாதரை வழிபட்டு வந்தார்கள்.மேற்கண்ட முறையில் 50 ஆண்டுகள் அபிஷேகம்

அன்னதானங்களில் நடைபெற்று வந்த பின்னர்கி.பி.1858-ல் காசியில் 'குதௌலியா' பகுதியில் உள்ள இந்துஸ்தானி கோஷாயி சாதுக்கள் மடத்தை விலைக்கு வாங்கி 1863-ஆம் வருஷம் ஆவணி மாதம் 10ஆம் தேதியில் அந்த மடத்தின் சில பகுதிகளைப் புதுப்பித்து முதன்முதலாக நாம் இப்பொழுது பார்க்கும் காசி நாட்டுக்கோட்டை நகர சத்திரத்திற்கு 'அன்னதான மடம்' எனப் பெயரிட்டு கிரகப்பிரவேசம் செய்தார்கள்.

இச்சத்திரம், கோட்டையூர் வெ. சி. அ. சின்ன அழகப்பையா, கானாடுகாத்தான் சா. ராம. மு. முத்தையா ஐயா, அமராவதிபுதூர் வயி. லெட்சுமண ஐயா ஆகிய மூவரும், கால் நடையாக இராமேச்சுரம் சென்று மிருத்திகை எடுத்து வந்து காசிக்குப் பாதயாத்திரையாகச் சென்றிருந்த காலத்தில், அவர்கள் முயற்சியால் நிறுவப் பெற்றதாக 1953-ல் 'நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு' என்னும் நூலில் மகிபாலன்பட்டி பண்டிதமணி. மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் குறிப்பிடுகிறார்கள். இதுவே நாட்டுக்கோட்டை நகரச் சத்திரக் கட்டடம் துவங்கப்பெற்ற நாளாகும்.

இச்சத்திரத்திற்கு 1863 லிருந்து 2025 ஆண்டுடன் 162 ஆண்டுகள் நிறைவடைந்து இருக்கிறது. 1863இல் கல்கத்தா நகரத்தார்கள் ஸ்ரீ காசி நகரச் சத்திரத்தை, அன்னதான மடம் எனும் பெயரில் ருத்ரோத்காரி வருடம் ஆவணி மாதம் 1863ல் ஆரம்பித்தார்கள். பிராமணர்களுக்கும், சாதுக்களுக்கும், ஏழைகளுக்கும் அன்னதானம் செய்யவும், ஸ்ரீ காசி விஸ்வநாதருக்கும், அன்னபூரணிக்கும், விசாலாட்சிக்கும் அபிஷேகம் செய்யவும் ஆரம்பிக்கப்பெற்றது. ஸ்ரீ காசிச் சத்திரத்திற்குத் தேவையான பணம் கல்கத்தா நகரத்தார்கள் கொடுத்த மகமையால் கிடைத்தது. கல்கத்தாவில் செய்யும் தொழில் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அனைவரும் "கல்கத்தா நகரத்தார்கள்" என்று அழைக்கப்பட்டார்கள். மேற்படியார்கள் கொடுத்த மகமை, "காசி நகர மகமை" என்றும் மேற்படி தொகை காசிச் சத்திரத்துப் பிரநிதியிடம் (விசாரணைதாரர்) கொடுக்கப்பெற்றது. இது தவிர கல்கத்தா விடுதியில் தங்கிய நகரத்தார்கள் மற்றும் காசி யாத்திரீகர்களிடம், விடுதி மகமை வசூலிக்கப்பெற்றது. அவர்கள் கொடுத்த தர்மக்கட்டளைகளும், கல்கத்தா நகரத்தார்களால் நியமிக்கப்பெற்ற காசி நகரச் சத்திர விசாரணைதாரர்களால் ஏற்றுக்கொள்ளப்பெற்றது. முன்பெல்லாம் ஒவ்வொரு ஆண்டும் சித்திரை 3ஆம் தேதி நியமிக்கப்பெறுவார்கள். விசாரணைதாரர் கணக்குகளை வைத்திருப்பார்கள். மேலும் காசி நகரச் சத்திர நிர்வாகம் செய்யும் முழு அதிகாரமும் அவர்கள் பெயரிலேயே நடைபெறும். தமிழ் ஆண்டிறுதியில் கணக்கை நிறைவு செய்து சித்திரை 3ஆம் தேதி கூட்டத்தில் ஐந்துகை சமர்ப்பிப்பார்கள். நகரத்தார்களால் நியமிக்கப்பெற்ற அடுத்த விசாரணைதாரரிடம் ஒப்புவிப்பார்கள். மகமை வரவு இருப்பில் பாதித்தொகை காசிச் சத்திரச் செலவுகளுக்கும் பாதித்தொகைகயை கல்கத்தா நகரத்தார் பர்ம்களில் (firm) வட்டிக்குக்கொடுத்து வாங்கியுள்ளார்கள். கல்கத்தாவில் கடைகள் குறைந்தவுடன் ரெங்கூன் மற்றும் இதர ஊர் நகரத்தார் பர்ம்களிலும் கொடுத்து வாங்கியுள்ளார்கள்.

1863ல் காசி குதௌலியா அருகில் கொஜாயி ஹரிதயான் கிரி, 1866இல் கிருஷ்ணய்ய சாஸ்திரி,1874இல் கிண்ணுகிரி கொஜாயி,1894இல் விஸ்வநாத கோசுவாமி,1877இல் பாபுமியா,1884இல் பக்திகினாத் கோசுவாமி,1894இல் விஸ்வநாத கோசுவாமி,துர்கா பிரசாத்,1895இல் மன்னுப்பட்டு பிராமண ஆகியவர்களிடம் இருந்து சிறுகச் சிறுக இடங்களும், கட்டடங்களும் வாங்கிஅதனைத் தக்கவாறு புதுப்பித்துப் பெரியதொரு மாளிகையாக்கினர். இது தவிர பசுமடமும், நந்தவனமும் கல்கத்தா நகரத்தார்களால் 1924இல் காசிநாத பட்டாச்சாரி என்ற வங்காளியிடம் வாங்கிய வீடும் காசி சத்திர உடைமையாக்கப்பட்டது.

அது முதல் விசுவேசருக்கு அபிஷேகப் பூஜைப் பொருட்களும் விசாலாட்சிக்கு அபிஷேக பூஜை பொருட்களும் மற்றும் அன்னபூரணி, துண்டி விநாயகர் போன்றவர்களுக்கான அபிஷேக பொருட்களும் காலபைரவர் மூர்த்திகளுக்கும் நாள்தோறும் பூசைகள் சிறப்பாக நகரத்தார்களால் செய்து வரப்பெற்றிருக்கிறது. அந்தணருக்கும் துறவிகளுக்கும் ஏழை எளியவருக்கும் உணவு கிடைக்க அன்னதானக் கட்டளைகள் ஏற்படுத்தப்பெற்றிருக்கிறது.

ஒருகாலத்தில் மாணவர்கள், கல்வி பயில்வர்கள் தங்குவதற்கும் ஏற்பாடு செய்யப்பெற்று இருக்கிறது. காசி யாத்திரையில் முண்டம்,தண்டம், பிண்டம் என்ற முறையில் செய்ய வேண்டும். பிரயாகை என்ற திரிவேணி சங்கமத்தில் முண்டம் செய்துவிட்டு,காசி விஸ்வநாதருக்குத் தண்டனிட்டு பின்னர் கயாவுக்குச் சென்று பித்ருக்களுக்குப் பிண்டம் செய்ய வேண்டும் என்பது தொன்மை மரபு. 1924 வரை கல்கத்தா நகரத்தார்கள் மேற்பார்வையில் இருந்து வந்த சத்திரம் பிறகு 1925 முதல் ரங்கூன் நகரத்தார்களின் நிர்வாகத்திற்குள் வந்தது. 10/9/1934 இல் பவ ஆண்டு ஆவணி மாதம் 25ஆம் தேதி சனிக்கிழமை நிறைநாளான அமாவாசை திதி மகம் நட்சத்திர நன்னாளில் 'ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகர சத்திர மேனேஜிங் சொசைட்டி'என்கிற அமைப்பு ரங்கூனில் வணிகம் செய்துகொண்டிருந்த தமிழக நகரத்தார்களால் இரங்கூனிலேயே 23/1934 என்ற எண்ணாக ஐம்பது ரூபாய் பதிவுக் கட்டணம் செலுத்தி பர்மாவில் உள்ள Joint Stock Companies – ன் துணைப்பதிவாளரால் 10.09.1934இல் கையொப்பமிட்டுப் பதிவு செய்யப்பட்டது.

05.5.1936ல் செட்டிநாட்டரசர் திரு. M.A. முத்தையா செட்டியார் அவர்களும், திரு. M.C.T.M. சிதம்பரம் செட்டியார் அவர்களும், ஸ்ரீ காசி பிரயாகை மற்றும் வடநாட்டில் உள்ள அனைத்து நகரங்களிலுள்ள சத்திரங்களும் கல்கத்தா நகரத்தார்களால் நிர்வாகம் செய்யப்பெற்றது. கல்கத்தாவில் தொழில் நசிந்த பின்பு அனைத்துச் சத்திரங்களும், சொத்துகளும் ரங்கூன் நகரத்தார்களால் 1926ல் Sri Kasi Nattukkottai Nagara Chatram Managing Society என்ற பெயருக்கு மாற்றப்பெற்று, நிர்வாகம் செய்யப்பெற்று வருகிறது என்று கடிதம் எழுதி உள்ளனர்.

1941 வரை சில சமயம் நாள்தோறும் 300 பேருக்கு அன்னதானம் அளிக்கப்பெற்றதும், விஸ்வநாதருக்கு அபிஷேகப் பால் அனுப்பப்பெற்றதும், விசாலாட்சி கோயில் திருவிழாக்களில் விசாலாட்சியின் ஐம்பொன்னால் ஆன உற்சவத் திருமேனியைத் காசிநகரின் தெருக்களில் நகரத்தார்கள் ஊர்வலமாக எடுத்துச்சென்றதும், அதற்காக அரசாங்கத்தார்கள் சிறப்பான முறையில் ஏற்பாடுகளைச் செய்திருந்தும் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படக் கூடியது.

1942 உலகப்போருக்கு பின் இரங்கூனிலிருந்து பணம் வருவது தடைப்பட்டதால் ஏற்பட்ட நிர்வாகச் சிக்கல்களை எதிர்கொள்வதற்காக அன்னதானத்தின் அளவுகள் சற்றே சுருக்கப்பெற்றது. அதன் விளைவாக சுபானு ஆண்டு ஆவணி 24ல் 9/9/1943 காரைக்குடியில் அறுபத்தி மூவர் குருபூசை மடத்தில் நகரத்தார்கள் ஒன்று கூடி காசி நகரச் சத்திரத்திற்கே தற்காலிக நிர்வாகக் குழுவை ஏற்படுத்தினார்கள்.

தேவகோட்டை அள.சுப.பழ. சுப்பிரமணியன் செட்டியார் (தலைவர்), காரைக்குடி மெ.செ..சிதம்பரம் செட்டியார் (செயளாளர்), கானாடுகாத்தான் மு.சித.மு.சிதம்பரம் செட்டியார் (பொருளாளர்) ஆகியோர் தேர்வு செய்யப்பெற்று தொடர்ந்து நமது சத்திரம் பணியாற்றிட உதவியாக இருந்தனர். நன்கொடை வசூலிக்க ஒரு குழு அமைக்கப்பெற்றது. அதன்பிறகு 29.12.1946இல் மீண்டும் பர்மா

நகரத்தார்கள் நிர்வாகத்திற்குச் சென்று 15.09.1964 வரை நடந்திருக்கிறது. அப்பால் இன்ட்ரிம் கமிட்டி மூலம் நாட்டரசன் கோட்டையைத் தலைமையிடமாகக் கொண்டு தர்மம் நடந்து வந்துள்ளது. 14.09.1963ல் காசி நகரச்சத்திரம் கட்டப்பெற்று நூற்றாண்டு விழா நடைபெற்றது. சொசைட்டி இந்தியாவுக்கு மாற்றி ரிஜிஸ்டர் செய்து நடத்தி தீர்மானித்து 08.03.1965ல் ரிஜிஸ்டர் செய்து நடத்தி வருகிறோம்.

10.03.1965ல் இந்தியாவில் மத்தியப்பிரதேச மாநிலத்தின் லக்னோவில் சொசைட்டி சட்டப்படி ரிஜிஸ்டர் செய்து கொடுத்து நம்பர் 1177/1964-65ஆம் எண்ணாக 29.3.1965ல் ரிஜிஸ்டர் செய்து இருக்கிறது. மறுபடியும் 76- ஊர் நகரத்தார்கள் பொதுவில் நிர்வாகம் செய்வதென தீர்மானிக்கப் பெற்று காரைக்குடியைத் தலைமையிடமாகக் கொண்ட 'ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர மேலாண்மைக் கழகம்' எனும் பெயரிலான நிர்வாகத்தின் கீழ் இன்றுவரை சிறப்புற நடைபெற்று வருகிறது.

காசி விஸ்வேஸ்வரருக்கு நாளும் நறுமலர்கள் அனுப்ப நந்தவனம் ஒன்றை நகரத்தார்கள் 1894 ஆம் ஆண்டில் சிக்ரா எனும் பகுதியில் விலைக்கு வாங்கினார்கள். அதன் தொடர்ச்சியாக மீண்டும் 1902, 1905-லும் புதிதாக இடங்கள் வாங்கி நந்தவனம் விரிவாக்கம் செய்யப்பட்டது. நந்தவன வேலைக்கென தனியே ஆட்கள் நியமிக்கப்பெற்று குறித்த நேரங்களில் மலர்கள் விஸ்வநாதர் கோயிலுக்கு அனுப்பப்பெற்றது. இரங்கூன் நாலறை நகரத்தார்கள் அந்நகரில் நடத்தி வந்த நந்தவனத்துக்குரிய நிதியை 1955ல் காசி சத்திரத்திற்குக் கொடுத்து உதவினர். 15-1-1897-ல் விஸ்வநாதருக்கு அபிடேகம் செய்வதற்காகப் பசுமடம் ஒன்று ஏற்படுத்தப் பெற்று பசுமாடுகள் வளர்க்கப் பெற்று பால் குறித்த நேரத்திற்கு விஸ்வநாதருக்குச் செலுத்தப்பெற்றது.

1954-55, 1955-56ல் அது சமயம் சத்திரத்தில் நேர்மையான மேலாளர், கணக்கப்பிள்ளைகள் இருந்தனர். அப்போது நகரத்தார் மற்றும் பல ஆட்களுடன் சத்திரம் வந்தவர்களை நன்கு உபசரித்து, அவர்கட்கு வேண்டிய உதவிகள் செய்து மிக சிறப்பான முறையில் நடந்தது. காசி நகரத்தார் சத்திரத்திற்கு அது சமயம் தலைமை அலுவலகம் இரங்கூனில் இருந்தது. கல்கத்தாவிலிருந்து வரும் கணிசமான வாடகை வருமானங்களை காசிச் சத்திரத்தில் வரவு வைத்து செலவுகள் செய்து கணக்கை ரெங்கூனுக்கு அனுப்பினார்கள். அப்போது கல்கத்தாவிலிருந்து மிக அதிகமான வாடகை வரவுகள் வரும்.

இந்த நூறு ஆண்டுகளில் பல்வேறு நபர்கள் சிறப்பு விருந்தினர்கள் காசிநகரச்சத்திரத்தில் தங்கிச் சென்றுள்ளார்கள். தமிழக முதலமைச்சர் காமராஜர் அவர்களும், இந்தியக் குடியரசின் தலைவர் டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களும் இந்த சத்திரத்தில் தங்கி விசுவேசர் அருள்பெற்ற குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்கள்.

நகரச் சத்திரத்தில் உள்ள மாடியில் சுப்பிரமணியர் படத்தில் முன்பாக சாம்பிராணிக் கலசத்தை வைத்துச் சாம்பிராணித் தூபம் போட்டு, பிறகு கீழே பாதாள ஈஸ்வரர் கோவிலில் இருந்து தசாங்கம் போட்டு நகரேஸ்வரர் கோயிலை வலம் வந்து சம்போ புறப்படும். இக்காட்சியைக் கண்டார் அனைவரும் மெய்சிலிர்க்க எழுந்து நின்று வணங்குவர்.

மங்கள ஆரத்தி, உச்சிக்காலம், அர்த்தஜாமம் ஆகிய பூஜைகளுக்கு கொண்டு செல்லும் பூசைப்பொருட்கள்

1. வாசனைத் தைலம்
2. தேன்
3. பன்னீர்
4. ஊதுபத்தி

5. சூடம்
6. அத்தர்
7. தேசிச் சீனி (பழுப்புச் சக்கரை)
8. திருநீறு
9. சந்தனம்
10. முக்களை வில்வம் -16
11. அருகம்புல்
12. பூமாலை
13. பசும்பால் ஆறேகால் படி
14. தயிர்
15. பஞ்சாமிர்தம்
16. பிரயாகை கங்கை
17. பூணூல்
18. அரிசி

அர்த்த ஜாம பூஜைக்கு மட்டும் மேற்கண்ட பொருட்கள் உடன்

19. முக்களை வில்வம் -108
20. சவ்வாது
21. பட்டு
22. நாகபரணம்
23. பால் அண்டா
24. பூக்கூடை
25. வெண் தாமரை
26. சோடசஉபசார ஆரத்திப் பொருட்கள்

அதேபோல் அன்னபூரணி கோயிலுக்கும் அபிஷேகப் பொருட்களுடன் குங்குமமும் ஒரு டலியாவில் வைத்துத் தினந்தோறும் கொண்டு செல்லப்படுகிறது.

விசுவநாதர் கோவிலில் நடைபெறும் பூசைகள்

1. மங்கள ஆரத்தி (திருவனந்தல்), 2. போக ஆரத்தி (உச்சிக்காலம்), 3. சப்தரிஷிபூஜை (சாயரட்சை), 4. சிங்கார ஆரத்தி (அர்த்தஜாமம்), 5. சயன ஆரத்தி (பாடலுடன் தீபவழிபாடு)

மேற்கண்ட முதல் நான்கு பெரிய பூசைகளில் மங்கள ஆரத்தி,போக ஆரத்தி,சிங்கார ஆரத்தி ஆகிய மூன்றும் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தினாரால் தொடர்ந்து செய்யப்பெற்று வருகிறது.ஷெனாய் வாத்தியமே மங்கள வாத்தியமாகத் திகழும் வட இந்தியாவில் தமிழர்களின் நாதஸ்வரத்தின் புகழை நிலைநாட்டியிருப்பவர்கள் நகரத்தார் ஆவார்கள். உச்சி காலம் மற்றும் அர்த்தஜாமம் ஆகிய இரண்டு பூசைகளிலும் நகரத்தார்கள் அபிஷேகம் செய்யும் மூன்று பூசைகளில் இரண்டு வேளைகளில் நகரச் சத்திரத்து மேளகாரர்கள் மேள, நாதஸ்வர இசையை விஸ்வநாதருக்குச் சமர்ப்பணம் செய்து வருகிறார்கள்.

விஸ்வேஸ்வரருக்கு நாகாபரணம்,சொர்ண கிரீடம் பள்ளியறைக்கு வெள்ளிக்கட்டில் மற்றும் அவருடைய ஆலயத்திற்கானவெள்ளித் தகடுகள் வேயப்பெற்ற கதவுகள் மற்றும் விசேஷங்களுக்குத் தீப தூபாராதனைகளுக்கான பொருட்கள் எனப்பல்வேறு பொருட்களை வெள்ளியிலான உலோகத்தில் நகரத்தார்களே செய்து கொடுத்துள்ளார்கள். விசுவேஸ்வரர் கோயில் மடைப்பள்ளியும் விஸ்வநாதர் அருளால் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் பல்லாண்டுகளுக்கு முன்பு கட்டிக் கொடுக்கப்பெற்றுள்ளது. நிவேதனப் பொருட்களை வைப்பதற்குரிய நாற்காலிகள், கருவறையைச் சுற்றியுள்ள நான்கு திக்குகளிலும் போடப்படும் திரைகள் ஆகியவைகளும் நகரத்தார்கள் உபயமாக அளித்துள்ளனர்.

**குளிர்காலச் சட்டை அணிவிப்பு :** ஐப்பசி மாதம் வசந்த பஞ்சமியிலிருந்து மாசி மாதம் சிவன் இராத்திரி வரை, குளிர்காலமாக இருப்பதால் விசுவேசருக்குக் குளிர்காலச் சட்டை (மக்மல் பட்டு அணிவிக்க நகரத்தார்கள் கட்டளை ஏற்படுத்தி இன்றளவும் நடைபெற்று வருகிறது.

**காசி விசாலாட்சி அம்மன் கோயில் :** சக்திபீடங்கள் 51-ல் சிறப்புடையது.ஆதிசங்கரர் வழிபாடாற்றியது. இக்கோவில் நகரத்தார்களால் 1893ஆம் ஆண்டு கட்டப்பெற்று முதல்குடமுழுக்கு நிகழ்த்தப்பெற்று நகரத்தார்களின் நிர்வாகத்தில் இருந்து வருகிறது.

மீண்டும் இந்த ஆலயம் 07-02- 1908 பிளவ ஆண்டு தை மாதம் 25ஆம் தேதி இரண்டாவது முறை கும்பாபிஷேகம் செய்து வைக்கப்பெற்றது.அதன்பிறகு 53ஆண்டுகள் கழித்து விரோதிகிருது வருடம் ஐப்பசி மாதம்15-ஆம் நாள் 01-11-1971 ஆம்தேதி திங்கட்கிழமை அன்று மூன்றாவது முறையாகக் கும்பாபிஷேகம் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் செய்து வைக்கப்பெற்றது.இக்குடமுழுக்கில் தான் புதிய மூலவர் விசாலாட்சி சிலை தேவகோட்டை இளையாத்தன்குடி பெருமருதூருடையாரான தி.வகையினரில் ப.ராம.செ. குடும்பத்தினரின் உபயமாக பொள்ளாச்சியில் இருந்து செய்து வரப்பெற்று பிரதிட்டை செய்யப்பெற்றது. குரோதன ஆண்டு கார்த்திகைத் திங்கள் 7-ஆம்நாள் 22-11-1985 அன்று நான்காவது குடமுழுக்கு விழாவும், பிரமாதி வருடம் ஐப்பசி மாதம் 24-ஆம்தேதி 10-11-1999 புதன்கிழமை அன்று ஐந்தாவது குடமுழுக்கு விழாவும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் முழுமையான திருப்பணிகள் செய்து திருக்குட நன்னீராட்டுவிழாக்கள் நடைபெற்றுள்ளது. நிறைவாக விஜய ஆண்டு சித்திரை மாதம் 4 ஆம்நாள் 17-04-2013 அன்று ஆறாவது குடமுழுக்கு விழாவும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் செய்து வைக்கப்பெற்றது. விசாலாட்சிக்குத் தங்கவிக்ரகமும் வெள்ளித் திருவாசியும் செய்யப்பட்டுள்ளன. தங்க விசாலாட்சி அம்மன் அதிகமான ஆற்றல் பெற்றது. தங்க விசாலாட்சியின் சிலையானது வெள்ளிச் சிலையில் தங்கக் கவசம் (சொர்ணக்கவசம்) பொருத்தப்பெற்றுள்ளது. பேரழகு வாய்ந்த இந்தச் சிலையினை உபயமாகச் செய்து வழங்கியவர் கல்வாசல் நாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் திருவேட்பூருடையான் கானாடுகாத்தான் கு.யெ.மா. சிதம்பரம் செட்டியார் ஆவார்கள். 31-10-1913 ஆம் தேதி பிரமாதீச வருஷம் ஐப்பசி மாதம் 15ம் தேதி வெள்ளிக்கிழமை நாட்டுக்கோட்டை நகரத்தாரின் நட்சத்திரமாகிய அனுஷ நட்சத்திரத்திரத்தன்று இவ்விக்கிரகம் இங்கு முதன்முதலாக சத்திரத்திற்கு உபயமாக வழங்கப்பட்டது. அழகிய முகத்தோடும், அருள் பொலியும் கரத்தோடும் நகரத்தார் ஆச்சிமார்கள் அணியும் கழுத்தீரு,வைரத்தாலி உட்பட அத்தனை நகைகளும் சொர்ண விசாலாட்சி சிலைக்கு அணிவிக்கப் பெறுகிறது.

அம்பாள் உற்சவ விக்ரகத்தில் முன்பக்கம் சொர்ணத்தகடு போட்டும் விக்கிரகத்தின் கிரீடத்தில் புஷ்பராகக்கல்-1ம், நெற்றியில் சிகப்பு -1ம், காதுகளில் மாணிக்கக்கல் தோடு ஜோடி -1ம், மூக்கில் புஷ்பராக மூக்குத்தியும் அதன் கீழ் புஷ்பராகம் 1-ம், சிகப்பு-1ம் பதித்த, புல்லாக்கு -1ம், கைகளில் பச்சைக்கல் வெள்ளைக்கல் மோதிரம்-2ம், வெள்ளி பாதரசம் ஜோடி-1ம்,மேற்படி அம்பிகை இருக்கும் செப்புக் கம்பியுடன் உள்ள வெள்ளி பீடத்துடன் உள்ள தங்க விசாலாட்சி அம்பாள் சிலை 8.600 கிலோகிராம் எடையுடனும்,வெள்ளித் திருவாசியில் பச்சைக்கல் மணிகள்-31,சிகப்புமணிகள்-6ம் கட்டியது எடை 2.670கிலோ அளவிலும் செய்யப்பெற்று திருவாசியிலும்,அம்பிகையின் பீடத்திலும் ஆக இரு இடங்களில் இச்சிலையையும்,திருவாசியையும் செய்து வைத்த கானாடுகாத்தான் கு.யெ.மா.சிதம்பரம் செட்டியாரின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

காசி நகரச் சத்திர நிர்வாகிகளால் அன்று தங்க விசாலாட்சியின் வெள்ளித் திருவாசிக்கு ஸ்ரீகாசி நகரச் சத்திரத்திலிருந்து பொட்டுப்பொடியாக இருந்த சிறு சிறு நகைகள் 25ஐ தங்க எடை 105.920 கிராமை எடுத்து வந்து மதுரையில் ஜெ.எம். ஜுவல்லரி M. ஜெயங்கொண்டான் செட்டியார் மூலம் மூஸ் போட்டுக் கிடைத்த சொக்கத்தங்கம் கிராம் 80.330 ஐ திருவாச்சி முன்பக்கம் தங்க ரேக் போட்டு ஒட்டி இருக்கிறது. தங்க முலாம் 80.330 கிராமுக்கு பூசப்பெற்று 11.07.2006 அன்று நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில் செயற்குழு உறுப்பினர்களிடம் காண்பித்து

19.07.2006 அன்று வாரணாசி பெட்டக அறையில் வைக்கப்பட்டுள்ளது. தற்போது திருவாசியின் மொத்த எடை 2.750கி 330 மிகி ஆகும். பச்சை முத்து ஒன்றும்,சிகப்பு-2ம் உள்ள சொர்ணக்கிளி-ஒன்று 99 கிராம் எடையிலும் அழகுறச் செய்யப்பெற்றுள்ளன.

மேற்படி அம்பாள் சிலைக்கு கோட்டையூர் க.வீ.அழ.ராம.நா.பார்வதி நாச்சியப்பன் ஆச்சி அவர்கள் முதலில் பொட்டுடன் கூடிய தங்கச்சங்கிலியில் கோர்த்த வைரத் தாலியும்,பிறகு அச்சங்கிலியிலேயே வைரம் பதித்த சங்கிலி 3.94 காரட் அளவிலும், 57 வைரக்கல் மற்றும் சிகப்புக்கல் -1ம் கொண்ட வைரத் தாலியின் வைர எடை 1.02 காரட் அளவிலும்,மொத்த வைர எடை 4.96 காரட்டில்,வைரத்தாலி வைரச் சங்கிலி வைரம்,தங்கம் உள்பட மொத்த எடை 49.100கி.கி அளவிலும்19-10-2009 அன்று மேற்படி உபயதாரரால் சாற்றப்பெற்றது. மேற்படி உபயதாரரால் செய்யப்பட்ட 35 உருப்படிகள் கொண்ட தங்கக் கழுத்துரு ஒன்றும்,மேற்படியார் உபயமாகத் தந்த வைரம் இரண்டு காரட் அளவுடன் வைரக்கல் 110 கொண்ட சிறியவைர நெக்லஸ் ஒன்றும்,வைர எடை 3.76 காரட் கொண்ட 140 வைரக்கற்களுடன் கூடிய வைரக்காப்பு ஜோடி ஒன்றும் 16-02-2015 அன்றும் சாற்றப்பெற்றது. பி.அளகாபுரி பெரி.பெரி.தி.திட்டாணிச் செட்டியார் -விசாலாட்சி ஆச்சி ஆகியோரால் 49.370 கிராம் எடையில் திருமாங்கல்யத்துடன் கூடிய ஒற்றைவடத் தங்கச்சங்கிலி செய்து 12-02-2018 அன்று செய்து வைக்கப்பெற்றது. தீபாவளியின் போது மிட்டாய் திருவிழாவிலும், சிவராத்திரியின் போதும் இந்த அம்பிகை நகரச் சத்திரத்தில் உள்ள நகரேஸ்வரர் ஆலயத்தில் வெள்ளிக் கேடகத்தில் தரிசனம் தருகிறாள். கண்டரமாணிக்கம் MCN. மாணிக்கம் செட்டியார் குடும்பத்தார்களால் 29-10-2008 அன்று சுமார் 23 கிலோ எடையுடன் 10 உருப்படிகளாக மேற்படி வெள்ளிக் கேடகம் காசி நகர சத்திரத்திற்கு உபயமாகச் செய்தளிக்கப்பெற்றது.

02-03-2011இல் இருந்து சொர்ணலிங்கமும் இங்கு அருள் பாலிக்கிறார்.மேற்படி சொர்ணலிங்கமானது 76 ஊர் நாட்டுக்கோட்டை நகரத்தார்களிடமிருந்து பெற்ற தங்கம், வைரம், வெள்ளி,வைடூரியம் இவைகளில் இருந்து செய்யப்பெற்ற சொர்ணலிங்கம் நாகாபரணத்துடன் நெற்றிப்பட்டை சூரிய, சந்திரப் பிறைஉடன் கூடிய கங்கை மற்றும் வில்வ இலை ஆகியவையும் ஒரு பெரிய உத்திராட்ச தங்கச் சங்கிலி மற்றும் 37 உருத்திராட்ச மணிகள் தங்கப்பூண்பிடித்துக் கோர்த்த வகையில் ஒரு உருத்திராட்ச மாலை ஒன்றும் சொர்ணலிங்கமும் சேர்த்து தங்க எடை 3.100கி.கிஅளவிலும் சொர்ண லிங்கத்திலும் நெற்றிப்பட்டையிலும் உள்ள வைர எடை 12 காரட் அளவிலும், ஆதார பீடம் 2.250 கி.கிராம் வெள்ளி எடையிலும் சொர்ணலிங்கம் செய்து வைக்கப்பெற்றுள்ளது.இந்த சொர்ணலிங்கச் சிலையானது காசிக்குச் செல்வதற்கு முன்பாக செட்டிநாட்டின் 76 ஊர்களுக்கும் அப்போதைய காசி நகரச் சத்திரத்தின் தலைவர் கீழச்சீவல்பட்டி CTS. சிதம்பரம் செட்டியார் அவர்களின் தலைமையில் எடுத்துச் செல்ல பெற்று அதன் பிறகு காசி நகரச் சத்திரத்தில் கொண்டு போய் வைக்கப்பெற்றது.

9-11-2015 அன்று காசிநகரச்சத்திர நிர்வாகத்தினரால் லாக்கரில் உள்ள சொக்கத்தங்கம் (24காரட்) தங்கம் 304.530 கிராமில் 99 டச்சுக்கு எடை303 கிராமில்26.350கிராம் செம்பு கலந்ததில் கிடைத்த(22காரட்) தங்கத்தில் 329.350 கிராம் மொத்தத் தங்கத்தில் சேதாரம் 27 கிராம் நீங்கலாக 302.350 கிராம் (22காரட்) தங்கத்தில் 300 கிராம் அளவில் சொர்ண விநாயகரும், மீதமுள்ள 2.350 கிராம் தங்கத்திற்குப் பதிலாக மேற்படி சொர்ண விநாயகருக்கு 257கிராம் அளவில் வெள்ளிப் பீடமும் காசி நகரச் சத்திரம் சார்பில் செய்து வைத்திருக்கிறது. 07-11-2018 புதன்கிழமை

அன்று உலகம்பட்டி சி.லெ.நா.லெ. காசிநாதன் செட்டியார் - உஷா ஆச்சி தம்பதியினரால் செப்புச் சிலையில் தங்கமுலாம் பூசிய அன்னபூரணியும் செய்து வைத்துள்ளார்கள். அத்துடன் பல்வேறு நகரத்தார்களால் பல்வேறு பொருட்கள் உபயமாக வழங்கப்பட்டுள்ளது. விசாலாட்சி அம்மனுடைய உற்சவ விக்கிரகத்திற்குத் தங்கக் கவசமும் வெள்ளி அங்கியும் அணிவிக்கப்படும். இவை நகரத்தார்களால் கொடையாக அளிக்கப்பட்டவை. உற்சவமூர்த்தி ஆகிய விசாலாட்சி அம்மன் விஜயதசமி அன்று குதிரை வாகனத்தில் கோவிலுக்குள் வலம் வந்து அம்பு விடும் நிகழ்வும் நடைபெறுகிறது.

கேதார் காட்டில் உள்ள கேதாரேஸ்வரர் ஆலயத்தில் பரிவாரத்தில் உள்ள மீனாட்சியம்மன் சிலையும் சொக்கலிங்க மூர்த்தி சிலையும் கல்கத்தா வாழ் நகரத்தார்களால் பிரதிட்டை செய்யப்பெற்றது. காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரத்தில் உள்ள நகரேஸ்வரி உடனுறை நகரேஸ்வரர் ஆலயம் தமிழகக் கலைப் பாணியில் கட்டப்பெற்ற மிக மிக அற்புதமான ஆலயம் ஆகும். இங்குள்ள தெய்வத்திருமேனிகள் மிகவும் திருத்தமும் அழகும் வாய்ந்தவை.

நகரேஸ்வரருக்கு முன்பாக இங்குள்ள நந்தீஸ்வரர் பஞ்ச நந்தியாக, பெரிய நந்தியின் முன் கால் பகுதியில் நான்கு நந்திகள் அமைந்திருக்கும்படி அருள்பாலிப்பது இந்த தலத்தின் சிறப்பு ஆகும். இக்கோவிலில் உள்ள அனைத்துச் சிற்பங்களின் முகங்களும் திருத்தமாக அமையப்பெற்றுள்ளன.

தமிழர்கள் எப்பொழுது வேண்டுமானாலும் காசிக்குச் சென்றால் தங்குவதற்கும், தமிழர் உணவை அவர்களுக்கு அளிக்கவும் நம் காசி நகரச் சத்திரம் காசிக்கு வரும் யாத்திரிகர்களுக்கு பேருதவியாகத் திகழ்கிறது. மகாகவி பாரதியின் நினைவுச்சின்னமாகிய அனுமன் காட் அருகில் உள்ள பாரதி சிலையும் இப்பொழுது காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர நிர்வாகத்தின் பராமரிப்பிலேயே இருந்து வருகிறது. 1818ல் கோவிலூரில் துவங்கப்பட்ட கோவிலூர் வேதாந்த மடாலயமானது ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவராலே ஸ்தாபிக்க பெற்று 12-வது மடாதிபதியான ஸ்ரீலஸ்ரீநாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் அவர்களால் காசியிலும் கங்கை கரையில் ஒரு மடம் ஒன்றும் தற்போது உருவாகி இருக்கிறது.

இதுவும் நகரத்தார் சமூகத்தைச் சார்ந்த துறவி ஏற்படுத்திய திருமடமாகும். காசி விஸ்வநாதர் கோயில் பலமுறை படையெடுப்புகளால் தகர்க்கப்பட்டிருக்கிறது. மூன்று முறை இடிக்கப்பட்ட கோயில் காசி விஸ்வநாதர் கோயில். எத்தனை முறை இடித்தால்தான் என்ன, விஸ்வநாதரின் கருணைத் திறத்தின் காரணமாக மறுபடி மறுபடி புதுப் பொலிவுடன் ஆலயம் நிர்மாணிக்கப் பெற்றது. கி.பி1585-ம் வருடம், அக்பரின் வருவாய்த்துறை அமைச்சராக இருந்த தோடர்மால் என்பவரின் உதவியுடன் நாராயண பட் என்பவர்தான் காசி விஸ்வநாதர் கோயிலைக் கட்டினார். ஆனால் 1669-ம் வருடம், ஔரங்கசீப் பீரங்கி மூலம் கோயிலைத் தகர்த்துவிட்டு, ஞானபாபி என்னும் மசூதியையும் கட்டினார். அதன் பிறகு 1779-ம் வருடம், இந்தூர் மகாராணி அகல்யா பாய் ஹோல்கர் என்பவர் ஞான பாபி மசூதிக்கு அருகில் இப்போது இருக்கும் காசி விஸ்வநாதர் கோயிலை எழுப்பினார். அதன் பிறகு, 239 வருடங்கள் 2018 ஆம் வருடம் கடந்த நிலையில், இப்போதுதான் கடந்த ஜூலை மாதம் 5-ம் தேதி காசி விஸ்வநாதர் கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றது.

239 வருடங்கள் கழித்து நடைபெற்றிருக்கும் கும்பாபிஷேகத்தை நகரத்தார் பொருளுதவியுடன் முன்னின்று நடத்தியவர், தமிழகத்தைச் சேர்ந்த வலையபட்டி ஊரினர் மாத்தூர்க் கோவில் - மணலூர் பிரிவினராகிய திரு. சுப்பு சுந்தரம் செட்டியார்

என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களே காசி விஸ்வநாதர் சந்நிதிக் கதவுகள் ஒன்றிற்கு வெள்ளிக்கவசம் செய்து கொடுத்தார்கள். தமிழகத்திலிருந்து 60 வேத பண்டிதர்களை பிள்ளையார்பட்டி பிச்சைக் குருக்கள் தலைமையில் அழைத்துச்சென்று கும்பாபிஷேகத்தைச் செய்தனர். இக்குடமுழுக்கில் பள்ளத்தூர் அ.மு.மு. குடும்பத்தார்கள் பெரும் பங்களிப்பை ஆற்றியுள்ளனர்.

தற்போது காசி கோவிலுக்கு வரும் பக்தர்களுக்கு அன்னம் இடுவதற்காக காசி கோயில் நிர்வாகத்தால் நம்முடைய நாட்டுக்கோட்டை நகரச் சத்திரத்தார் ஏற்பாட்டிலேயே உணவுஅன்னதானமாக இன்றளவும் இடப்படுகிறது. அதன்படி தினந்தோறும் இடையறாமல் சிவத்திருப்பணிகளை காசி நாட்டுக்கோட்டை நகர சத்திரம் 1813-ல் இருந்து தற்போது வரை 212 ஆண்டுகளாகச் செய்து வருகிறது. குறித்த நேரத்தில் சம்போ அனுப்பப்படுவது தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

**நிறைவுரை :** 1942 ஆம் ஆண்டில் 'வெள்ளையனே வெளியேறு' என்ற இயக்கம் நடைபெற்று காசிமாநகரில் கலகங்கள் நிகழ்ந்தன. ஊரடங்குச் சட்டம் போடப்பட்டது. அப்போதும் கூட விதிவிலக்குப் பெற்று சம்போ உரிய நேரத்தில் சென்று வந்தது. இது வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். அவசர காலநிலைப் பிரகடன காலத்திலும் சம்போ உரிய நேரத்தில் காசி விஸ்வநாதர் ஆலயத்திற்குச் சென்றுள்ளது. கங்கை வெள்ளம் நகரச்சத்திரம் வரை சூழ்ந்து நின்ற போதிலும் படகில் சம்போ பொருட்களை வைத்து விஸ்வநாதருக்குப் பூசை நிகழ்த்தப்பட்டிருக்கிறது. மிசா காலத்திலும்ஒரு நாள் கூட இடையறாமல் விசுவநாதருக்கான பூஜைகள் நிகழ்த்தப்பட்டிருக்கிறது. கொரோனா காலத்திலும் ஒரு நாள் கூட இடையறாமல் விசுவநாதருக்கான பூஜைகள் நிகழ்த்தப்பட்டிருக்கிறது. 'கருமமே கண்ணாயினார்' என்னும் வாசகத்திற்கிணங்க நகரத்தார்கள் காசி விஸ்வநாதரைப் பூசித்து வணங்கி உள்ளார்கள். இதனால் நகரத்தார்களை வைத்து காசிமாநகரத்தில் ஒரு பழமொழியே உருவாகி இருக்கிறது. 'பஞ்சாப் மெயில் தவறினாலும் நகரத்தார் சம்போ தவறாது ' என்பதை அப்பழமொழி ஆகும். இதிலிருந்து நாம் அறிவது என்னவென்றால் தமிழகத்தின் தென்கோடி மூலையில் உள்ள செட்டிநாட்டில் இருந்து ராமேஸ்வரத்திற்கு சென்று வழிபட்டு காசியில் விஸ்வநாதரைப் பூசிப்பதற்காக சென்று வரும் நகரத்தார் இனம் தன்னுடைய வாழ்நாளின் மிக முக்கியமான பங்களிப்பை காசியில் ஆற்றி இருக்கிறது. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக காசியோடு தொடர்பு கொண்டு இருக்கிற ஒரு புனிதப் பெருமக்கள் நகரத்தார்கள்! நகரத்தார் திருப்பணியின் சித்திரம்! காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்!.....

இடங்கொண்ட கங்கையவள் எமுந்தோடி அருள்காட்ட<br>
நடங்கொண்ட காட்டிடையே நற்காசிப் பதிவிரும்பி<br>
விடங்கொண்ட மணிமிடற்றர் விசுவேசர் அறபரவும்<br>
திடங்கொண்ட நகரத்தார் திருவறங்கள் வாழியரோ!'

என்ற வித்துவான் பூ. அமிர்தலிங்கனாரின் பாடல் நகரத்தார் அறத்திற்குச் சாட்சியாக நிற்கிறது.

# பதினாறு பேறும் தருபவன்

கவிஞர் தென்னவன்

நீங்காத அன்பும்
நிலையான நல்லறிவும்
நேர்த்திமிகு தேக அழகும்;

நேரான கல்வியும்
நெஞ்சத்தில் வீரமும்
நிற்கின்ற பெருவாகையும்;

பாங்கான நற்புகழும்
பரம் பொருள் தன்னைப்
பணிகின்ற இறையினுணர்வும்;

பதறாத பொறுமையும்
சிதறாத செல்வமும்
பதரிலா விளைபொருள்களும்;

தேங்காதல் ஒழுகுநன்
மக்களும் இளமையும்
தெவிட்டாத நன் நுகர்ச்சியும்;

தெளிவான மகிழ்ச்சியும்
திடமான வாழ்நாளும்
தேறுபதி னாறுபேறும்;

ஆங்காத லாலெமக்
களித்திடத் தென்னவன்
அழைத்திடும் யானை முகனே

அகத்தியன் வணங்கியே
அமைத்திட்ட வலையநகர்
அரசாளும் மலையாண்டியே!

# கணபதி கவசம்

வெ.நா. வெங்கடாசலம் (எ) மாணிக்கம் M.A.,

நீள்முடியும் சென்னியும்
நிகரற்ற நெற்றியும்
நெடியோன் சிலைப்புருவமும்;

நீடுசெவி பார்வைதரு
கண்களும் நாசியும்
நினைவாழ்த்து கின்றவாயும்;

தோள்மேவு கைகளும்
சுந்தரக் களுத்தோடு
தொடர்புள்ள நரம்புயாவும்;

தோதான விலாவோடு
துங்கமிகு நல்வயிறும்
துணிவுகுறை யாதநெஞ்சும்;

நீளுடலைத் தாங்குமிடை
நிலைகொண்ட நற்குறிகள்
நிற்கின்ற பெருங் கால்களும்;

நேர்த்திமிகு உன்கவசக்
காப்பிலே நீள்வயதுன்
நினைவோடு வாழவைப்பாய்!

ஆல்போலத் தழைத்த தமிழ்
தந்திடும் தென்னவன்
அறிவிலுறை யானைமுகனே!

அகத்தியன் வணங்கியே
அமைத்திட்ட வலையநகர்
அரசாளும் மலையாண்டியே!

17.2.2016ஆம் தேதி மலையாண்டி கோயிலில், மலையாண்டி சுவாமிக்கு
தங்கக் கவசமும், வைரப்பட்டையும் அணிவிக்கப்பெற்றது.








கோயிலில் புதிய கல்பெஞ்சுகள்




இது கோயில் கோபுரம் அல்ல.
மார்கழி மாதம் வாசலில் போட்ட
கோலமே...!

# வலையபட்டி நாட்டுக்கோட்டை நகரத்தார் திருமண மண்டபம்

வலையபட்டியில் நகரத்தாருக்குச் சொந்தமான வலையபட்டி நாட்டுக்கோட்டை நகரத்தார் திருமண மண்டபத்தின் திறப்பு விழா ஸ்ரீ பார்த்திப வருடம், தை மாதம் 30ஆம் நாள் (12.02.2006) ஞாயிற்றுக்கிழமை அன்று நடைபெற்றது.

20.09.2003 ஆம் ஆண்டு நகரக் கூட்டத்தில் திருமண மண்டபம் கட்டுவது குறித்து முடிவு எடுக்கப்பட்டது. நாட்டுக்கோட்டை நகரத்தார் திருமண மண்டபம் கட்டுவதற்கான அமைப்புக் குழு ஏற்படுத்தப்பட்டது. தலைவராக திரு. PL.A. சிதம்பரம் அவர்களும், செயலாளராக திரு. PL.M. முத்தையா அவர்களும், ஆலோசகர்களாக திரு. PL.K. குப்பான் செட்டியார் அவர்களும், திரு. T. இராமநாதன் செட்டியார் அவர்களும், திரு. V.RM.A. இராமநாதன் செட்டியார் அவர்களும், திரு. S.M. நடராஜன் செட்டியார் அவர்களும், உறுப்பினர்களாக திரு. பழ.சி. ஜெயங்கொண்டான் அவர்களும், திரு. VD. கண்ணன் அவர்களும், திரு. RM. அண்ணாமலை அவர்களும், திரு. Agri SP. சொக்கலிங்கம் அவர்களும், திரு. AL. இராமநாதன் செட்டியார் அவர்களும், திரு. P.K.T. சிங்காரம் செட்டியார் அவர்களும், திரு. PL.K. பழநியப்பன் அவர்களும், திரு. PL.C. நாச்சியப்பன் அவர்களும், ஆர்க்கிடெக்ட் Er. திரு. மு. பெரியண்ணன் M.Arch., அவர்களும், பொறியாளர் Er. திரு. சுப்பிரமணியன் BE., அவர்களும் ஆகியோர் தேர்வு செய்யப்பட்டனர்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் திருமண மண்டப அமைப்புக் குழுவின் செயற்குழு உறுப்பினர்களில் ஒருவரான பழ.சி. ஜெயங்கொண்டான் செட்டியார் அவர்கள் மேற்பார்வையில் மண்டபம் இனிதே கட்டப்பெற்றது. திருமண மண்டபத்தை உச்ச நீதிமன்ற நீதியரசர் திரு. AR. லெட்சுமணன் அவர்கள் திறந்து வைத்தார்கள். (செய்தி ஆதாரம் : வலையபட்டி அருள்தரு. மலையாண்டி சுவாமி கோயில் ஆறாவது குடமுழுக்கு விழாச் சிறப்பு மலர் – 2008)



# முன்னோர்கள் எது செய்தாலும் அதில் ஒரு அர்த்தம் இருக்கும்

### 1. தேங்காய்

தேங்காயின் நற்குணங்கள் ஏராளம் குடலில் உள்ள புண்கள் குணப்படுத்துவதும், உடலுக்குத் தேவையான நல்ல கொலஸ்ட்ராலை கொடுக்கிறது. எலும்புக்குத் தேவையான எண்ணெய் உற்பத்தி செய்வதற்கும், நீண்ட நாள் வாழ்வதற்கு ஏற்ற பொருளாக பயன்படுகிறது. உடலில் நமக்கு எதிர்ப்பு சக்தியை கொடுக்கும் இரத்தத்தில் உள்ள வெள்ளை அணுக்களை அதிகரிக்கிறது. இறைவனுக்குப் படைக்கப்பட்ட பின், அதை வாங்கிக் கூறு போட்டு நாம் சாப்பிட்டு, மற்றவர்களுக்கும் உறவினர்களுக்கும் கொடுத்து உண்ண செய்தல் வேண்டும்.

### 2. வாழைப்பழம்

இது மிகச் சிறந்த பழம். புற்று நோயைக் கூடக் குணப்படுத்தும் வல்லமை கொண்டது. குடல், வயிற்றில் உள்ள தேவையில்லாத கழிவுகளை வெளியேற்றிச் சுத்தம் செய்யும் தனித்தன்மை வாய்ந்தது. உடலுக்கு உடனடியாக ஆற்றலைக் கொடுக்கும். இதையும் இறைவனுக்குப் படைத்த பின் நாமும், சுற்றத்தார், உறவினர் நண்பர்களுக்கு கொடுத்து உண்ணச் செய்யலாம்.

### 3. எலுமிச்சை பழம்

அதுவும் சிறந்த பழம். உடல் ஆரோக்கியத்திற்கு மிகவும் நல்லது. தண்ணீரில் பிழிந்து உப்பு அல்லது இனிப்பு போட்டு குடிக்கலாம். புத்துணர்ச்சியைக் கொடுக்கும். சுடுதண்ணீரில் சிறிது எலுமிச்சையை பிழிந்து குடிக்க தேவையில்லாத கழிவுகள் வெளியேறும். கொலஸ்டிரால் குறையும்.

### 4. வெற்றிலை

வெற்றிலை மிக மிக சிறந்த மருத்துவப் பொருள். உடலில் இரத்த ஓட்டத்தை அதிகரிக்கும். வைரஸ் தடுக்கக்கூடியது. அதனால் நம் முன்னோர்கள் கூட்டம் கூடும் திருமணம் மற்றும் துக்க இடங்களில் வெற்றிலை வைத்திருப்பார்கள். சாப்பாட்டிற்குப் பிறகு 2 வெற்றிலை, 3 கிராம்பு, 5 மிளகு, சிறிது சர்க்கரை அல்லது தேன் வைத்து வெற்றிலை போடும் போது சளி இருமல் மற்றும் வைரஸ் குணமாகும்.

பெண்கள் கழுத்தில் அணிவதற்குக் காரணமே அதன் மருத்துவ வலிமை தான். மஞ்சள் மருத்துவம் ஏராளம். உடலில் உள்ள புண்களைக் குணப்படுத்தும். உடம்பிற்குக் கெடுதல் ஏற்படுத்தும் செல்களை அழிக்கும் சக்தியாக செயல்படுகிறது. புற்றுநோய் செல்களை தடுக்கும் ஆற்றல் மஞ்சளுக்கு உண்டு.

சிந்தியுங்கள் தோழர்களே. அதன் பயன்பாடு, மருத்துவ குணங்கள் அறிந்து உண்ணுங்கள்.

மருத்துவப் பொருள்களை வீணடிக்க வேண்டாம். அதே சமயத்தில் மருத்துவ பொருள்களை அளவாக பயன்படுத்துவது நல்லது. அளவுக்கு மீறினால் அமிர்தம் நஞ்சு என்பது நாம் அறிந்ததே. ■

# WHO IS A TEACHER

**L. MEENAKSHI LAKSHMANAN** M.A., B.Ed.,
Assistant Headmaster (Rtd.,)
Valayapatti.

1). A Teacher is not an advocate to charge for his words

2). Teacher is not a Business man to earn profit.

3). Teacher is not a Doctor to collect fees to attend.

4). Teacher is not an Engineer to calculate and measure everything.

5). Teacher is not a Police man to catch mischieves.

6). Teacher is not a Priest to curse the crime pupils.

7). Teacher is not a Jailor to imprison them in class room

8). Teacher is not a soldier to make adventures.

9). Teacher is not a merchant to get gain.

10). Teacher is not a Banker to keep everything safe.

11). But Teacher is a service man who sacrifices for others.



அருள்மிகு ஸ்ரீமலையாண்டி விநாயகர்
வெள்ளி அங்கி அலங்காரத்துடன்

